உ
சிவமயம்

# ஸ்ரீ மஹாபாரத வினாவிடை

**(மூன்றாம் பாகம்)**

**சாந்தி, அனுசாஸன, அச்வமேத, ஆச்ரமவாஸிக, மௌஸல, மஹாப்ரஸ்தான, ஸ்வர்க்காரோஹண பர்வங்களடங்கியது.**

மயிலாப்பூர், பி. எஸ். ஹைஸ்கூல்
முதல் உதவிபோதகரான
**ஆ. ஸீ. கஸ்தூரிரங்கய்யர்**, பி. ஏ., எல். டி.
அவர்கள் இயற்றியது.



(Approved by the Text-Book Committee.)

சென்னை :
**வி. ராமஸ்வாமிசாஸ்த்ருலு அண்ட் ஸன்ஸ்**
292, எஸ்பிளனேட், சென்னை.
1933

## அட்டவணை


| நெ | விஷயம் | வினாக்கள் | பக்கம் |
|---|---|---|---|
| 12 | சாந்தி பர்வம் | 136 | 5 |
| | (i) ராஜ தர்மம் | 44 | 25 |
| | (ii) ஆபத் தர்மம் | 47 | 43 |
| | (iii) மோக்ஷ தர்மம் | 56 | 51 |
| 13 | அனுசாஸன பர்வம் | 61 | 73 |
| 14 | அசுவமேத பர்வம் | 42 | 98 |
| | அனுகீதை | 45 | 101 |
| 15 | ஆசிரமவாஸிக பர்வம் | 18 | 112 |
| 16 | மௌஸல பர்வம் | 11 | 119 |
| 17 | மஹாப்பிரஸ்தான பர்வம் | 5 | 123 |
| 18 | ஸ்வர்காரோஹண பர்வம் | 7 | 125 |
| | அனுபந்தம் | | |
| | (i) மஹாபாரதக் கருத்து | ... | 128 |
| | (ii) மஹாபாரத உட்பொருள் | ... | 131 |
| | (iii) கதைகளின் அகராதி | ... | 140 |
| | (iv) பெயர் அகராதி | ... | 143 |

## குறிப்பு

சாந்தி அனுசாஸன பர்வங்கள், அறிய தர்ம விஷயங்களையும் அவைகளை விளக்க ஏற்பட்ட கதைகளையும் அடக்கியுள்ளன. ஆதலால் இவை யிரண்டிற்கும் விஷய அகராது ஒன்று இங்கு அமைக்கப்பட்டிருக்கிறது. முதல் தரம் வாசிப்போர் களும் கதையை மாத்திரம் கவனிப்போர்களும் இவ்விரண்டு பர்வங்களையும் பெரும்பாலும் விட்டு விடலாம். பின்னர் ஸாவகாசமான வேளைகளில் இவைகளை மாத்திரம் வேறாகப் படித்துத் தர்ம ரஹஸ்யங்களை உணர முயலலாம். வாசிப்பவர் ஸஹாயத்துக்காக மூன்று பாகங்களுடைய அநுபந்தம் ஒன்று இப்புத்தகத்தின் இறுதியில் சேர்க்கப்பட்டிருக்கிறது. மஹாபாரத உட்கருத்து எழுதும் விஷயத்தில் மதராஸ், ஸம்ஸ்கிருத காலேஜ், ப்ரின்ஸிபால், ஸ்ரீ மஹாமஹோபாத்யாய **ரா. சந்திரசேகர சாஸ்திரிகள்** அவர்கள் செய்த பேருதவியை இங்கு யான் எடுத்துப் பாராட்டவேண்டியது அவசியமே.

ஸ்ரீ க்ருஷ்ணாய பரப்ரஹ்மணே நம:

# 12. சாந்தி பர்வம்

*ஆழாழி கரையின்றி நிற்கவிலை யோகொடிய*
*ஆலமமு தாக விலையோ?*
*அக்கடலின் மீதுவட வனல் நிற்க வில்லையோ?*
*அந்தரத் தகில கோடி*
*தாழாமல் நிலைநிற்க வில்லையோ? மேருவுந்*
*தநுவாக வளைய விலையோ?*
*ஸப்தமே கங்களும் வஜ்ரதரன் ஆணையில்*
*சஞ்சரித் திடவில்லையோ?*
*வாழாது வாழவே யிராமனடி யாற்சிலையும்*
*மடமங்கை யாகவிலையோ?*
*மணிமந்த்ர மாதியால் வேண்டுஸித் திகளுலக*
*மார்க்கத்தில் வைக்க விலையோ?*
*பாழான வென்மனங் குவியவொரு தந்திரம்*
*பண்ணுவ துனக் கருமையோ ?*
*பார்க்குமிட மெங்குமொரு நீக்கமற நிறைகின்ற*
*பரிபூர ணாநந்தமே!*

# சாந்தி அனுசாஸன பர்வ,

## விஷய அகராதி


| .எண் | விஷயம் | வினா |
|---|---|---|
| 1 | அத்யாத்ம விஷயம் | 90 |
| 2 | அஹிம்ஸா யாகம் | 116 |
| 3 | அஹிம்ஸை பரமதர்மம் | 109 - 111 |
| 4 | ஆபத்காலத்தில் ஸுகம் பெறும் வழி | 68 |
| 5 | ஆபத் தர்ம ரஹஸ்யம் | 72 |
| 6 | ஆபத்தில் அநீதி புண்யம் | 67 |
| 7 | ஆபத்திற்கு பாபமில்லை | 71 |
| 8 | ஆச்ரமங்களுக்கேற்ற காலம் | 11 |
| 9 | உஞ்சவ்ருத்தியின் சிறப்பு | 136 |
| 10 | உண்மையின் சிறப்பு | 78 |
| 11 | உத்யோகம் கொடுப்பது யோக்யதைப் பற்றியே | 59 |
| 12 | உபமன்யூவின் உபதேசம் | 18 |
| 13 | உலகவழி | 11 |
| 14 | எண்ணம் நிறைவேறாதவன் ஸுகம் பெறும்வழி | 99 |
| 15 | எதிர்பார்க்காதே | 62 |
| 16 | எதிரிகளை நடத்தும் விதம் | 25 |
| 17 | க்ருஹஸ்தாச்ரமச் சிறப்பு | 11 |
| 18 | கடமை கடைப்பிடி | 11 |
| 19 | கர்த்ருத்வம் | 98 |
| 20 | கர்மங்களின் பலன் | 95 |
| 21 | கர்வப்படக்காரணமே இல்லை | 107 |
| 23 | கருணை: ஸ்ரூபம், வளரும்விதம் | 34 |
| 24 | காலபலம் | 11 |
| 25 | குசிகர் பொறுமை | 36 |
| 26 | குழப்பம் அடக்கும் விதம் | 33 |
| 27 | கொடியவர் குணம் | 79 |
| 28 | கொடைகளின் விதம் | 53 |
| 29 | சித்த ஸமாதானம் பெறும்வழி | 85 |
| 30 | சுருசுருப்பு | 56 |
| 31 | ஞானத்தின் ஸ்வரூபம் | 94 |
| 32 | ஞானமும் ஸுகமும் பெறும்வழி | 88 |
| 33 | ஞானியின் வாழ்க்கை | 91 |
| 34 | ஜபங்களின் பலன் | 92 |
| 35 | ஜயக்குறிகள் | 49 |
| 36 | ஜாதிக் கலப்பு | 33 |
| 37 | ஜாதி தர்மம் | 22 |
| 38 | ஜாஜலி கதை | 106 - 110 |

| | | |
|---|---|---|
| 39 | தண்டனையின் சிறப்பு | 26 |
| 40 | தபஸின் ஸ்வரூபம் | 97 |
| 41 | தர்மங்களின் ஸாரம் | 77 |
| 42 | தர்மத்தின் சிறப்பு | 61, 115 |
| 43 | தர்மத்தின் ஸ்வரூபம் | 105 |
| 44 | தர்மம் நிலை குலையும் விதம் | 32 |
| 45 | தர்மபுத்ரர் சோகம் | 11, 31, 2 |
| 46 | தான தர்மங்களில் சிறந்தவை | 37 |
| 47 | தானம் யாகம் | 38 |
| 48 | தான விஷய எச்சரிக்கை | 39 |
| 49 | திருப்தியின் பெருமை | 11 |
| 50 | தீர்க்காலோசனை | 112 |
| 51 | தீர்த்தங்கள் | 47 |
| 52 | துக்கத்தின் காரணம் | 76 |
| 53 | துக்க நிவர்த்தி | 11 |
| 54 | ந்யாயராஜ்யபாரம் | 27 |
| 55 | நடந்தது நடந்ததே | 11 |
| 56 | நம்பக்கூடிய விஷயங்கள் | 87 |
| 57 | நல்வழி | 82 |
| 58 | நன்றி கொல்பவர் கதி | 80 |
| 59 | நாராயண பக்தி | 134 |
| 60 | நேர்மை | 11 |
| 61 | ப்ரஜைகள் தர்மம் | 23 |
| 62 | ப்ரஜைகள் நம்பிக்கை கிடைக்கும் வழி | 25 |
| 63 | ப்ரஜைகளை ஸுகப்படுத்தல் | 22 |
| 64 | ப்ராஹ்மண ஒழுக்கம் | 50 |
| 65 | ப்ராஹ்மணராவது | 5 - 8 |
| 66 | ப்ராஹ்மணரும் தர்மம் குலையும் காலமும் | 65 |
| 67 | ப்ராஹ்மண பேதம், மரியாதை | 32 |
| 68 | ப்ராஹ்மணர்கள் சிறப்பு காரணம் | 28 |
| 69 | ப்ராஹ்மண விரோதம் | 29 |
| 70 | பகுத்தறிவு பெரியோர் சிறியோரைப் | 55 |
| 71 | பகை உள் வெளி | 38 |
| 72 | பசுவின் மேன்மை | 35 |
| 73 | பணக்காரனும் ஏழையும் | 83 |
| 74 | பணம் கிடைக்காதவன் ஸுகம் பெறும் வழி | 84 |
| 75 | பதிவ்ருதா லக்ஷணம் | 52 |
| 76 | பராதீன வ்யவஹாரம் | 11 |
| 77 | பரிவார லக்ஷணம் | 39 |
| 78 | பலவான் கோபத்தைத் தணிக்கும் வழி | 75 |

| | | |
|---|---|---|
| 79 | பக்ஷபாதத்தின் கேடு | 135 |
| 80 | பாபம், அறியாமற்செய்தது | 74 |
| 81 | பாபம் ஒருபுறம் பழி ஒருபுறம் | 3 |
| 82 | பாபங்கள், ப்ரஹ்மஹத்திக்கு ஸமமான | 22 |
| 83 | பாபத்தின் காரணம் | 76 |
| 84 | புண்யம் தோழன், பாபம் விரோதி | 48 |
| 85 | புண்ய பாப பலன் | 49 |
| 86 | புத்திக்கலக்கம் | 11 |
| 87 | புருஷார்த்தங்கள் | 60 |
| 88 | புரோஹிதச் சிறப்பு | 30 |
| 89 | புரோஹித லக்ஷணம் | 36 |
| 90 | பொதுக்கஷ்ட நிவர்த்தி | 54 |
| 91 | மந்திரி லக்ஷணம் | 37 |
| 92 | மரணம் ஜெயிக்கும் விதம் | 4 |
| 93 | மரணம் ஸஹஜம் | 11 |
| 94 | மனஸ்தாபகால நடவடிக்கை | 70 |
| 95 | மனிதன், நிலை | 104 |
| 96 | மனிதன், பரதந்த்ரன் | 1 |
| 97 | மஹான்களும், அதிகாரிகள் அவமதிப்பும் | 58 |
| 98 | மார்க்கங்கள், இஹபரஸுகம் அடைய | 114 |
| 99 | மார்க்கங்கள், கர்ம ஞான | 11 |
| 100 | மானஸ யுத்தம் | 11 |
| 101 | மூமுக்ஷு செய்யும் ஆராதனம் | 132 |
| 102 | மோக்ஷம் அடையும் வழி | 96 |
| 103 | மோக்ஷ ஸாதனம் | 126 |
| 104 | யுத்தமுறைகள் | 45 |
| 105 | யுத்த ஸந்நாகம் | 48 |
| 106 | யோக ஸாங்க்யம் | 118 |
| 107 | யோகஸாரம் | 119 |
| 108 | ராஜ்ய தந்த்ரம் | 40 |
| 109 | ராஜ்யம் ஆளுதல் | 42 |
| 110 | ராஜ்ன் ஆத்ம ரக்ஷை | 44 |
| 111 | ராஜன் உத்பத்தி சிறப்பு | 21 |
| 112 | ராஜன் ஆபத்கால நடவடிக்கைகள் | 51 |
| 113 | ராஜனாக உரியவர் நல்லோரே | 31 |
| 114 | ராஜனும் அஹிம்ஸையும் | 113 |
| 115 | ராஜனும் குழப்பகாலமும் | 35 |
| 116 | ராஜன் சிறப்படையும் வழி | 22,26,46 |
| 117 | ராஜதர்மச் சுருக்கம் | 63 |
| 118 | ராஜ தர்மம் | 22 |

| | | |
|---|---|---|
| 119 | ராஜன் தெய்வமே | 52 |
| 120 | ராஜன் நம்பும் விதம் | 37 |
| 121 | ராஜன் விலக்க வேண்டியவை | 22 |
| 122 | ராஜன் ஸொந்தத்தொழில்கள் | 52 |
| 123 | ராஜனும் தர்மம் குலைந்தகாலமும் | 66 |
| 124 | ராஜனும் பலமான விரோதியும் | 57 |
| 125 | ராஜனும் ஸந்யாஸிகளும் | 41 |
| 126 | ராஜாவின் நடவடிக்கை | 21 |
| 127 | வரி அதிகமாக வாங்கும் விதம் | 43 |
| 128 | வாழ்க்கை தர்மமும் முடிவும் | 11 |
| 129 | வானப்ரஸ்தச் சிறப்பு | 11 |
| 130 | வியோக துக்கம் நீக்கும் வழி | 81 |
| 131 | விரோதிகளை நடத்தும் விதம் | 50 |
| 132 | விரோதிகள் அநேகரைத் தடுக்கும் விதம் | 69 |
| 133 | விவாகம் ஜிதேந்த்ரியனுக்கே | 21 |
| 134 | விஷ்ணு ஸஹஸ்ரநாமம் | 55 |
| 135 | விஷயம் துச்சம், ஆசைக்கு முடிவில்லை | 11 |
| 136 | வீரர் கதி | 47 |
| 137 | வேத ரஹஸ்யம் | 102 |
| 138 | வேதாந்தானுஷ்டான முறை | 63 |
| 139 | வேவுகாரர் லக்ஷணம், குணம் | 25 |
| 140 | வைதீக கர்மங்களின் நோக்கம் | 93 |
| 141 | வைராக்ய தூஷணம் | 11 |
| 142 | சிராத்த விதிகள் | 23 |
| 143 | சரணாகத ரக்ஷணம் | 73 |
| 144 | சிவ மஹத்வம் | 20 |
| 145 | சிவாராதனம், கிருஷ்ணனால் | 17 |
| 146 | சிவத்தின் சிறப்பு | 16 |
| 147 | சிவ ஸஹஸ்ரநாமம் | 19 |
| 148 | சுகப்ரஹ்மம் கதை | 122 - 131 |
| 149 | ஸ்ருஷ்டி இருவிதம் | 101 |
| 150 | ஸ்ருஷ்டி விஷயம் | 89 |
| 151 | ஸத்யாஸ்த்ய விவேகம் | 53 |
| 152 | ஸந்தேஹ ஆத்மா பிழைக்கும் வழி | 117 |
| 153 | ஸந்யாஸம் | 121 |
| 154 | ஸமாதான முறை | 64 |
| 155 | ஸாங்க்யஸாரம் | 120 |
| 156 | ஸுகம்நிலைக்கும் வழி | 100 |
| 157 | ஸுகம்பெறும் வழி | 86 |
| 158 | க்ஷத்ரிய விரோதம் ப்ராஹ்மணநிலை | 34 |

ஸ்ரீ

# ஸ்ரீமஹா பாரத வினாவிடை

**ஸ்ரீ கிருஷ்ணாய பரப்ரஹ்மணே நம:**

## 12. சாந்தி பர்வம்

**வினா** 1.- இந்தப் பர்வத்திற்கு இப்பெயர் வருவானேன்?

விடை.- மஹாபாரத யுத்தத்தால் தர்மபுத்ரருக்கு ஏற்பட்ட துக்கம் சாந்தி பெற்று அவர் ஸுகமாக முன் போல ஸந்தோஷசித்தராய் ராஜ்யம் ஆளுவதற்காக அவர் தம்பிமாரும், ஸ்ரீகிருஷ்ண பரமாத்மாவும், மற்று முள்ள ரிஷிகளும் கூறிய உபதேச மொழிகளையும், முக்யமாக தர்மபுத்ரர் மனத்தை நன்றாகச் சாந்தப் படுத்திய பீஷ்மரின் விரிந்த உபதேசத்தையும் இப்பர்வம் அடக்கி உள்ளது. ஆகையால் இப்பர்வத்திற்குச் **சாந்திபர்வம்** என்ற பெயர் இடப்பட்டது.

**வினா** 2.- ஜலதர்ப்பணங்கள் செய்து முடிந்ததும் பாண்டவர்கள் என்ன செய்தார்கள்? தர்மபுத்ரர் மனோ நிலை எவ்வாறிருந்தது?

**விடை.**- தர்ப்பணாதிகள் செய்து முடிந்ததும் ஹஸ்தினாபுரத்திற்கு வெளியில் கங்கைக்கரையில் பாண்டவர்கள் இருப்பதாகத் தீர்மானித்தார்கள். நாம் ராஜ்யம் பெற இவ்வளவு உறவினர்களைக் கொல்லும்படி நேர்ந்ததே என்று துக்கித்துக் கொண்டிரு ந்த தர்மபுத்ரருக்குத், தமது தமையனான கர்ணனைத் தாமே கொல்லும்படி நேர்ந்ததே என்ற துக்கம் அதிகமாகக் கிளம்பி மிகுந்த வருத்தத்தை உண்டாக்கியது. நாம் எவ்வளவு தான் தர்மமாக நடந்து கொண்ட போதிலும் கொடிய துர்யோதன னுக்கு உறவினர்கள் மத்தியில் அரசாளக்கிடைத்தது போன்ற பாக்யம் நமக்குக் கிடைக்க வில்லையே என்ற ஏக்கம் தர்மபுத்ரர் மனதைக் கவிந்து கொண்டது. உற்று நோக்கில் தர்மபுத்ரர் குருக்ஷேத்ர யுத்தத்தில் வெற்றி பெற்றதும், தமது சித்தஸமா தானத்தை இழந்து விட்டார்.

**வினா** 3. - இந்த ஸமயத்தில் யார் அவரைப்பார்க்க வந்தது? அவர்களிடம் தமது துக்கத்தை தர்மபுத்ரர் எவ்வாறு தெரிவித்துக் கொண்டார்? அவர்கள் எவ்வாறு தேற்ற முயன்றனர்?

**விடை.**- நாரதர் முதலிய ரிஷிகள் தர்மபுத்ரரை இந்தத்துக்க ஸம்பத்தில் பார்த்துத் தேற்றவந்து, அவரைச் சூழ்ந்து உட்கார்ந்து கொண்டார்கள். அப்பொழுது தர்மபுத்ரர் நாரதரை நோக்கி, 'எனக்கு ராஜ்யம் வரவேண்டும் என்று நான் எவ்வளவு கொடிய கார்யத்தைச் செய்யும்படி நேர்ந்து விட்டது! மேலும் என் தமையனான கர்ணனை என் தம்பி அர்ச்சுனன் கொல்லும்படியாயிற்றே! இதென்ன விபரீதம்! கர்ணனிருந்தால் எங்களுக்கு எவ்வளவு பலம். துர்யோதனன், ஸபையில் கூறிய

கொடிய வார்த்தைகளால் உண்டான கோபங்கள் எல்லாம் கர்ணனைப்பார்த்த மாத்திரத்தில் தீர்ந்து கொண்டிருந்தது. அவன் காலைப்பார்த்தால் குந்தி காலைப் போல இருந்தது. குந்திக்கும் கர்ணனுக்கும் என்ன ஸம்பந்தம் என்று என்னால் ஆன மட்டும் யோஜித்துப் பார்த்தேன். ஒன்றும் எனக்குப் புலப்பட வில்லை. ஜலதர்ப்பண ஸமயத்தில் தான் குந்தியின் வாக்கால் இது எனக்குத் தெரியவந்தது. கர்ணனைப் போன்ற பராக்கிரமசாலியும் ஸ்த்யஸந்தனும் உண்டோ? இப்படி இருந்தும் இவனுக்கு மரணகாலத்தில் தேர் புதைந்து போதல் முதலிய ஆபத்துக்கள் வருவானேன்?' என்று அடிக்கடிக் கூறி தர்மபுத்ரர் துக்கித்தார். அப்பொழுது நாரதர் கர்ணனது சரித்திரத்தைக் கூறித் தர்மபுத்ரரைத் தேற்றத் தொடங்கினார்.

**வினா** 4.- இந்தக் கர்ணன் யார்? முதலில் இவன் எவ்வாறு வளர்ந்து வில் வித்தை பயின்றான்?

**விடை.-** இக்கர்ணன் குந்திக்குக் கன்னிகைப் பர்வத்தில் ஸூர்யனது அநுக்கிரஹத்தால் உண்டானபிள்ளை. இவன் பிறந்ததும் குந்தி இவனை ஓர் பெட்டியுள் வைத்து அதன் அடியில் குழந்தைக்கு மெத்தென்று இருப்பதற்காக ஓர் புடைவையும் வைத்துப் பெட்டியைப் பூட்டி ஆற்றோடு விட்டு விட்டாள். இந்தப் பெட்டி த்ருதராஷ்டிரன் ஸாரதி கையில் அகப்பட அவன் வீட்டில் குழந்தை வளர்ந்து வந்தான். (**ஆதிபர்வம் வினா 75-ஐப் பார்க்க**) அப்பொழுது துரோணாசாரியரிடம் வில்வித்தை பயின்று வருகையில் கர்ணன் அவரிடம் ஏகாந்தமாகக் சென்று தனக்குப் பிரஹ்மாஸ்திரம் கற்றுக்கொடுக்கவேண்டும் என்று கேட்டான்.

**வினா** 5.- அதற்குத் துரோணர் என்ன சொன்னார்? மேல் கர்ணன் என்ன செய்தான்?

**விடை.-** "பிரஹ்மக்ஷத்ரியர்களே இந்த அஸ்திரத்தைத் தெரிந்து கொள்ளத் தக்கவர்கள், நீயோ ஸாரதிபுத்ரன். உனக்கு எவ்வாறு கற்றுக்கொடுப்பது,' என்று மெதுவாக அர்ச்சுனன் பேரிலிருந்த பக்ஷபாதத்தால் துரோணர் பதில் சொல்லி விட்டார். உடனே கர்ணன் பரசுராமரிடம் வில்வித்தை பயிலவந்தான். அப்பொழுது தான் தன் சிஷ்யரான பீஷ்மர் தன்வார்த்தையைக் கேட்காது. தன்னைத்தோற்கடிக்க, க்ஷத்ரியர்களுக்கே வில்வித்தை சொல்லிக்கொடுப்பதில்லை என்ற சபதம் கொண்டு பரசுராமர் இருந்த காலம். கர்ணன், தான் ஓர் பிராஹ்மணன் என்று சொல்லி அவருக்கு சிஷ்யனாக அமர்ந்தான்.

**வினா** 6.- இதனால் கர்ணனுக்கு யாரால் எவ்வாறு என்ன பிரமாதம் விளைந்தது?

**விடை.-** கர்ணன் தனது வித்தையால் பரசுராமரைத்திருப்தி செய்து அவரிடமிருந்து ஸகல அஸ்திர வித்தைகளையும் கற்றுவந்தான். இப்படி இருக்கையில் ஒரு நாள் பாசுராமர் கர்ணன் தொடையில் தலைவைத்துத் தூங்கத் தொடங்கினார். அப்பொழுது ஓர் புழு கர்ணன்தொடை யண்டை வந்து அதைத் தொளைக்கத் தொடங்கியது. கர்ணன் வலியை ஸஹித்துக்கொண்டு குருவுக்குத்

தூக்கம் கலையாமல் இருக்கும்படி அசையாதிருந்தான். இவன் தொடையிலிருந்து வந்த ரத்தம் பரசுராமர் மேல்பட அவர் விழித்து நோக்கினார். நடந்தகாரியம் தெரியவர கர்ணனை நோக்கி "பிராஹ்மணன் இவ்வளவு நோயைப் பொறுக்கவே மாட்டான். ஆகையால் நீ பிராஹ்மணனல்ல. உண்மையைக்கூறு" என்று கேட்க, கர்ணன் தான் ஸூதஜாதி என்று சொன்னான். உடனே தன் விருதம் இவ்வாறு பங்கமானது கண்டு கோபம் கொண்டு, 'உனக்குச் சாகுங் காலம் வரும் பொழுது தான் இந்த பிரஷ் மாஸ்திரம் உனக்குப் புலப்படும். நீ சொன்ன பொய்க்கு இதுதான் தண்டனை போகலாம்' என்று சொன்னார்.

**வினா** 7.- கர்ணனுக்கும் துர்யோதனனுக்கும் எவ்வாறு ஸ்நேஹம் அதிகப் பட்டது?

**விடை.**- கர்ணன் பரசுராமரிடமிருந்து வந்ததும் துர்யோதனனிடம் வந்து சேர்ந்தான். இப்படி இருக்கையில் ஒரு நாள் கர்ணன் பீஷ்மர் முதலியோர் சூழ துர்யோதனன் கலிங்க தேசாதிபதியின் ஸ்வயம்வரத்திற்குப் போய் அங்கிருந்து அழகிய அவன் பெண்ணைத் தன் தேரில் தூக்கி வைத்துக் கொண்டு அவளுக்காக வந்த அரசர்களோடு சண்டை செய்யத் தொடங்கினான். அப்பொழுது கர்ணன் இவனுக்கு ஸஹாயமாக இருந்து அரசர்களைத் தோற்கடித்தான். இதனால் இவர்கள் இருவருக்கும் ஸ்நேஹம் அதிகரித்தது.

**வினா** 8.- இதன் பின்னர் கர்ணன் பராக்ரமம் எவ்வாறு வெளிப்பட்டது?

**விடை.**- துர்யோதனனை ஹஸ்தினாபுரம் அனுப்பிவிட்டு அந்த ஸ்வயம்வர மண்டபத்தில் கர்ணன் வெற்றியோடு நிற்குங்கால், **ஜராஸந்தன்** அவனோடு சண்டைக்கு வந்தான். இருவரும் மல்லயுத்தம் செய்ய அதில் கர்ணன் வெகு லாகவமாக ஜராஸந்தன் காலைப்பற்றியிழுத்து அவனைக்கிழித்தான். அவன் தேஹம் ஜரையின் அனுக்கிரஹத்தால் முன் போலச்சேர்ந்து கொண்டது. (**ஸபா பர்வம்** பார்க்க) உடனே ஜராஸந்தன் கர்ணன் பலத்தைக் கண்டு மெச்சிக்கொண்டு அவனுக்கு **மாலினி** என்ற ஒரு பட்டணத்தைக் கொடுத்தான். இதன் முன்னரே ஆயுத பரீக்ஷை ஸமயத்தில் (**ஆதிபர்வம்** பார்க்க) துர்யோதனனால் அங்க தேசாதிபதியாக ஆக்கப்பட்ட இவன் இவ்வாறு துர்யோதனனுக்கே ஸஹாயம் செய்து வந்தான்.

**வினா** 9.- இவ்வளவும் கூறி நாரதர் எவ்வாறு தர்மபுத்ரரைத் .தேற்றினார்?

**விடை.**- இவ்வளவையும் கூறிவிட்டு 'கர்ணனோபராக்ரமசாலி, அவனைக் கொல்ல யாவரால் முடியும்? அநேக காரணங்கள் ஒன்று சேர்ந்ததால் தான் அவன் இறக்கும்படி நேர்ந்தது. தேவேந்திரன் கவச குண்டலங்களை அவனிடம் இருந்து மாயமாக அபஹரித்தது, பிராஹ்மண சாபம், பரசுராமர் சாபம், குந்திக்குக் கொடுத்த வாக்குத்தத்தம், இந்திரன் மாயை, பீஷ்மர் அவனை அர்த்தரதருள் பகுத்துக்கூறி அவமதித்தது, சல்லியனது கொடூரவார்த்தைகள், பகவானது சக்தி ஆகிய இவைகளால் அவன் இறந்தானே யொழிய உங்களால் அவனைக்கொல்ல முடியுமா?

வீணாக நீர் கொன்றுவிட்டதாக எண்ணித் துக்கிக்காதேயும்" என்று நாரதர் தர்மபுத்ரரைத் தேற்றினார்.

**வினா** 10.- இந்த ஸமயத்தில் தர்மபுத்ரர் மனதை யார் எவ்வாறு கலக்க, என்ன நேர்ந்தது?

**விடை**.- இந்த ஸமயத்தில் தர்மபுத்ரர் துக்கம் அதிகரிப்பதைக் கண்டு குந்தி முன்வந்து 'என்னாலானமட்டும் பார்த்து விட்டேன், ஸூர்யபகவானும் பார்த்தார். ஒன்றும் அந்த முரட்டுத்தனமான கர்ணன் விஷயத்தில் பயன்படாமல் போய் விட்டது. கர்ணன் துர்யோதனனை விட்டு உன்னிடம் வரமாட்டேன் என்று ஸ்திரமாக இருந்துவிட்டான். இதனால் நானும் அக்கொடியவனைக் கவனிக்காது விட்டு விட்டேன். நீ ஏன் இப்படி இன்னும் வருந்துகிறாய்' என்று கேட்க, தாயின் கொடுமையைக் கண்டு தர்மபுத்ரர் மனம் பரிதவித்தது. மிகுந்த துக்கத்துடன் தாயை நோக்கி 'நீ இவ்விஷயங்களை ரஹஸ்யமாக வைத்துக் கொண்டிருந்தபடியால் அல்லவா நாங்கள் தமையனைக் கொன்ற பாதகர்களானோம். இனி ஸ்திரீகளிடம் ஓர் ரஹஸ்யமும் தங்காமல் இருக்கட்டும்?' என்று கூறித் தமக்கு ராஜ்யமாளப் ப்ரியமில்லை என்று ஏக்கம் பிடித்தவர்போல் உட்கார்ந்து விட்டார்.

**வினா** 11.- தர்மபுத்ரர் மனோநிலை விஷயமாக என்ன ஸம்வாதம்; எவ்வாறு நடந்தது?

**விடை**.-

**தர்மபுத்திரர்**:- ஒருவர் வார்த்தையும் கேட்காத துர்யோதனனது முரட்டுத்தன த்தால் உண்டாக்கப்பட்ட இந்த யுத்தத்தில் ராஜ்யம் வேண்டு மென்ற பேராவலால் நான் அநியாயமாக உறவினர்களைக் கொன்ற பாவியானேனே! இத்தனை ஸ்திரீ குழந்தைகளை எனது ராஜ்ய ஆசையால் இவ்வளவு சீக்கிரத்தில் அனாதர்களாக்கிக் கொடியவனாகி விட்டேனே! இந்தப் பாபங்கள் தொலையத் தபஸு செய்து ஸந்யாஸ்யாகிக் காடு சென்று என்வாழ் நாளைக் கழிப்பேன். இந்த ராஜ்யமாளுவ தில் என் மனம் ஓடவில்லை. அர்ச்சுனா, நீயே இந்தராஜ்யத்தை ஆண்டுவா.

**அர்ச்சுனன்**:- இவ்வளவு கஷ்டப்பட்டு இந்த ராஜ்யத்தை ஜயித்துவிட்டு இப்படி துக்கப்படலாமா? அப்படியானால் ஆவேசத்துடன் ஏன் யுத்தத்தைச்செய்தீர்? இப்பொழுது நீர் ஸந்யாஸீயாதல் அழகன்று. இப்பொழுது உமக்குவந்திருக்கும் இந்த நிலையிலிருந்து உலகவிஷயமாகச் செய்யவேண்டியவைகளைப் பொருள் முதலியவைகளின் ஸஹாயத்தால் நீர் அவசியம் செய்யவேண்டும். இந்த ராஜ்யம் பொருள்கள் எல்லாம் நம்மதல்ல, நாம் எப்படி ஆளுவது என்று சங்கிக்காமல் முன்விஷயங்களை யோசித்துப்பார்த்து மனதை ஒருவாறு ஸமாதானம் செய்து கொண்டு அவசியம் ராஜ்யம் ஆளவேண்டும்.

**தர்மர்**:- எனக்கு, நீ குறித்தமார்க்கத்தில் நடக்க மனம்வரவே இல்லை. காலாகாலங்களில் அக்னி கார்யங்களைச் செய்து கொண்டும், காட்டில் யதேச்சையாகத் திரிந்து கொண்டும் பெரியோர்களுடன் ஸத்ஸங்கம் செய்து

கொண்டும், நிஷ்டையில் பழகிக்கொண்டும், தேகம் நழுவுகிறவரையில் காலத்தை ஸன்மார்க்கத்தில் கழிப்பதே நலம் என்று தோற்றுகிறது. ஆகாரம் முதலிய அவசிய விஷயங்கள் நமக்கு எளிதில் கிடைக்கக்கூடியதாக இருக்க அதற்காக இந்த ராஜ்யத்தை மிகுந்த துக்கமத்தியில் ஆண்டு கொண்டும், குடும்பவிஷயத்தில் அக்ரம கார்யங்கள் மூலமாக நடந்து கொண்டும் வாழ்நாளைக் கழிக்காவிட்டால் என்ன? இந்தக் கர்மபூமியில் ஸத்கர்மங்களைச் செய்துகொண்டு ஸந்யாஸியாக இருத்தலே நன்று, வேறு என்ன செய்யப்புகினும் மனிதன் மீளாத்துயரத்திற்கு ஆளாகி வருந்த வேண்டியதுதான், இவைகளை யோசித்தால் மீளாததாகிய பரமபதம் அடைய வேண்டும் என்ற ஆவல் உண்டாகின்றது. ஆதாலால் இந்த அநித்ய சரீரம் கழுவும் வரையில் நிரப்பபயமாய் ஸம்பாஸியாக வாழ்தலே மேல்.

**பீமன்: -** வீணாக க்ஷத்ரிய தர்மத்தைக் குற்றங்கூறி சோம்பேறியாகத் திரிவதற்காகவா இந்தயுத்தம் செய்தது? உமது நோக்கம் முன்னரே எங்களுக்குத் தெரிந்திருந்தால் நாங்கள் ஆயுதங்களையே எடுத்திருக்க மாட்டோம்! ராஜாக்களை யும் கொன்றுவிட்டு இப்பொழுது ஜனங்களை அனாதைகளாக்கி விட்டுவிடுவது நியாயமா? ஸந்யாஸத்தைக் கையால் ஆகாத பயங் குள்ளிதான் அவஸரமாகக் கைபற்ற எண்ணுவான். காட்டிற்குப் போய்விட்டால்மாத்திரம் உமக்கு ஸந்யாஸம் ஸித்தித்து விடுமோ?? ஆகையால் க்ஷத்திரியர்களாகிய நாம் ஸந்யாஸத்தை ஐயம் வந்த ஸமபத்தில் நாடவே கூடாது.

**அர்ச்சுனன்:-** முன் காலத்தில் சில பிரஹ்மசாரிச்சிறுவர்கள் ஸந்யாஸிகளாக வேண்டும் என்ற எண்ணத்துடன் காட்டிற்குப்போயினர். அங்கு இந்திரன் ஓர்பக்ஷிவேஷம் கொண்டு 'யாகசேஷத்தை உண்டுவாழ்பவனே சிறந்தவன். இவனுக்கே மேலானநிலைகிடைக்கும்' என்றனன். இதைக் கேட்டதும் இச்சிறுவர்கள் க்ருஹஸ்தராகாமல் ஸந்யாஸிகளாகி யாகசேஷத்தைப்புசிக்கும் நம்மை இந்தப்பக்ஷிதுதிக்கின்றது என்று எண்ணி ஸந்தோஷித்தனர். இதைக்கேட்டு அந்தப்பு 'உங்களை நான் துதிக்க வில்லை. க்ருஹஸ்தர்கள் பலருக்கு ஸமாராதனை செய்து, பின் புசிப்பதேயாகசேஷம் என்னப்படுவது. இவ்வாறு செய்யாது வீணாய் ஸந்யாஸியாகும் சிற்றறிவாளர் மஹாபாபிகளே! க்ருஹஸ்தாச்ரமத்திலிருந்து தான் ஸந்யாஸம் செய்து கொள்ளவேண்டும். அவஸரப்பட்டு ஓர் கார்யத்தை செய்யக் கூடாது. க்ருஹஸ்தாச்ரமத்தின் சிறப்பை உணராது நீங்கள் ஸந்யாஸிகளானால் நீங்கள் மிகுந்த கஷ்டத்திற்கு ஆளாவீர்கள்' என்று புத்திமதி கூறியது. இதைக் கேட்டதும் இச்சிறுவர்கள் தமது பிடிவாதத்தை மாற்றித் தமது வீடு சென்று ஸுகமாக வாழ்ந்தனர். அதுபோல நீரும் சத்ருக்களில்லாத இவ்வுலகத்தில் துக்கம் நீங்கி அரசாள வேண்டியதே. வீணாக மனம் போனபடி ஸந்யாஸியாகவே கூடாது.

**நகுலன்:-** ஜனங்களைக்காக்கும் ஆச்ரமமாகிய க்ருஹஸ்தாச்ரமம் மற்றைய மூன்று ஆச்ரமத்தைவிட மிகச்சிறந்தது என்று முன்னரே தீர்மானம் செய்யப்பட்டு அநேகரிஷிகள் இதிலேயே நிலை பெற்றிருந்தனர். இதிலிருந்து பலங்களில் இச்சை விட்டுத் தன் கடமைகளை ஸரிவரப்பார்ப்பவன் ஸந்யாஸியே ஒழிய, மனங்கலங் கிக் காட்டை பவன் ஸ்ந்யாஸியே யல்ல. ராஜன், யாகம் முதலியபொது நன்மைக்குக் காரணமாகும் கார்யங்களில் தன் ஸொத்துக்களைச் செலவிட்டு

அவைகளை விட்டுப்பிரிய வேண்டுமே ஒழிய, உம்மைப் போலத் துக்ககாலத்தில் தாங்கி நிற்கமாட்டாது அவைகளை விட்டு ஓடிப்போகவே கூடாது. நீர் உமது தர்மப்படி இப்பொழுது அரசர்களை ஜயித்துப் பூமியை ஸ்வாதீனப்படுத்திக் கொண்டு இருக்கிறீர். இந்த ஸமயத்தில் துக்கத்திற்காளாகி ஸந்யாஸத்தால் அடையகூடும் என்று எண்ணும் பதவியைவிட மேலான பதவி ராஜ்யம் ஆளுவதால் உமக்கு நிச்சயமாக உண்டாகும், வீணாகக் கலங்க வேண்டாம்.

**ஸஹாதேவன்:-** உலகில் **மம** (எனது) என்ற இரண்டு எழுத்தே பந்தம், **நமம** (எனதல்ல) என்ற மூன்றெழுத்தே மோக்ஷம். இவ்விரண்டும் மனிதர்களைத்தொழில் செய்யும்படித் தூண்டுகின்றன. நமது தர்மப்படிநாம் விரோதிகளை அவசியம் கொல்ல வேண்டி நேர்ந்தது. ஆத்மா நித்யம் என்ற எண்ணத்தால் இந்த அவச்யகர்ம விஷயமாக உண்டாகும் துக்கத்தைமாற்றி விடவேண்டும். நமக்கு. ராஜ்யம் ஆளும் படியான தருணம் வந்திருக்கிறது. ஆகையால் இதை இப்பொழுது கைவிடலாகாது. ஆனால் இதை மம (எனது) என்று எண்ணிவிட்டால் பந்தம் வரும், ஆதலால் இது நமம (எனதல்ல) என்று கடவுள் பாரமாக விட்டு நீர் இத்தருணத்தில் அவசியம் செய்ய வேண்டியதாகிய அரசாட்சியைச் சாந்தமனதோடும் செய்யும். நீர் ராஜதர்மப்படி மன்னுயிரைத் தன்னுயிர் போலப் பாவித்து அரசாட்சி செய்து வந்தால் உமக்கு ஸந்யாஸத்தின் பலமேஸ்த்திக்கும்.

**தரௌபதி:-** நாம் எல்லோரும் காட்டில் படாத பாடுகள் எல்லாம் படவில்லையா ? அப்பொழுது எப்படியாவது ராஜ்யம்பெற்று ஸுகம் அடைய வேண்டும் என்ற ஆவல் உமக்கு உண்டாக நீர் அதை வெளியிடவில்லையா? அப்படி யிருக்க இப்பொழுது நீர் அதைக் கொஞ்சம்கூட நினையாது ஏன் துக்கிக்கவேண்டும். உமக்கு இப்பொழுது கிடைத்திருக்கும் ராஜ்யம் முதலியவெல்லாம் வந்யாஸத்தாலா கிடைத்தது? இப்படியிருக்க இவைகளை ஸரிவர அனுபவிப்பதற்கு ஸந்யாஸம் எப்படித் தகுந்தவழியாகும்? ஸகல லோகங்களையும் ஆண்டு எல்லோரையும் ஸுகப்படுத்தக்கூடிய தாங்கள் இப்பொழுது பயித்தியம் பிடித்தவர்கள்போலக் காணப்படுவது நன்றாக இருக்க வில்லை. நீங்களே இப்படி இருந்தால் உமது தம்பிமார்கள் கதி என்னவாகும்? இந்த யுத்தத்தில் என் குழந்தைகளை எல்லாம் இழந்தும் நான் துக்கம் ஆறி இருக்கவில்லையா? இப்படி யிருக்க உமது துக்கம் மாத்திரம் இன்னும் ஏன் மாறாதிருக்கின்றது? உமது தம்பிமார்களும் நானும் கூறிய இம்மொழிகளை அலக்ஷ்யம் செய்யாது எங்களைத் திருப்திப் படுத்தவேண்டும்.

**அர்ச்சுனன்.-** உலகத்தில் முடிவில் இறக்க வேண்டியது தான் இதன் மத்தியில் அவனவன் தனது கடமைகளை விடாது செய்யவேண்டும். வேறுவித கவலை இருப்பது வீண்கஷ்டமாகமுடியுமேயொழிய, முடிவில் பிரயோசனம் ஒன்றையும் கொடுக்காது. உலகத்தவரை சீர்குலையாது நிலைநிறுத்தும் தண்டனைபைப் பக்ஷபா தமின்றி நடத்தவேண்டியதே க்ஷத்ரியனுக்கு முக்யதர்மம் இதில் தர்மயுத்தமும் சேர்ந்தது. இதனால் துர்யோதனாதியர்களை நீர் கொல்லும்படி நேர்ந்தது. நீர் இதை நினையாது துக்கிப்பதற்குக் காரணமே இல்லை. உலகில் அஹிம்ஸை என்றும், தர்மப்படி ஹிம்ஸாப்பதென்றும் இரண்டு உண்டு. இவை இரண்டினுள் எது ஸத்கர்மங்களுக்கு ஸாதகமாக இருக்குமோ அதைத்தான் மனிதன் பின்பற்ற

வேண்டும். யோசிக்குங்கால் உலகில் ஒருவித ஹிம்ஸையிலும் ஸம்பந்தப்படாத கர்மங்களே இல்லை. மேலும் ஆத்மா அழிவற்றது, நீர் நடந்த யுத்தத்தைப்பற்றித் துக்கிக்க வேண்டியதில்லை.

**பீமன்:-** நீர் ஸகலமும் அறிந்தவர். உம்மைப்போல நாமும் நடக்கப் பார்க்கிறோம். ஆயினும் எங்களால் முடியவில்லை. நீர் துக்கிப்பதால் எங்கள் மனம் தளருகிறது. வியாதிகள் இரண்டுவிதம்; தேஹவியாதி, மனோவியாதி என்பவை களே. இவை இரண்டினுள் ஒன்றினால் மற்றொன்று உண்டாகும். முன் ஏற்பட்ட கஷ்டங்களை எண்ணித் துக்கிப்பவனுக்கு இருமடங்கு துக்கம் உண்டாகும். நீர் ஸுகதுக்கங்களை ஸமமாய்ப் பார்க்கும் சாந்தமனம் உடையவர். இம்மாதிரி இருமடங்கு துக்கத்திற்கும். இதுவரையில் ஆளானதே இல்லை. குருக்ஷேத்ர யுத்தம் மாத்திரம் ஞாபகம் வந்து ஐயவேளையில் உமதுஸுகத்தைத் தாக்குகிறதே ஒழிய, அதற்கு முன்பு நாம் காட்டில் பட்டபாடுகள் மாத்ரம் ஏன் ஞாபகத்தில் உதித்து உமது துக்கத்தைத் தணிக்கவில்லை? குருக்ஷேத்ரத்தில் செய்த யுத்தம் போன்ற யுத்தம், நீர் உமது மனதோடு செய்ய வேண்டும். இதற்கு ஒருவர் ஸஹாயமும் பயன்படாது. இனி இவ்வுலக வாழ்க்கையில் உமக்கு ஏற்படக்கூடும் நிலை இதில்உமக்கு உண்டாகும் ஜயத்தைப் பொறுத்தது. ராஜ்யம் ஆண்டு சிறந்த யாகங்கள் செய்யும். நாங்களும் பகவானும் உமக்குப் பணிவிடைகள் செய்யத் தயாராக இருக்கிறோம்.

**தர்மபுத்ரர்:-** நீங்கள் கூறியவை எல்லாம் விஷயப்பற்று நீங்காதவர்கள் கூறும் விஷயமே. ராஜன்நிலை மிகச்சிறந்த நிலையா? ‘ஆசையைத் திருப்தி செய்து அடக்கவே முடியாது. பேரின்பத்திற்கு விஷய இன்பங்கள் எம்மட்டு? உலக விஷயங்களில் இருந்தும் ஒதுங்கியிருத்தல் என்பது வீண்பேச்சே. வரவர வ்யவஹா ரத்தை ஒடுக்கும் ஒருவனுக்கே, பேரின்பம் வர இடமுண்டு. அவனுக்கு விஷயங்க ளின் ஏற்றத்தாழ்வில் த்ருஷ்டியே இராது. கர்மங்களே மனிதனுக்கு விலங்கு. இவைகளிலிருந்து விடுபட்டவனுக்கே பரமபதம் கைகூடும். ராஜ்யம் ஆளுவதால் இந்நிலை கைகூட இடமே இல்லை. இந்நிலைக்கு ஏற்பட்டிருக்கும் மார்க்கத்தில் ராஜ்யம் ஆளல் முதலிய உலக விஷயங்கள் தடையே ஒழியவேறல்ல. இந்நிலையில் இருப்பவர்களுக்கு உலக விஷயங்கள் துச்சம் என்று தோன்றும் என்று ஜனகர் ஸித்தி யடைந்த காலத்தில் கூறியிருக்கிறார்.

**அர்ச்சுனன்:-** அந்த ஜனகரே உம்மைப்போல் ராஜ்யம் ஆள வேண்டிய காலத்தில் ஸந்யாஸம் வாங்கிக்கொள்ள எண்ணி க்ஷௌரம் முதலியன செய்வித் துக் கொண்டு தயாராகி விட்டார். அப்பொழுது அவர்பெண் சாதி அவரைநோக்கி, ஆத்திரக்காரனுக்கு புத்திமட்டு; ராஜ்யம் ஆண்ட நீர் திடீரென்று. இம்மாதிரிமாறி விடலாமா? உமக்கு எவ்வாறு இந்த ஆச்ரமத்தை நிர்வஹிக்கமுடியும். அவஸர ஸந்யாஸம் க்ருஹஸ்தாச்ரமத்தை விட மிகத்தாழ்ந்ததே. எவ்வளவோ பெயர்கள் உம்மால் ஸுகம் பெறவேண்டும் என்று எண்ணி யிருக்கின்றனர். அவர்களை நிர்கதியாக விட்டு விட்டு ஓடிப்போவதால் உமக்கு என்ன வந்தது? நீர் செயலற்று நிற்பீராகில் எல்லோரும் உம்மை அவமதிப்பர். 'உமது கதி என்னவாகும்? இப்பொழுது பக்குவ மில்லாத காலத்தில் நீர் பலாத்காரமாக ஸந்யாஸம் கொள்வது அநேகவித கஷ்டங்களுக்குக் காரணமாகுமே ஒழிய உமக்கு மேலான பதவியைக்

கொடுக்காது. ஆகையால் க்ருஹ்ஸ்தாச்ரமத்தில் இருந்து பின்னர் தக்க காலத்தில் ஸ்ந்யாஸியாகலாம், என்று புத்திமதி கூற அவர் ஸந்யாஸியாகாது நின்றுவிட்டார். மஹாஞானியாகிய ஜனகருக்குக் கூட ஓர் காலத்தில் புத்திகலங்கியது. அது போல உமக்கு ஏற்பட்டிருக்கும் கலக்கத்தை ஸரிப்படுத்திக்கொண்டு. ராஜ்யம் ஆளத் தொடங்கும்.

**தர்மபுத்ரர்**:- வைதீக மார்க்கம் இரண்டு விதம். அவைகளுள், கர்ம மார்க்கமே உனக்குத் தெரியும். நான் ஞானமார்க்கத்தையும் ஆராய்ச்சி செய்திருக்கிறேன். உனக்குத் தெரிந்தவரையில் நீ நன்றாகத் தான் சொன்னாய்; ஆனால் எனக்கு ஒன்றும் தெரியாது என்று நீ எண்ணிவிடக்பொருளே சிறந்தது என்று நீ கொண்ட கொள்கை மேலானதன்று. பெரியோர்கள் எல்லாம் உலகத்தைவிட்டு ஒதுங்கி மேன்மை அடைந்திருக்கின்றனர். இவ்வாறு விடுபடுவதற்கு, வனவாஸம், ஸந்யாஸ தர்மம், உலக விஷயங்களில் உண்மையான வெறுப்பு, யோகாப்யாஸம், ஆத்மஞானம், நிஷ்டை ஆகிய இவைகளே முக்யஸாதனங்கள். வேதங்களில் கர்ம காண்ட பாகங்களிலிருந்து பரமபதம் அடைவது மிகக்கஷ்டம். ஞான காண்ட மூலமாக உண்மை உணர்ந்தவரே ஸந்யாஸ ஞானம் என்னும் இவைகள் மூலமாக எளிதில் பரமபதம் பெறுவர்.

**தேவஸ்தானர்** (ஓர் ரிஷி):- உமது தம்பிமார் முதலியவர்களை இவ்வாறு அடக்கியது நன்றாக இருக்கவில்லை. அவர்கள் கூறியபடி நியாயமாகத்தான் இப்பூமியை இப்பொழுது நீர் ஜயித்திருக்கிறீர். இதன் பின்பு காரணமின்றி இதைத் திடீரென்று விட்டு விட்டுப்போவது அநாவச்யம். ஆகையால் இப்பொழுது உமக்கு வந்திருக்கும் நிலைக்குத்தகுந்த கடமைகளையும் யாகாதிகளையும் நீர் அவச்யம் செய்தே தீரவேண்டும். உலகத்தில் இந்த மார்க்கத்திலிருந்து கொண்டே அநேக ராஜாக்கள் எளிதில் பரமபதம் பெற்றிருக்கின்றனர். இந்த விஷயத்தில் முன்னர் ப்ரஹஸ்பதிக்கும் இந்த்ரனுர்கும் ஸம்வாதம். ஒன்று நடந்திருக்கிறது. இதில் ப்ரஹஸ்பதி 'த்ருப்தியே ஸுகம் கொடுப்பது. இது வந்தால்தான் மனிதனுக்கு எந்த நிலையில் இருந்த போதிலும் ஸுகமும் சாந்தமும் உண்டாகும்' என்று கூறினார். நீர் வேண்டுமென்று உமது உறவினர்களைக் கொல்லவில்லை. காலக்கிரமத்தில் உமக்கு ஓர் நிலை வந்திருக்கிறது. அது கெட்ட நிலையு மல்ல. ஆகையால் நீர் அதற்குத் தக்கபடி மனோ நிரோதாதிகளுடன் நடந்து ராஜ்யம் ஆண்டு திருப்திய டைந்து ஸுகம் அடையும்.

**அர்ச்சுனன்**:- இப்பொழுது உமக்கு இப்பொழுது உமக்கு வந்திருப்பது எளிதில் அடையக்கூடிய தல்ல. அப்படி இருக்க நீர் துக்கிப்பானேன்? ஸந்யாஸம் பிராஹ்மணனுக்கு உரியது. க்ஷத்ரியன் ஆயுதங்களால் கொடிய தொழிலைத்தான் நடத்த வேண்டும். இதற்குப் பயந்து துக்கித்து க்ஷத்ரியன் ஸந்யாஸம் கொள்வது தகுதியன்று. இதுவரையில் க்ஷத்ரியன் தர்மப்படி நடந்துவிட்டு இப்பொழுது திடீரென்று பிராஹ்மண தர்மத்தை அனுஷ்டிக்கவேண்டும் என்ற விபரீதபுத்தி தோன்றுவானேன்? நடந்தது, நடந்து விட்டது. இனி அதைப்பற்றித் துக்கித்து உருகுவதால் பயன் என்ன? ஆகையால்தேறுதல் அடைந்து ராஜ்யத்தைக் கைக்கொள் ளும்.

**வ்யாஸர்:-** தர்மபுத்ரா! நீர் மௌனமாக இருப்பது ந்யாயமன்று, உமக்குத் தெரியாதது ஒன்றுமில்லை. க்ருஹஸ்தாச்ரமமே மிகச்சிறந்தது. இது தான் ஸகல வாணாச்ரமங்களுக்கும் ஆதாரமானது. அரசன் திடசித்தனாய் தண்டனையைப் பக்ஷபாதமின்றி விதித்து எல்லாவற்றையும் ஒழுங்கு தவறாது காக்கவேண்டும். இந்த விஷயத்தில் ஓர் கதை கூட உண்டு. முன்காலத்தில் **சங்கர்** என்றும் **லிஹிதர்** என்றும் இரண்டு ஸஹோதரர்கள் இருந்தார்கள். இவர்கள் இருவருக்கும் இரண்டு வேறான ஆச்ரமங்கள் இருந்தன. அவைகளில் நல்ல பழங்கள் கொடுக்கும் மரங்களிருந்தன. ஒரு நாள் லிஹிதர், சங்கர் ஆச்சிரமத்தில் இல்லாத ஸமயத்தில் அங்கு தற்செயலாக வந்து, அங்குள்ள மரங்களில் இருந்த பழங்களை முன்பின் யோசிக்காது தின்னத் தொடங்கி விட்டார். இப்படி இருக்கையில் சங்கர் வந்து பார்த்து, 'நானில்லாத ஸமயத்தில் என் பொருளை அபஹரித்ததால் நீ திருடனாய் விட்டாய்! ஆகையால் இவ்வூர் அரசன் **ஸுத்யும்னனிடம்** சென்று தண்டனை பெற்றுப் புனிதனாகிவா', என்று சொல்லி அனுப்பினார். லிஹிதர் அவ்வாறே அரசனிடம் வந்து தான் கேட்பதைக் கொடுப்பதாக அவனிடமிருந்து வாக்குப் பெற்றுக்கொண்டு, திருடனுக்குத் தகுந்த தண்டனை தனக்கு விதிக்கும் படி கேட்டார். அரசன் இவர் நேர்மைக்கு மெச்சி மன்னித்து விட்டதாக எவ்வளவோ மன்றாடினான். இவர் ஒப்பவில்லை. முடிவில் அரசன் திருடர்களுக்குச் செய்வது போல லிஹிதர் கைகளை வெட்டி விட்டான். லிஹிதர் சங்கரிடம் வந்து தான் தண்டனை பெற்ற தாகச்சொல்லித் தன்னை மன்னிக்கும்படி கேட்க, அவர் அருகாமையிலுள்ள 'பாகுதா' நதிக்குப் போய் ஸ்நாநம் தர்ப்பணாதிகள் செய்து நீ செய்த பாவத்தை மறந்துவிடு , என்று கட்டளையிட்டார். அவ்வாறே செய்யக் கைகள் முன்போல முளைத்து விட்டன. மிகுந்த ஆச்சர்யத்துடன் சங்கரிடம் வந்து நடந்ததை கூற 'அப்பா! நான் உன்னைத் தண்டிக்க ஏற்பட்டவனல்லன். அரசன் இந்தத்தொழிலைச் செய்து மேன்மை அடைந்தான். நீயும் செய்தது பாவம் என்று துக்கித்ததாலும், தண்டனையாலும் பரிசுத்தமாக உனக்குக் கைகளும் முன்போல முளைத்தன' என்றார். ஆகவே. தர்மபுத்ரா! இவ்வளவு திடமாக மனங்கலையாது நீதி செலுத்து வதே க்ஷத்ரியன் கடமை. இப்படி இருக்க நீர் இந்தந்யாய யுத்தத்திற்காக இவ்வளவு துக்கித்து மனம் கலைவது அழகல்ல. இதற்கு முன் நீங்கள் பட்ட கஷ்டங்கள் முடிந்துவிட்டன. இந்த ஸமயத்தில் மனம் புழுங்குவது நன்றாக இல்லை. அரசில்லா நாடு பாழ். அங்கு தர்மங்கள் எல்லாம் நிலைகுலைந்துவிடும். உம்மைப்போலத்தான் முன்காலத்தில் ஹயக்ரீவன் என்ற அரசனுக்கு உறவினர்களைக் கொல்லும்படி நேரிட, அவன் தன் கடமையாக அதைச் செய்து கீர்த்தி பெற்று மனங்கலையாது பின்னர் அரசாண்டு ஸ்வர்க்க ஸுகங்களை அனுபவிக்கிறான். நீரும் அவ்வாறே செய்யும்.

**தர்மபுத்ரர்:-** இப்போரில் இறந்த வீரர்களின் மனைவிகளைக் காணும் பொழுதெல்லாம் நானல்லவோ அவர்களை இவ்வாறு ஆக்கிவிட்டேன் என்ற துக்கம் என்னை அறியாது கிளம்பி என்னைக் கலக்குகிறதே. நான் எவ்வாறு ராஜ்யமாளத் துணிவேன்! எனக்கு என்ன ஸுகம் வேண்டியிருக்கிறது? என்னைப்போன்ற தன் நயம் கருதுபவன் யார் உலகில் உண்டு?

**வ்யாஸர்:-** அப்பா! இவையெல்லாம் காலபலம். துக்கித்து என்ன பிரயோஜனம்? ஒருவனால் இவ்வுலகில் என்ன செய்ய முடியும்? கெடுதியும் செய்யமுடியாது நல்லதும் செய்யமுடியாது. காலத்திற்குத் தகுந்தபடி புத்தியுண்டாகச் சிற்சில மனிதர்கள் மூலமாகச் சிற்சில காரியங்கள் நடந்தேறும். யார் எவ்வளவு தடுத்தாலும் நிற்காது. இம் மாதிரியான கார்யங்கள் விஷயமாகத் துக்கிப்பதில் பயன் ஒன்றுமில்லை. உலகில் ஸுத்துக்கங்களைக் கவனியாதவனுக்கு மாறாத ஸுகம் உண்டாகும். உலகில் மடையனுக்கும் ஞானிக்குமே ஸுகம் உண்டு. மற்றவர்களுக்கெல்லாம் ஸுத்துக்கங்கள் மாறி மாறித்தான் வரும். இவைகளைக் கவனிக்காது அசட்டை செய்வதே, இவைகளிலிருந்து தப்புவதற்குவழி. யுத்தமே க்ஷத்ரியனுக்கு முக்யயக்ஞம். இதனால் ஏற்படும் கஷ்டங்களைப் பாராட்டவேகூடாது.

**தர்மபுத்ரர்:-** நான் யுத்தத்தில் எவ்வளவு அநியாயங்கள் செய்துவிட்டேன்! என்பாட்டனாரான பீஷ்மரை யுத்தத்தில் அடித்துச் சாய்த்தேன்! பொய் சொல்லித் த்ரோணரை மாய்த்தேன். என் தமையனான கர்ணனைக் கொன்றேன்; அபிமன்யு இறப்பதற்கு நான் தான் காரணம்; எனக்கு வேண்டியவர்கள் எல்லோரையும் துக்கத்தில் அழுத்திய கொடியபாபி யல்லவா நான்! எனக்கு என்னகதி வருமோ அறியேன்! நான் ப்ராயோபவேசம் செய்து ப்ராணனை விட்டால் தான் இப்பாவம் தீர்ந்து புனிதனாவேன்.

**வ்யாஸர்:-** அவஸரப் படாதே! எல்லாம் விதியின் கார்யம்; நீரோ கர்மம் செய்யப் பிறந்தவர்; நாய்வேஷம் போட்டால் குரைத்தே தீரவேண்டும்; மாட்டேன் என்றால் முடியுமா? அச்மர் ஜனகரை நோக்கி, 'துக்கத்திற்கு இரண்டு காரணம்; மனக்குழப்பம், உலக விஷய அவஸ்தை ஆகிய இவைகளே; உலகிலுள்ள விசித்ரங்களெல்லாம் விதிப்படி நடப்பன. உலகில் நமக்கு ஏற்படும் ஸம்பந்தங்கள் எல்லாம் ஸத்திரத்தில் கூடும் கூட்டத்திற்கு ஸமானமே ஒழிய வேறல்ல. உலகவிஷய ஸம்பந்தங்கள் யாவும் என்றைக்கிருந்தாலும் விட்டுப்போக வேண்டியது தான்; ஞானிகள் இதற்கு மேலானதாயும் மாறாததாயும் உள்ள நிலையைக் கண்டு தெளிந்து தாம் செய்யவேண்டிய கடமைகளை விடாது செய்து அதனால் ஏற்படக் கூடியஸுகதுக்கங்களை லக்ஷ்யம் செய்யாது உலகில்வாழ்வர். இதைமறவாது ஞாபகம் வைத்துக்கொண்டிருந்தால் எல்லாத் துக்கங்களும் சிதறிப்போகும் இனிமேலாவது உமது துக்கத்தைவிடும் என்று கூறித்தேற்றினார்.

**அர்ச்சுனன்:-** இன்னும் என் தமையனார் பேசாது துக்கத்தில் அழுந்துகிறார்! கிருஷ்ணா, நீரே எங்களை இப்பொழுது கரையேற்றவேண்டும். உமது வார்த்தையால் அண்ணாவுக்கு மனம் தேறாமல் போகுமா? நீர் தான் இப்பொழுது பேசவேண்டும்.

**பகவான்:-** ஆண்டாண்டு தோறும் அழுது புரண்டாலும் மாண்டார் வருவரோ?' உமது உறவினர்கள் க்ஷத்ரிய தர்மப்படி யுத்தம் செய்து யுத்தம் செய்து இறந்து வீரஸ்வர்க்கம் அடைந்து ஸுகிக்கின்றனர். நீரும் க்ஷத்ரிய தர்மப்படி ஜயம் அடைந்திருக்கிறீர். ஸுகம் அடைந்த உமது உறவினர்களைப்பற்றித் துக்கிக்காது நீரும்ஸுகம் அடையும். **சிருஞ்ஜயன்**, **ஸ்வர்ணஷ்டீவி** என்ற தன் பிள்ளை இறந்ததும் புத்ரசோகத்தால் வருந்துகையில் நாரதர் அவனிடம் சென்று 'மருத்தன், சிபி, பரதன்,

ராமர், பகீரதன், மாந்தாதா, ரந்திதேவர் முதலிய பெரிய கீர்த்திமான்களான அரசர்கள் எல்லாம் மரணத்திற்கு ஆளாகி இருக்கின்றனர். இப்படியிருக்க உன்புத்ரன் இறந்தான் என்று நீ துக்கிப்பது அழகாயிருக்கவில்லை' என்று தேற்றியிருக்கிறார். பின்னர், நாரதர் தான் முன்கொடுத்த வாக்குப்படி ஸ்வர்ணஷ்டீவியைப் பிழைப்பு மூட்டினார். அவன்கீர்த்திவந்தனாய் அரசாண்டு பின்னரும் இறக்கும்படி நேர்ந்தது. ஆகையால் உலகில் மரணத்தைக் குறித்துத் துக்கிப்பதில் பயனில்லை. மனதைத் திடப்படுத்திக் கொண்டு ராஜ்யத்தை ஆளத் தொடங்கவேண்டும்.

**வ்யாஸர்**:- ராஜ்யம் ஆளவேண்டியது உமது கடன். இதை நீர் ஸரிவர நடத்தவேண்டும் . ந்யாயம் தவறி நடப்பவனை அரசன் தகுந்தபடி தண்டிக்க வேண்டும். துர்யோதனாதியரை நீர் கொன்றது , அவர்கள் அநியாயத்திற்குத் தகுந்த தண்டனையே. இந்த விஷயத்தில் நீர் உமது கடனைச் செய்தீரே ஒழிய, விரோதத்தாலும் ஆக்ரஹத்தாலும் நீர் அக்கொலைத்தொழிலைச் செய்யவில்லை. ஆகையால் துக்கிப்பதை நிறுத்தும்.

**தர்மபுத்ரர்**:- எவ்வளவு தான் தாங்கள் ந்யாயத்தைப்பற்றிப் பேசிய போதிலும் நான் ராஜ்யம் வேண்டுமென்ற இச்சையால் தானே இக்கொலைத் தொழிலைச் செய்தேன். இந்த எண்ணம் தானே என்னை மிகவும் வருத்துகிறது. நான் என்ன செய்வேன்!

**வ்யாஸர்**:- நீராக வேண்டு மென்று இந்தத் தொழிலைச் செய்தவராகமாட்டீர். உம்மை அவமதித்துக் காட்டிற்குத் துரத்திய காலத்தில் உம்மால் என்ன செய்ய முடிந்தது. காலத்திற்குத் தகுந்தபடி தான் புத்தியும் ஏற்படும். இப்போது துர்யோதனாதியர் உம்மால் இறக்கவேண்டியதால் உம்மால் இறந்தார்கள். இதற்கு நீர் தான் கர்த்தா என்று எப்படிக் கூறுவது? உமது மூலமாகக் கார்யம் நடந்தது. இவ்வாறு நடந்ததற்காக நீர் ப்ராயச்சித்தங்கள் வேண்டுமானால் செய்யும்? ப்ராயோபவேசம் செய்து மரணம் அடைவதால் உமது பாபம் போகாது. வீணாகப்பயங்குள்ளித்தனம் மாத்ரம் உமக்கு மிஞ்சும். ஒழுங்கு தவறியவராவீர். ஆகையால் இந்தத் துக்கம் கேட்டினை விளைவிக்குமே ஒழிப உமது பாபத்தைத் தீர்க்காது.

**தர்மபுத்ரர்**:- தாங்கள் என்ன சொல்லியும் என் துக்கம் அடங்கவில்லையே! எவ்வளவு முயன்றபோதிலும் நான் உறவினர்களைக் கொன்ற பாபி, ஸ்திரீகளை அநாதையாக்கினவன், என்ற எண்ணங்கள் விடாமல் பாதிக்கின்றன. எனக்கு இன்ன செய்வது என்று தோன்றவே இல்லை. நான் எப்படி நடந்து கொள்ள வேண்டும்?

**வ்யாஸர்**:- நான் இதுவரையிலும் சொன்னதையே தான் திரும்பவும் சொல்ல வேண்டும். தேவர்கள் தமது தமையன்மார்களான அஸுரர்களைக் கொன்று சிறப்படைந்தனர். நாமெல்லாம் காலத்தின் கையில் அகப்பட்டவர்கள். நாம் தர்மப்படி கார்யங்களைச் செய்யுங்கால் ஏற்படக்கூடிய ஹிம்ஸைகளை எண்ணித் துக்கிக்கவே கூடாது. இப்பொழுது துக்கத்தை அடக்கிக்கொண்டு ராஜ்யத்தைக் கைக் கொள்ளு வதே நீர் செய்யவேண்டிய கார்யம்.

**தர்மபுத்ரர்**:- நான் செய்த கொடுந்தொழிலால் உண்டாகிய பாபத்திற்குத் தகுந்த ப்ராயச்சித்தம் என்ன? தயவு செய்து ஒளிக்காது எனக்குத் தெரிவிக்கவேண்டும்.

**வ்யாஸா**:- நீர் உமது உறவினர்களைக் கொன்று சாய்த்ததில் உமது தர்மப்படி நடந்து கொண்டீரேயொழிய ஓர் பாபத்தையும் செய்யவில்லை. ஆகையால் நீர் ப்ராயச்சித்த விஷயத்தைப்பற்றி யோசிக்க வேண்டியதே இல்லை. தைர்யமாக நீர் ராஜ்யத்தை ஆண்டு யாகாதிகளைச் செய்து பண்ணியவானாக வேண்டியதைத்தவிர வேறுவித குழப்பங்களை விட்டு விடும்.

**தர்மபுத்ரர்**:- ந்யாய மார்க்கத்திற்கும் அரசாட்சிக்கும் எப்படிப் பொருத்தம் ஏற்படும்? ஒன்றிற்கொன்று விரோதமாகக் காணப்படுகிறதே! ராஜ்யம் ஆளுவதில் எவ்வளவோ அநியாய கார்யங்கள் செய்ய வேண்டி வருகிறது. இந்த விஷயத்தில் என்றைக்கும் என்மனம் கிடந்து குழம்புகிறது.

**நாரதர்**:- இந்த ஸந்தேஹத்தை முற்றிலும் எங்களால் தெளியும்படிச் செய்ய முடியாது. நாங்கள் எவ்வளவு சொல்லிய போதிலும் உமக்காகச் சொல்வதாக எண்ணி விடுவீர். உம்மாலேயே அடிபட்டு கஷ்டத்திற்கு ஆளாகியிருக்கும் பீஷ்மர் யுத்தகளத்திலிருக்கிறார். அவரிடம் சென்று இந்த ஸந்தேஹங்களைக் கேளும். அவர் இந்த விஷயத்தில் எது கூறியபோதிலும் நாங்கள் சொல்வதைவிட நன்றாக உமக்குப்பதியும். அவர் தர்மாத்மா. உங்கள் பாட்டனார்; உங்களால் கஷ்டத்திற்கு ஆளானவர். ப்ரஹஸ்பதியிடம் ராஜதர்மத்தையும், சுக்ராசார்யரிடமிருந்து யுத்த நீதியையும், வஸிஷ்டர் சியவனர் என்னும் இவர்களிடமிருந்து வேதத்தையும், ஸனத்குமாரரிடமிருந்து மோக்ஷ தர்மத்,தையும், மார்க்கண்டேயரிடமிருந்து யதி தர்மத்தையும் அறிந்தவர். அவர் இறக்குமுன் நீர் அவரைக்கேட்டு உமது மனோவ்யாகூலத்தை யொழிக்கவேண்டும். இப்பொழுது. ராஜ்யத்தை எங்கள் சொற்படி கைக்கொள்ளும்.

**தர்மபுத்ரர்**:- என்னால் கஷ்டப்படுத்தப்பட்டு பீஷ்மர் அவஸ்தைப்படுகிறார். அவரிடம் நான் எப்படிப்போய்க் கேட்பேன்? இதனால் அவர் கஷ்டம் அதிகரிக்காதா? எனக்கு அவர் முன்பு போவதென்றால் மிகுந்த துக்கமாயும், வெட்கமாயும், பயமாயும் இருக்கிறதே! நான் என்ன செய்வது?

**பகவான்**:- எதற்கு இந்த வீண்பேச்சுகள் எல்லாம்? துக்கத்தைவிட்டு இங்குள்ள பெரியோர்கள் கூறுவதுபோல் நடவும். உமது தம்பிமார்கள், த்ரௌபதி, ஸகல தேசத்து ராஜாக்கள் ஆகிய இவர்கள் எல்லோரையும், ராஜ்யத்தை ஒப்புக்கொண்டு திருப்தி செய்ய எழுந்திரும்.

**வினா** 12.- அப்பொழுது தர்மபுத்ரர் என்ன செய்தார்? மேல் என்ன நடந்தது?

**விடை**.- பகவான் இவ்வாறு கண்டிப்பாகக் கூறியதும், இவ்வளவு காலம் நடந்த ஸம்பாஷணைகளால் சாந்தப்பட்டு வந்த தர்மபுத்ரர் ஒருவாறு தமது

துக்கத்தை அடக்கிக் கொண்டு எழுந்து கங்கைக்கரையிலிருந்து ரிஷிகள் முதவிய எல்லோரும் சூழ ஹஸ்தினாபுரியுள் புகுந்தார். இதற்குள் பட்டணங்கள் எல்லாம் அலங்காரம் செய்யப்பெற்றிருந்தது. வாத்யகோஷங்கள் முதலிய கோலாஹலங்களுக் கிடையில் பாண்டவர்கள் பட்டணத்தை வலம் வந்து, அரண்ம னையில் புகுந்தனர்; அங்கு எல்லோரும் பாண்டவர்களைப் புகழ்ந்து பேசினர். பிராஹ்மணர்கள் முதலியோர்கள் எல்லோருக்கும் தகுந்த பரிசுகள் அளிக்கப்பட்டன. அவர்கள் வேதகோஷங்கள் மூலமாக பாண்டவர்களை வாழ்த்தினர்.

**வினா** 13. - இந்த ஸமயத்தில் தர்மபுத்ரர் மனதைக் கலக்கும்படியான' விஷயம் என்ன நடந்தது? அது எவ்வாறு முடிவு பெற்றது?

**விடை.-** எல்லாப் பிராஹ்மணர்களும், ஆசீர்வதித்து முடிந்ததும் எங்கும் நிச்சப்தமாக இருந்தது. இந்த ஸமயம் பார்த்து துர்யோதனன் ஸ்நேஹிதனான **சார்வாகன்** என்ற ராக்ஷஸன், பிராஹ்மண உருவத்தோடு அங்கு வந்து நின்று கொண்டு பாண்டவர்களுக்குத் தீங்கு செய்ய வேண்டும் என்ற எண்ணத்துடன் தர்மபுத்ரரை நோக்கி, "இங்குள்ளவர்கள் மனதில் இருக்கும் எண்ணத்தை நான் தைர்யமாக வெளியிடுகிறேன். அவர்கள் சொல்லப்பயப்படுவதால் நான் இவ்வாறு செய்கிறேன். நீர் கொடியவர்? உறவினர்களைக் கொன்றபாபி . ஆருமில்லா ஊரில் அரசாளுவதால் என்ன சிறப்பு? உமக்குத் தகுந்த நிலை தான் வந்திருக்கிறது. புத்திமான் இந்த மையத்தில் உயிரை வைத்துக்கொண்டிருப்பானா? என்பது பிராஹ்மணர்களது உண்மையான அபிப்பிராயம். நான் கவடற்றுச் சொல்லி விட்டேன்" என்று கூறினான். பிராஹ்மணர்கள் எல்லோரும் 'இதென்ன அந்யாயம்? நாங்கள் இப்படி நினைக்க இல்லையே' என்று கூக்குரலிட்டனர். தர்மபுத்ரர் பிராஹ்மணர்களை நோக்கி, "பெரியோர்களே! நான் பாபி என்பது உண்மையே. நான்படும் கஷ்டம் எனக்கே தெரியும். நீங்கள் உங்கள் மொழிகளால் என்னை மேன்மேலும் வருத்தவேண்டாம்; கூடிய சீக்கிரத்தில் ப்ராணணை விட்டு விடுகிறேன்" என்றார். எல்லோரும் தர்மபுத்ரரை நோக்கி 'எங்கள் அபிப்ராயம் இதுவல்ல. யாரோ, கபடமாக இப்படிக் கூறி விட்டார். ஞானத்ருஷ்டியால் பார்க்கையில் இவ்வாறு கூறியது துர்யேர்தனன் தோழன் சார்வாகன் என்ற ராக்ஷஸனே என்று கூறி அந்த ராக்ஷலனைக் கோபத்தால் ஹுங்காரம் செய்து பிராஹ்மணர்கள் சாம்பலாக்கினர். பகவான், 'சார்வாகன் பூர்வ ஜன்மத்தில் தபஸால் எவ்விதத்திலும் இறவாது நிர்ப்பயமாக இருக்கும்படி பிரஹ்மாவிடம் வரம் வாங்கும் போதும் பிராஹ்மண கோபத்தைத் தவிர வேறு எதிலிருந்தும், பயம் உனக்கில்லை என்று அவர் வரம் கொடுத்தார். இப்பொழுது தான் துர்யோதனனுக்காக பிராஹ்மண கோபத்தை ஸம்பாதித்து அவன் இறந்தான். நீர் வீண் கவலைப் படவேண்டாம்' என்று கூறி தர்மபுத்ரரைத் தேற்றினார்.

**வினா** 14.- தர்மபுத்ர பட்டாபிஷேகம் எவ்வாறு நடந்தது? அப்பொழுது தர்மபுத்ரர் என்ன சொன்னார்? மேல் தர்மபுத்ரர் என்ன செய்தார்?

**விடை**.- யுதிஷ்டிரர் இவ்வாறு துக்கம் நீங்க, அவரையும் த்ரௌபதியையும் அழகிய சிங்காஸனத்தில் கிழக்கு முகமாக உட்காருவித்து நகரத்து ஜனங்கள் எல்லோரும் ஏகமனத்துடன் துதிக்கவும், ஸகலவித வாத்யங்கள் முழங்கவும், மிகுந்த கோலாஹலத்துடன் **தௌம்யர்** முதலிய பிராஹ்மணர்கள் கங்கை முதலிய திவ்ய தீர்த்தங்களால் ராஜ்யபட்டாபிஷேகம் செய்து முடித்தனர். இது முடிந்ததும் யுதிஷ்டிரர் மிகுந்த வணக்கத்துடன் ஸபையோர்களை நோக்கி 'திருதராஷ்டிரர்தான் எங்களுக்குத் தகப்பனும் தெய்வமும்; அவர்தான் எங்களுக்கு இப்பொழுது ஆதாரம்; அவர் தான் இந்த தேசத்திற்கு அரசன். நாம் எல்லோரும் அவரையே திருப்தி படுத்த முயலவேண்டும்', என்று கூறி எல்லா விஷயங்களையும் திருதராஷ்டிரரிடம் ஒப்புவித்து, அவர் மூலமாகவே ஸகலராஜ்ய கார்யங்களையும் தன் தம்பிமார்கள் ஸஹாயத்தைக் கொண்டு நடத்திவந்தார். தமது தம்பிமார்களுக்கு வெவ்வேறு அரண்மனைகளை ஏற்படுத்தி அவர்களை ஸுகமாக வஸிக்கும்படிச் செய்தார். பகவானையும் அவர் சிறப்பையும் ஸதாமறவாது தமது ஞாபகத்தில் வைத்து அவரைக் கண்டபோதெல்லாம் ஸந்தோஷ பரவசத்தால் அடிக்கடி அவரை தர்மபுத்ரர் துதிப்பது வழக்கம். இவ்வாறு தர்மபுத்ரர் முடிவில் தமக்கு உரிய ராஜ்யத்தை அடைந்து சிறப்புற்றார்.

**வினா** 15.- இவ்வாறிருக்கையில் தர்மபுத்திரர் என்ன விசித்திரத்தைக் கண்டார்?

**விடை**..- ஒரு நாள் காலையில் தமது கடன்களை முடித்துக் கொண்டு தர்மபுத்ரர், அர்ச்சுனன் அரண்மனையில் புகுந்து ஓர் மெத்தையின் மேல் பகவான் அசையாது உட்கார்ந்திருப்பதைக்கண்டார். போகும் பொழுதே "இரவு நன்றாகக் கழிந்ததா?" என்று கேட்டுக்கொண்டே போனார். பகவான் பதில் ஒன்றும் கொடுக்க வில்லை. அருகே சென்று நோக்கியதும், பகவான் நிஷ்டையில் மனதை இழந்து மெய்மறந்திருப்பது போலக் காணப்பட்டது. "நாம் தான் பகவானைக் குறித்து இவ்வாறு நிஷ்டை பழக வேண்டியது. இப்படி இருக்க பரம்பொருளாகிய பகவான், இவ்வாறு யாரைக்குறித்து நிஷ்டையிலிருக்கிறார்?" என்று ஆச்சரியமுற்றார்.

**வினா** 16.- பகவான் ஏன் இவ்வாறு இருந்தார்? மேல் என்ன ஏற்பாடு செய்யப்பட்டது?

**விடை**.- தர்மபுத்திரர் ஆச்சரியமுற்றுக் கேட்டதை பகவான் கேட்டுத் தாமே பதில் கூறத்தொடங்கினார். "யுத்த களத்தில், நினைத்த காலத்தில் மரணம் அடையசக்தி வாய்ந்திருப்பினும், மேலுள்ள பாணங்களின் பாதையைக் கூடக் கவனியாது உத்தராயணத்தை எதிர்பார்த்திருக்கும் பாட்டனாரான **பீஷ்மர்** என்னைத் துதித்துத்யானம் செய்தார். . என் மனம் அங்கே போயிருந்தது. இவ்வளவு தான். வேறு விசேஷம் ஒன்றுமில்லை" என்று கூறினார். பின்னர் பகவான் யுதிஷ்டிரரை நோக்கி 'இந்த பீஷ்மர் மஹானுபாவர், எல்லாம் உணர்ந்தவர். இவரிடம் உமக்குக் கேட்கவேண்டியவைகளை எல்லாம் கேட்கலாம். இவர் இறந்தால் உலகிலுள்ள ஞானம்மழுங்கியே போய்விடும். இவர் மரணமடையும் உத்தராயண காலத்திற்கு முன் நீர் அவர் ஞானத்தை வெளிப்படுத்தி மனஸ் ஸமாதானத்தை அடையும்' என்று

கூற, தர்மபுத்திரர் அவ்வாறே செய்வதாகச் சொல்லி, ரதங்களைத் தயார் செய்யச் சொன்னார்.

**வினா** 17.- அன்று யுத்தகளத்திற்குப் போகும் வழியில் நடந்த விஷயங்கள் என்ன?

**விடை**.- எல்லோருடைய ரதங்களும் தயாராய் வந்து நிற்க, பாண்டவர்கள், பகவான், விதுரர், ஸஞ்ஜயர், கிருபர் முதலியோர் எல்லோரும் யுத்தகளம் நோக்கிப் புறப்பட்டனர். போகும் வழியிலுள்ள **ஸமந்த பஞ்சகம்** என்னும் மடுவைக் காட்டி அதை மூலமாகக்கொண்டு பரசுராமர் கதை முழுவதையும் தர்மபுத்ரருக்குப்பகவான் கூறினார். (**பாகவத வினாவிடை 9-வது ஸ்கந்தம்பார்க்க**) இவ்வாறு சொல்லிக் கொண்டே, பீஷ்மர் வீரத்தன்மையுடன் மரணப்படுக்கையில் படுத்திருக்கும். இடம் வந்து சேர்ந்தார்கள்.

**வினா** 18. - அன்று யுத்தகளத்தில் என்ன நடந்தது?

**விடை**- யுத்தகளம் வந்ததும் எல்லோரும் பீஷ்மரைக்கண்டார்கள். பகவான் பீஷ்மர் அருகே சென்று அவர்தேஹுஸ்திதி மனோல் திதி முதலியவைகளை மிகுந்த பரிவுடன் விசாரித்தார். பின்னர் உறவினர்களைக் கொல்லும்படி நேர்ந்ததால் தர்மபுத்ரர் அடைந்திருக்கும். துக்கம், எவ்வளவு தேற்றியும் இன்னும் மாறாதிருப்ப தைச் சொல்ல, பீஷ்மரே அந்த துக்கத்தை முற்றிலும் தீர்க்கவேண்டும். என்று கூறினார். அப்பொழுது பீஷ்மர் துதி செய்ய, அதைக்கேட்டு ஸந்தோஷப்பட்டு 'நீர் இறந்தால் உமது ஞானமும் உம்மோடு போய்விடும். ஆகையால் இந்த நல்ல தருணத்தில் உமக்குத் தெரிந்தவைகளை எல்லாம் வெளியடும்' என்று கூற, பீஷ்மர், 'உம்முன்பாக எனக்குப் பெரிய விஷயங்களை எடுத்துக் கூற யோக்யதையே இல்லை. மேலும் என் மேல் தைத்திருக்கும் அம்புகளால் உண்டாகும் கஷ்டத்தால் என் மனம் கலங்குகிறது. விஷயங்கள் ஒன்றும் மனதில் நிற்கமாட்டா. நான் எவ்வாறு உங்கள் உத்தரவை கடத்துவது?' என்றார். இதைக் கேட்டவுடனே 'உமக்கு தேஹ உபாதி ஒன்றும் கஷ்டப்படுத்தாதிருக்கட்டும், எல்லாவிஷ.பங்களும் ஒழுங்காக உமக்கு ஞாபகம் வரட்டும்' என்று அனுக்ரஹித்தார். அந்த ஸமயத்தில் பீஷ்மர் செய்யப்போகும் ஞானோபதேசத்தைக்கேட்டு ஆனந்திக்க வியாஸாதி ரிஷிகள் அங்கு வந்து கூடினர். அவர்கள் பகவானை மனதார ஆராதித்தனர். வானவர் பூமழை பொழிந்தனர். பிரபஞ்சமேமிகுந்த ஸந்தோஷத்தை அடைந்தது. அன்றிரவு பீஷ்மரை இளைப்பாறும்படி விட்டு விட்டு மறுநாள் ஞானோபதேசம் தொடங்குவதாக ஏற்பாடு செய்துகொண்டு, அன்று ஸாயங்காலம் எல்லோரும் தமது இருப்பிடம் சென்றனர்.

**வினா** 19.- 1றுநாள் பாண்டவர்கள் என்ன செய்தார்கள்?

**விடை**.- மறு நாள் அதிகாலையில் பகவான் எழுந்து பரப்பிரஹ்மத்தைக் குறித்துக் கொஞ்சகாலம் தியானத்திலிருந்து, பின்னர் காலைக்கடன்களை முடித்துக் கொண்டு, தமது ரதத்தில் வந்து ஏறிக்கொண்டார். இதற்குள் யுதிஷ்டிரரும்

மற்றையவர்களும் தத்தமது ரதங்களில் ஏறிக்கொண்டு தயாராக வந்துவிட்டனர். தாம் போகும் கார்யத்திற்கும் பீஷ்மர் இருக்கும் நிலைக்கும் ஏற்பட தர்மபத்ரர் அதிகபரிவாரங்கள், ஸேனைகள் ஒன்றும் வரக்கூடாது தடுத்து விட்டனர். எல்லோரும் யத்தகளம் வர, தர்மபுத்ரருக்கு பீஷ்மரை அணுகி எவ்வாறு கேள்வி கேட்பது என்ற அச்சம் பிறந்தது. இதைப் பகவான் பீஷ்மருக்குத் தெரிவிக்க அவர் மிகுந்த பரிவுடன் தர்மபுத்ரரை அருகே அழைத்து 'க்ஷத்ரிய தர்மத்தின் சிறப்பு நன்றாக உணர்ந்த உனக்கு ஏன் இந்த அச்சம் இருக்க வேண்டும். அப்பா! இதை விடு' என்று கூற உடனே தர்மபுத்திரர் பகவானையும், பீஷ்மையரையும், அங்கிருந்த பெரியோர்களையும் வணங்கி மஹா விநயத்துடன் கேள்விகளைக் கேட்கத் தொடங்கினார்.

# பீஷ்மர் உபதேசம்

## 1. ராஜ தர்மம்

**வினா** 20. - ராஜாவின் நடவடிக்கைகளைப் பற்றிக் கேட்ட தர்மபுத்ரருக்குப் பீஷ்மர் என்ன விடையளித்தார்?

**விடை.** - ராஜன் ஈச்வர ஆராதனம், பிராஹ்மண ஆராதனங்களைச் செய்து நெறி தவறாது நடக்கவேண்டும். விதிமதி என்ற இரண்டனுள் தன்னால் கூடியதாகிய மதியையே அரசன் பின்பற்றவேண்டும். அரசன் ஸாதுவாக இருக்கவே கூடாது. அப்படி இருந்தால் அவனை எல்லோரும் அவமதிப்பர். பிரஜைகளிடம் அவன் ஸதா அன்புடன் இருக்க வேண்டும். தன் ஸுகங்களைக்கூட கவனியாது பிரஜைகளை ஸுகப்படுத்த வேண்டும். அரசன் தன் வேலைக்காரரோடு விளையாட்டாக இருக்கவே கூடாது. இவைகளால் அரசனுக்கு மதிப்புப் போய்விடும். அரசன் எப்பொழுதும் சுருசுருப்பாக இருக்கவேண்டும். ஸாம தானபேத தண்டோபாயங்களை அரசன் தகுந்தபடி உபயோகப்படுத்த வேண்டும். தண்டனை விஷயத்தில், தன் பிள்ளை, குரு என்று கூடப்பார்க்காது நிஷ்பக்ஷபாதியாக **ஸகரராஜன்**, **அஸ்மஞ்ஜனிடம்** இருந்ததுபோல (**இராமாயணம், பாலகாண்டம் பார்க்க**.) அரசன் இருக்க வேண்டும். அரசன் முன்கோபியாக இருக்கவே கூடாது. சதுர்வித புருஷார்த்தங்களையும் கைவிடவே கூடாது. அரசன் நல்ல புத்திமானாயும் கூடிய வரையில் தம்மைச் சேர்ந்தவரிடம் நம்பிக்கை உடையவனாயும் இருத்தல் வேண்டும். அரசன் குளிர்ந்தவாக்கும் சிரித்த முகமும் உடையவனாகவே இருக்க வேண்டும். தன் கீழ் உத்தியோகஸ் தர்களை நியமிக்கும் விஷயத்தில் அவன் மிகுந்த ஜாக்கிரதையுடையவனாக இருத்தல் வேண்டும். அரசனாலேயே ஊரில் உள்ள வித்தைகள் , கைத்தொழில்கள் விருத்தியாகி ஊரார் எவ்வித பயமும் இன்றி வாழ வேண்டும். இந்த பிரஜாரக்ஷணம் தான் அரசனுக்குச் சிறந்த கடன்; இதற்கு அரசன் ஸமயோசித புத்தி யுடையவனாதல் வேண்டும். அரசன், கார்யத்தில் கண்ணாக இருக்க வேண்டுமே ஒழிய அதிகமாக வார்த்தைகளை வெளியிடக்கூடாது. எவ்வளவு தாழ்ந்த விரோதிகளையும் அரசன் அலக்ஷியம் செய்யவே கூடாது.

தந்திரமின்றி ஸாத்மீகத்தால் மாத்திரம், என்றும் அரசாளமுடியாது. எப்பொழுதும் அரசன் அபாயங்களால் சூழப்பட்டிருப்பதால் அவன் எவ்வளவு ஜாக்கிரதையாக இருப்பினும் இதுபோதும் என்று கூறிவிட முடியாது.

**வினா** 21.- ராஜன் என்று உண்டாகக்காரணம் என்ன? அவன் ஒருவனிடம், பெரியோர்கள் எல்லாம் அடங்கியிருக்கக் காரணம் என்ன? என்று கேட்ட கேள்விக்கு, பீஷ்மர் என்ன பதில் கூறினார்?

**விடை.**- முன் காலத்தில் அரசனில்லாமலே எல்லோரும் தமது கர்மங்களை ஒழுங்கு தவறாது செய்து கொண்டும் பிறருக்கு தீங்கு விளைக்காமலும் இருந்தனர். வரவர இந்த நிலை தவறி மனிதர்கள் மனம் கலங்கியது. அநேகக் குற்றங்களை அவர்கள் செய்தனர். மனதில் தோன்றியவைகளை எல்லாம் தங்கு தடையின்றி வெளியிடத் தொடங்கினர். வேதங்கள் மறைந்தன.எல்லா புத்திமான்களும் பிரஹ்மா விடம் சென்று முறையிட அவர் சதுர்வித புருஷார்த்தங்களைப் பற்றி லக்ஷம் பாடங்கள் எழுதினர். இதில் மனிதன் உணரவேண்டிய ஒழுங்குகள், நீதிகள், யுத்தமுறைகள், நீக்கவேண்டிய குற்றங்கள் முதலியன எல்லாம் அடங்கியிருந்தன. இதற்குத் **தண்டநீதி** என்று பெயரிடப்பட்டது. இதை சிவன் அப்பியஸித்துப் பதினாயிரம் அத்தியாயமாகக் குறுக்கினர். இந்திரன் இதை 5000 அத்தியாயமாக் கினன். பிரஹஸ்பதியால் இது 3000 அத்தியாயங்களாக்கப்பட்டது. இது முடிந்ததும் எல்லோரும் விஷ்ணுவிடம் சென்று இந்த தண்ட நீதி முறைகளை அனுஷ்டிக வல்ல ஒரு மனிதன் வேண்டும் என்று கேட்டார்கள். அப்பொழுது **வைராஜன்** என்ற ஒருவன் உண்டாக்கப்பட, அவன் பிறவி ஞானியாகி அரசாட்சியை வெறுத்தான். அவனிடமிருந்து முறையே வம்சம் விருத்தியாக எட்டாம் தலைமுறையில் **பிருது** என்ற சக்கிரவர்த்தி உண்டானான். (**பாகவதவினாவிடை, 4-ம் ஸ்கந்தம் பார்க்க**.) இவனிடம் பகவத் ஸாந்நித்யம் அதிகம் உண்டு. இவன் காலத்தில் எல்லோரும் ஸுகம் பெற்றனர். இதனால் இவனுக்கு **ராஜன்** (பிரஜைகளை ஸந்தோஷப்படுத்து பவன்) என்ற பெயர் வந்தது. இது முதல் ராஜாகளுக்கு பகவத் அம்சம் சேர்ந்தது. இதனால் அரசன் ஒருவனிடத்தில், எல்லோரும் அடங்கிநடப்பது. இதுதான் ராஜன் பெருமை.

**வினா** 22.- ஜாதிதர்மம் என்ன? ராஜதர்மம் என்ன? ராஜ்யம், அரசன், பிரஜைகள் என்னும் இவைகள் செழித்தோங்கும் உபாயம் யாது? அரசன் நீக்கவேண்டியவை யாவை? அரசன் மேன்மை அடைவது எப்படி? என்ற கேள்விகளை பீஷ்மர், எவ்வாறு எடுத்து ஆண்டார்.

**விடை.**- (ஜாதிதர்ம விஷயம், **பாகவத வினா விடை 7-ம் ஸ்கந்தத்தில் காண்க**.) ஆச்ரமதர்மம் பிராஹ்மணன் ஒருவனுக்கே தவிர மற்ற ஜாதியார்களுக் கல்ல. அரசன் எல்லா ஜாதியார்களையும் தத்தம் ஒழுங்குதவறாது நடக்கும்படிச் செய்ய வேண்டும். ராஜதர்மத்துள் ஸகலவர்ணாச்ரம தர்மங்கள் எல்லாம் அடங்கியிருக்கின்றன. தன் தர்மத்தை விடாது அனுஷ்டிப்பதாலும், பிறர் அவரது தர்மங்களை அனுஷ்டிக்கும்படிச் செய்வதாலும் அரசனும், தத்தம் தர்மங்களைத் தவறாது அனுஷ்டித்தலாலும் மனோகிரோத விஷயத்தில் சிரத்தை மாறாதிருத்தலா

லும் பிரஜைகளும், இவைகள் எல்லாம் ஸரிவர நடப்பதாலும் விரோதிகளைக் காலமறிந்து தடுத்து நிறுத்தலாலும் ராஜ்யமும், செழிக்கும். அரசன் வர்ணாச்ரம தர்மங்களுக்குள் ஏற்றத் தாழ்வை எண்ணுவதையும், பிறரிடமிருந்து வஸ்துக்களை வாங்குவதையும், புரோஹிதஸ்தானத்தையும் நீக்கவேண்டும். ராஜதர்மம் முதலில் உட்டாக்கப்பட்டதென்றும், மற்றைய தர்மங்கள் எல்லாம் பின்னர் ஏற்பட்டவை என்றும், **மாந்தாதாவுக்கு** முன் காலத்தில் விஷ்ணு, இந்திர ரூபமாக உபதேசித்திருக்கிறார். இப்பெருந்தன்மையை உணர்ந்து ஒழுங்கு தவறாது நடக்கும் அரசனுக்குப் பரம பதம் எளிதில் கிடைக்கும். ராஜதர்மத்தில் நடக்கும் அரசனுக்கு ஸத்குணங்களான மன்னுயிரைத் தன்னுயிர் போலப் பார்த்தல், **அஹிம்சை**, **முன் கோபமின்மை**, ஸ்வபாவமாகவே ஏற்பட்டுவிடும். இதிலிருந்து அவனுக்கு உலகப் பற்று குறைந்து கொண்டே வர, த்யானாதிகளை நன்றாகச் செய்து கொண்டு காமக் ரோதாதிகளை அடக்கிக்கொண்டு அரசன் தன்காப்புத் தொழில் மூலமாகப் பரமபதம் பெறக் கேட்பானேன்?

**வினா** 23. - ராஜ்யத்திலுள்ளோர் தர்மம் என்ன?

**விடை.** - ராஜ்யத்திலுள்ளோர் முதலில் தகுந்த அரசனை ஸம்பாதிக்க வேண்டும். அராஜகமான நாடு நிலைத்திராது. ஆகையால் அந்நாட்டிலுள்ளோர் யாராவது ஓர் பெரிய தர்மாத்மாவான அரசன் படையெடுத்து வருவானாகில் அவனை எதிர்கொண்டழைத்துத் தமது ராஜ்யத்திற்கு ஏற்ற ராஜனாக்கிக்கொள்ள வேண்டும். இதுதான் முதல் தர்மம். அராஜகமான தேசத்தில் கெட்டவன் கூட, ஸ்கமாக இருக்கமுடியாது. பலவான் பலஹீனனை நசுக்கி விடுவான். **இரண்டாவது**, அரசனது ஆட்சிக்குக் கூடிய வரையில் ப்ரஜைகள் ஸஹாயம் செய்து அரசனைத் தன் தர்மத்தைக் கஷ்டமின்றி அனுஷ்டிக்கும்படிச் செய்தல் வேண்டும். எல்லா விதமான கைத்தொழில்களாலும், வரி கொடுத்தலாலும், ஸேனாஸமூகத்தாலும், தகுந்த ஸமயங்களில் கூறப்படும் நற்புத்திகளாலும் அரசனை ப்ரஜைகள் சிறப்பித்துப் பலவானாக்கவேண்டும். முன்காலத்தில் மனுவுக்குப் ப்ரஜைகள் இவ்வாறு ஸஹாயம் செய்ததால் தான் அவரால் இவ்வுலகை அடக்கியாண்டு ஸுகப்படுத்த முடிந்தது.

**வினா** 24.- அரசனை ப்ராஹ்மணர்கள் தெய்வம் என்று மதிப்பானேன்?

**விடை.**- முன்காலத்தில், "யாரால் ஜனங்கள் எல்லோருக்கும் க்ஷேமம் உண்டாகும்" என்று கேட்ட வஸுமனஸ் என்ற அரசனுக்கு விடைகூறுங்கால் இந்த விஷயத்தைப் பற்றி பிரஹஸ்பதி விஸ்தரித்திருக்கிறார். அரசன் தேசத்தை ஆளுவதில் ஒவ்வொரு ஸமயத்தில் ஒவ்வொரு தேவதையைப் போலாகவேண்டும். பொய் உரைப்போரைக் கோபத்தால் வெருட்டுங்கால் அக்னி போலவும், வேவுகாரர் மூலமாக தன்ராஜ்ய விஷயங்களை உணருங்கால் ஸூர்யன் போலவும், யுத்தத்தில் ஜனங்களை வெட்டிச் சாய்க்குங்கால் ஸம்ஹார கர்த்தா போலவும், துஷ்ட நிக்ரஹ சிஷ்டபரிபாலனம் செய்யுங்கால் யமன் போலவும், தானதர்மம் செய்யுங்கால் குபேரன் போலவும் இருக்கவேண்டும். தன் தர்மத்தை அரசன் ச்ரத்தையுடன்

அனுஷ்டிப்பானாகில் அவன் ஒவ்வொரு ஸமயத்தில் ஒவ்வொரு தேவதையைப் போல் இருப்பதால் தெய்வம் என்றே பிராஹ்மணர்களால் மதிக்கப்படுகிறான்.

**வினா** 25.- அரசன் ஏற்படுத்திக்கொள்ள வேண்டிய வேவுகாரர்களின் லக்ஷணமும், கடமைகளும் என்ன? எவ்வாறு அரசன் ப்ரஜைகளின் நம்பிக்கையை ஸம்பாதிக்கவேண்டும்? எதிரிகளை எவ்வாறு நடத்தவேண்டும்?

**விடை.**- அரசன் வேவுகாரர்கள் பார்வைக்கு ஒன்றும் தெரியாதவர்கள் போலும், உண்மையில் மிகுந்த புத்திமான்களாகவும் இருக்கவேண்டும். இவர்களே அரசனது கண்கள் இவர்கள் ராஜ்யம் முழுவதிலும் முக்யமாக விரோதி அரசர்கள் வேவுகாரர்கள் வரக்கூடிய இடங்களிலும் ஜனங்கள் கூடும் இடங்களிலும் நிலை பெற்று, ரஹஸ்யங்களை அரசனிடம் தெரிவிக்கவேண்டும். இவர்கள் மூலமாக வரும் விஷயங்களை வைத்துக்கொண்டு பெரியோர்களுடன் கலந்து யோஜித்து அரசன் கார்யங்களை நடத்த வேண்டும். ஜனங்களுடைய நம்பிக்கை ஸம்பாதிப்ப தற்கு, அவன் முன் வரும் வழக்குகளில் ஈவு இறக்கமின்றி நிஷ்பக்ஷபாதமா யிருப்பதும் ராஜ்:பம் செழிப்பதற்கு வேண்டியதாகிய உத்யோக ஸ்தானங்களில், நேர்மை, அறிவு, பழக்கம் முதலியவைகள் நிறைந்த பெரியோர்களை ஏற்படுத்து வதும், ப்ரஜைகளின் பொது நன்மைகளை தாமதிக்காது செய்து முடிப்பதுமே முக்யமான வழிகள். எதிரிகளிடத்தில் முதல் மூன்று உபாயங்களையே உபயோகப் படுத்தவேண்டும். நான்காவது உபாயமாகிய சண்டையை கடைசியாகக் கைக் கொள்ள வேண்டும். இந்த உபாயத்தை ராஜ்யம் ஸம்பாதிப்பதில் ஒருநாளும் உபயோகிக்கப்படாது. விரோதிகளோடு ஸ்நேஹம் செய்து கொள்வதால் ராஜ்யத்தின் பொது நன்மைக்கு ஸ்ஹாயமாகும் என்று தோற்றினால் அவ்வாறே செய்ய வேண்டும்.

**வினா** 26.- தண்டனையால் அரசன் எவ்வாறு ராஜ்யத்தை சிறப்படையும்படி செய்கிறான்? இகபரம் இரண்டையும் அரசன் எவ்வாறு ஸம்பாதிப்பது?

**விடை** - யுகதர்மங்களுக்கு ஏற்ப ஜனங்களின் நிலை இருக்கும் என்றாலும் ராஜன் தண்டனையை நடத்தும் விதத்திற்கேற்ப யுகங்களின் தர்மங்கள் அவன் ராஜ்யத்திலேயே உண்டாகிவிடும். மிகுந்த ஜாக்ரதையுடன் பக்ஷபாதமின்றி தண்டனையை அரசன் நடத்துவானேயாகில் **கிருத** அல்லது **ஸத்ய** யுகத்தின் நிலையை (**பாகவத வினா விடை 12-ம் ஸ்கந்தம் பார்க்க**) ராஜ்யம் அடையும். அஜாக்ரதையாக இருந்தால் ராஜ்யம் கலியுக நிலையை அடையும். ராஜன் தன் தர்மத்திற்குக் குறைவு வாராது நடந்து கொண்டு அவைகளில் மனதைப் பற்றவிடாது, பரம ஆத்ம ரஹஸ்யங்களை மறவாது அவைகளில் ஒழிந்த நேரத்தில் பழகிவர வேண்டும். இவ்வாறு ஸதாமனதில் மேலான ரஹஸ்யத்தைக் கடைப் பிடித்தும், வ்யவஹாரத்தில் தன் தர்மப்படி கோபித்தல், ஸந்தோஷித்தல், தந்த்ரமாக இருத்தல் இவை முதலானவைகளை அவசியம் கைக்கொள்ள வேண்டிய ஸமயங்களில் மனங்கலங்காது கைக்கொண்டும் நடந்தால் தான் அரசனுக்கு இஹபரமிரண்டும் ஸித்திக்கும்.

**வினா** 27.- அரசன் ந்யாயவழிகள் தவறாது ப்ரஜைகளை ரக்ஷிப்பது எவ்வாறு?

**விடை.**- புத்திமான்களாகிய ப்ராஹ்மணர்களை அரசன் வழிபடவேண்டும். அரசன் முக்யமாக காமம் குரோதம் இரண்டையும் வெகு ஜாக்ரதையாக அடக்கி, நடக்க வேண்டும். பணத்தாசை பிடித்தவர்கள், யோக்யதையற்றவர்கள் ஆகிய இவர்களை அரசன் உத்யோகத்தில் ஏற்படுத்தவே கூடாது. ஜனங்களிடமிருந்து அரசன் நில விளைவில் ⅙ பங்குதான் வரியாக வாங்க வேண்டும். சண்டை முதலியவைகளுக்கு அதிகப்பணம் வேண்டியிருந்தால் ப்ராஹ்மணர்கள் தவிற மற்றவர்களிடமிருந்து பணம் வாங்கலாம். கஷ்ட காலங்களிலும் அரசன் மனம் கலங்காதிருக்கவேண்டும். ஜனங்களிடம் மிகுந்த ப்ரீதியுடன் இருந்து அரசன் அவர்களைக் காப்பாற்றிவரவேண்டும். நல்ல ஆசார்யனும் மந்திரியும் அரசனுக்கு அமைய வேண்டும். இவைகளைப் பின்பற்றி நடந்தால் அரசன் நியாய வழிகளிலிருந்து தவறாதிருக்கலாம்.

**வினா** 28.- ப்ராஹ்மணர்களுக்கு இவ்வளவு சிறப்பு ஏன் ஏற்பட்டது?

**விடை.**- முன்காலத்தில் இதே கேள்வி புரூரவசக்ரவர்த்தியால் வாயுவை நோக்கிக் கேட்கப்பட்டது. அதற்கு வாயு 'ப்ராஹ்மணர்கள் ப்ரஹ்மாவினது வாயிலிருந்து முதலில் வெளியானவர்கள்; இவர்கள் மஹாபுத்திமான்கள்; உலகம் இவர்களைத்தான் சேர்ந்தது. இவர்கள் ஞானத்தின் சிறப்பால் பூமி தமக்கு வேண்டாம் என்று ஒதுங்கி விட்டனர். பின்னர் இரண்டாவது உண்டான க்ஷத்ரியர் இதற்கு ஸொந்தக்காரர்களாயினர். பிராஹ்மணர்கள் அடிக்கடி அரசர்களுக்கு வேண்டிய புத்திமதிகளைக் கூறுவர் அவர்களுக்கு ராஜதர்மங்களை ஸமயத்திற்கு வேண்டிய அளவு எடுத்துக் கூறி ஞாபகப்படுத்துவர். பொது நன்மைக்கு உரிய யாகாதிக்ருதுக் களை எல்லாம் செய்துவைப்பவர். இந்திரிய நிரோதம் முதலிய நற்குணங்கள் இவர்களிடம் காணப்படும். ப்ராஹ்மணர்கள் உலக விஷயங்களில் பற்றில்லாது பொது நன்மை மாத்திரமாகவே வ்யவஹாரம் செய்வதால் அவர்களுக்கு மிகுந்த சிறப்பு உண்டாகிவிட்டது. ஆகையால் அவர்களை அரசர்கள் மிகுந்த ஜாக்ரதையுடன் காப்பாற்ற வேண்டியது.

**வினா** 29.- ப்ராஹ்மணர்களுக்கும் அரசர்களுக்கும் பொருத்தம் இல்லாமற் போனால் விளையும் தீங்குகள் என்ன?

**விடை.**- இந்த விஷயத்தில் முன்னர் புரூரவசக்ரவர்த்திக்கும் காச்யபருக்கும் ஸம்வாதம் நடந்துள்ளது. இவர்கள் இவருக்கும் பொருத்தம் இல்லாமல் போய் விட்டால் எல்லாம் குழப்பமாகவே முடியும். ராஜ்யத்தில் ஸுகமே உண்டாகாது, வர்ணாச்ரமதர்மங்கள் தவறிவிடும். கொடியவர்கள் பலவான்களாகி ராஜ்யத்தை வருத்துவர். கெட்ட குணங்கள் தடுக்கப்படாது வளருவதால் ஒருவரை ஒருவர் அடித்துக்கொண்டிறப்பர். இவர்கள் மத்தியில் நல்லவர்கள் இருப்பினும், அவ்வாறிருத் தலால் அவர்களுக்கும் கஷ்டமே உண்டாகும்.

**வினா** 30.- புரோஹிதரின் சிறப்பு எவ்வாறிருக்கும்?

**விடை**.- முன் காலத்தில் **முசுகுந்த** சக்ரவர்த்தி திக்விஜயம் செய்து கொண்டு வருகையில் அளகாபுரிவந்து குபேரனை எதிர்த்தார். குபேரனது ராக்ஷஸர்களால் அரசன் ஸேனைகளுக்கு மிகுந்த கஷ்டம் உண்டாயிற்று. இவன் தன் புரோஹிதரா கிய வஸிஷ்டரிடம் தனது கஷ்டங்களைச் சொல்லிக்கொண்டான். அவர் தமது தபோ மஹிமையால் ராக்ஷஸர்கள் மாண்டு விழும்படி செய்தார். இதைக் கண்ட குபேரன் முசுகுத்தரிடம் வந்து, 'க்ஷத்ரிய தர்மப்படி நாமல்லவா சண்டையிடவேண்டும். ப்ராஹ்மண பலத்தையும் சேர்ப்பது ந்யாயமோ' என்று கேட்டான். அதற்கு அவர், 'ப்ரஹ்ம க்ஷத்ரியர்கள் இருவரும் தான் ராஜ்யத்தை தாங்கவேண்டும். ப்ராஹ்மண பலமில்லாது க்ஷத்ரியனுக்கும் பலம் ஏது? புத்தி பலமெல்லாம் ப்ராஹ்மணரும் தேஹபலமெல்லாம் க்ஷத்ரியரும் கொடுத்தால் தான் ராஜ்யகார்யங்கள். ஸத்திபெறும்' என்றான். அப்பொழுது குபேரன் உலகம் முழுவதையும் முசுகுந்தரி டம் ஒப்புவித்தான். அதற்கு அவர் 'நான் எவனிடத்திலிருந்தும் வாங்கவே கூடாது. எல்லாவற்றையும் என் புஜவலியால் கைவசப்படுத்தவேண்டும்' என்று கூறித் தன் தர்மத்தை விடாது அனுஷ்டித்தான். ஆகையால் புரோஹிதரது பலம் மிகச் சிறந்தது, முக்யமானது.

**வினா** 31.- இவ்வளவு கஷ்டப்பட்டு ஸுகம்பெறாவிட்டால் என்ன? இந்த அரசாட்சியை ஏன் கைப்பற்றித் தவிக்க வேண்டும்? என்று கேட்ட யுதிஷ்டிரரை நோக்கி பீஷ்மர் என்ன புத்திமதி கூறினார்?

**விடை**.- 'நீ நற்குண முடையவன் தான். அதை காலாகாலமின்றி வெளிப்படுத் துவதால் தான், உன்னை அதிகமாக ஸாதாரண ஜனங்கள் மதிக்கமாட்டார்கள். உனக்கு ராஜ்யம்பாரமாகத் தோற்றுகிறது. ஸரிவர நடந்தால் உனக்கு கஷ்டமே தோற்றாது. ஒழுங்கு தவறுபவனுக்குத்தான் என்றைக்கும் கஷ்டம் தோன்றும். இவ்வாறு ஒழுங்கால் கஷ்டம் நீக்கப்பட்டால் மிகுந்திருப்பது இகபரஸுகம். ப்ரஜைகளை ரக்ஷிப்பதால் அரசனுக்கு உண்டாகும் நன்மை, எல்லா ஆச்ரமங்க ளையும் விதிப்படி அனுஷ்டிப்பதால் ஒருவனுக்கு உண்டாகும் நன்மையை விட மிகச் சிறந்தது. நீ அரசனாகப் பிறந்துவிட்டபடியால் நீ உன் கடமையை நடத்த வேண்டியது தான். மேலும் ராஜ்யம் பெறவேண்டிய முயற்சியையும் செய்து விட்டாய். இப்பொழுது உன் இஷ்டப்படி விட்டுப்போக முடியாது; போகவும் கூடாது. இப்பொழுதுவிட்டு நீ போய்விட்டால் பயந்தவன், சேம்பேரி, திடச்சித்தம் இல்லா தவன், என்றே உன்னை எல்லோரும் பழிப்பர். உலகில் ஸுகதுக்கங்கள் கலந்தே வரும். அதனால் துக்கத்தால் ஏங்காமலும், ஸுகத்துள் அழுந்தாமலும் இருத்தல் வேண்டும். உன் மனோதர்மத்தைப் பார்த்தாலோ நீ ஸுகத்தில் அழுந்தமாட்டாய். ஆகையால் நீ துக்கத்தால் ஏக்கமடையாது ராஜ்யத்தைக் கைக்கொள்ளவேண்டியது அவசியம்'

**வினா** 32.- ப்ராஹ்மணர்களில் அநேகர் வெவ்வேறு தர்மங்களை அனுஷ்டிக்கி ன்றனர். அவர்கள் தம்முள் வித்யாஸம்யாது? அவர்களை அரசன் எவ்வாறு நடத்த வேண்டும்?

**விடை.-** வேதஞ்ஞானம், நித்ய கர்மானுஷ்டானம், நற்குணங்கள், ஸ்மத்ருஷ்டி இவைகளை உடையவர்களே ப்ராஹ்மணர்கள், தெய்வத்திற்கு ஸமானம். இவை களில்லா ப்ராஹ்மணர்கள் சூத்ரர்கள். இவர்களிடமிருந்து அரசன் அவச்யம் வரி வாங்க வேண்டியது. இம்மாதிரி ப்ராஹ்மணர்களை ஜனங்கள் பொது நன்மைக்காகச் சம்பளமின்றி உழைக்கும்படி அரசன் செய்யவேண்டும். புரோஹிதர்கள், ரித்விக்குக் கள், மந்திரிகள், புத்திமதி கூறுவோர், தூதர்கள் ஆகிய இந்த ஸ்தானங்களில் அமரும் ப்ராஹ்மணர்கள் க்ஷத்ரியர்களே. ஸேனையில் அமருதல், முதலியவைகளைச் செய்பவர் வைச்யர்களே. ப்ராஹ்மணர்கள் எப்படி இருப்பினும் அரசன் அவர்களைத் தகுந்தபடி உபயோகப்படுத்திக் காப்பாற்றவேண்டும். இப்படிச்செய்தும் சில ப்ராஹ்ம ணர்களின் குணம் கெட்டதாகவே காணப்படின் அவன் குடும்பத்தோடு அவனை வேறு நாட்டிற்கு அனுப்பிவித்து விடவேண்டும். இவ்வாறு நடக்கும் அரசனுக்கு ஓர்வித கெடுதியும் வாராது.

**வினா** 33.- ராஜ்யமே குழப்பமாகி அரசனை எதிர்த்துவிட்டால் அவன் எப்படி ராஜ்யத்தை ரக்ஷிப்பது?

**விடை.-** தானம், ஸத் ஆசாரம், கலங்கா நெஞ்சம் ப்ராஹ்மண ஸஹாயம் இவைகளை முன்னிட்டுக் கொண்டு ப்ரஜைகளை படிப்படியாக அடக்கவேண்டும். முக்யமாக ப்ராஹ்மண ஸஹாயமே, இக்காலங்களில் அரசனுக்கு பலம். புத்திமதி கூறல், யாகாதிகள் செய்தல், தபோபலம், முதலியவைகளால் ப்ராஹ்மணர்கள் அரசனைக் காப்பார்கள். அவஸரமாக அரசன் தண்டனை சண்டை முதலியவை களைக் கைக்கொள்ளக்கூடாது. அப்படிச் செய்வானாயின் வீண் குழப்பம் உண்டாகி எல்லோரும் கஷ்டத்திற்கு உள்ளாவர். திருடர்கள் முதலியவர்கள் வந்து அரசனை எதிர்த்து விட்டால் நாட்டிலுள்ளோர் எல்லோரும் படை எடுத்து யுத்தம் செய்வதால் அவர்களுக்கு தர்மம் தவறிய பாபம் வாராது.

**வினா** 34.- ப்ராஹ்மணர்களை க்ஷத்ரியர்கள் எதிர்த்து விட்டால் அவர்கள் எவ்வாறு தம்மைக் காப்பாற்றிக்கொள்வது?

**விடை.-** தபஸ், பிரஹ்மசர்ய வ்ரதம், க்ஷத்ரிய தர்மானுஷ்டானம், தந்திரம் முதலியவைகளால் ப்ராஹமணர்கள் தம்மைக் காபாற்றிக்கொள்ளலாம். நல்ல ப்ராஹ்மணனுடைய பலத்திற்குப்பின் தான் மற்றையவர்கர்களது பலம் எல்லாம். அந்த ஸமயத்தில் ஸத்விருத்தியுடையவர்கள் எல்லோரும் ப்ராஹ்மணருக்கு ஸஹாயமாக வருவார்கள். இம்மாதிரியான ஸமயங்களில் யுத்தம் செய்திருப்பதே மிகச் சிறந்தது. ப்ராஹ்மணன் தன் நிலைகாத்தல், வர்ணாச்ரம தர்மம் நிலை நிறுத்தல், திருடர்களை தண்டித்தல், இவ்விஷ.பங்களில் சண்டையிடுவதால் பாபத்திற்கு உள்ளாகமாட்டான்.

**வினா** 35.- மிகுந்த குழப்பம் உண்டாகிய வர்ணாச்ரம பேதமே இல்லாமற் போகும் போது யார் அரசன்?

**விடை.-** இக்குழப்பங்களை அடக்கி தன் புஜபல மனோபலம் ஆகிய இவைகளால் யார் ஒழுங்கை ஏற்படுத்தி ராஜ்யத்தை நல்லநிலைக்குக் கொண்டு வருகிறானோ அவன் ப்ராஹ்மணன், வைச்யன், சூத்திரனானாலும் ஸரி அவனே அந்த நாட்டிற்கு அரசன். வேதஞ்ஞானம் எவ்வாறு ப்ராமணனுக்கு லக்ஷணமோ, அதுபோல ப்ரஜைகளைக் காத்தலே அரசன் லக்ஷணம்.

**வினா** 36.- புரோஹிதர்கள் எம்மாதிரியானவர்களாக இருக்க வேண்டும்? அவர்கள் எவ்வாறு நடந்து கொள்ளவேண்டும்?

**விடை.-** வேதங்களை நன்றாய் உணர்ந்தவர்களாயும், ஸகல ப்ராஹ்மண குணங்கள் அமைந்தவர்களாயும், ராஜாங்க நடவடிக்கைகள் தெரிந்தவர்களாயும் இருத்தல் வேண்டும். அவர்கள் மாறாத ராஜபக்தி உடையவர்களாயும், குளிர்ந்த வார்த்தைகள் பேசுபவராயும், பெருந்தன்மை வாய்ந்தவர்களாயும் ஸதா நடந்து கொள்ள வேண்டும்.

**வினா** 37.- அரசனும் மந்திரியும் எவ்வாறிருக்கவேண்டும்? யாரை அரசன் நம்பவேண்டும்? யாரை நம்பக்கூடாது?

**விடை.-** நன்னடக்கை உடையவர்களாயும், பெருந்தன்மை உடையவர் களாயும், வீண் பெருமை பேசும் குணம் இல்லாதவராயும், நல்ல குலத்திற் பிறந்தவர் களாயும், தைர்யம், மரியாதை, படிப்பு, ஸமயோசிதபுத்தி இவைகளை உடையவர் களாயும் இருப்பவர்களே மந்திரிகளாகத் தகுந்தவர்கள். இம்மாதிரியான மந்திரி அரசன் கார்யங்களை கவனமாகப் பார்த்து அவனுக்கு ராஜ்யவிஷயங்களை நன்றாகப் போதித்து அரசனை சிறந்தவனாகச் செய்தல் வேண்டும். மந்திரி அரசனது உயிருக்கு ஸமானம். ஆகையால் அவன் ப்ரஜாரக்ஷணதர்மத்தைப் பூர்ணமாக அனுஷ்டிக்கவேண்டும். அரசனுக்கு நான்குவித ஸ்நேஹிதர்கள் ஏற்படுவார்கள். அவர்கள், அரசனைப்போன்ற நோக்கம் உடையவர்கள், ராஜபக்தி உடையவர்கள், உறவினர், கொடையால் கவரப்பட்டவர்கள், ஆகிய இவர்களே. இவர்களுள் உறவினர்களை ஒருக்காலும் நம்பவே கூடாது. அவநம்பிக்கைப் படுவதாகவும் காட்டிக் கொள்ளக் கூடாது. முதல் விதமான ஸ்நேஹிதர்களையும் நான்காவது விதமான ஸ்நேகிதர்களையும் அதிகமாக நம்பிவிடக் கூடாது. ராஜபக்தி யுடையவர் களைத்தான் அரசன் எப்பொழுதும் நம்பவேண்டும்.

**வினா** 38.- அரசன் எவ்வாறு நடந்து நம்பக்கூடாதவர்களையும் தன் பக்கம் சேறும்படி செய்ய வேண்டும்?

**விடை.-** அரசனுக்கு உட்பகை வெளிப்பகை என இரண்டு விதப் பகையுண்டு, அதில் உட்பகையோடு சேர்ந்தவர்களே முற்கூறிய மூன்றுவித ஸ்நேஹிதர்களும். உட்பகையை தண்டனை கோபம் முதலியவைகளால் அடக்க முயலவே கூடாது. ஸமாராதனை செய்தல், மன்னித்தல், ஸமாதானம், மதிப்பு முதலியவைகளால் உட்பகையை வெளிவரவொட்டாது அழுத்திவிடவேண்டும். எப்பொழுதும் குளிர்ந்த வார்த்தையே விரோதிகளையும் ஸ்நேஹிதர்களாக்கும். ஆகவே அரசன் இந்த

உபாயத்தைக்கைவிடவே கூடாது. வெகு தந்த்ரமாக ஸமயோசித புத்தியோடு உட்பகையை தலை எடுக்கவொட்டாது: அரசன் அடிக்கவேண்டும். நாட்டில் உத்யோகஸ்தர் செய்யும் அந்யாயங்களையாராவது ஒருவன் எடுத்துக்காட்ட வருவனாயின் அவனை உத்யோகஸ்தர் கொடுமைகளிலிருந்து அரசன் முதலில் காப்பாற்றி ரஹஸ்யமாகத்தன் அரண்மனையிலேயே வைத்துக்கொண்டு அவன் சக்திக்கு. ஏற்ற வேலையைக் கொடுத்து அவன் மூலமாக ஸாவதானமாய் சீர்திருத்தங்களை ஸமயத்துக்குத் தக்கபடி செய்து அந்யாயத்தை அடக்கவேண்டும். இவ்வாறின்றி, அந்யாய ஸமாசாரம் தெரிந்ததும் அவஸரமாக சீர்திருத்தத் தொடங்கினால் உத்யோகஸ்தர்கள் விரோதிகளாக ஏற்பட, உட்பகை மூளத் தொடங்கும். ஆதலால் அரசன் வெகு தந்த்ரமாக உட்பகையை எழவொட்டாது நசுக்க வேண்டும்.

**வினா** 39.- அரசன் தன்னைச்சுற்றிலும் எம்மாதிரியுள்ளவர்களை வைத்துக் கொள்ள வேண்டும்?

**விடை.**- அரசனைச் சுற்றியிருப்பவர் நல்ல குடிபிறந்தோர், ராஜஸேவை செய்து பழகியவர், புத்திமான்கள், திடச்சித்தமுடையவர்கள், ராஜ்ய தந்த்ரம் உணர்ந்தவர்கள், ரஹஸ்யங்களை வெளிவிடும் குணமில்லாதவர்கள், ஆகிய இவர்களாகவே இருக்கவேண்டியது. இவர்களை எந்தக் காலத்திலும் அரசன் அலக்ஷ்யம் செய்யவேகூடாது. இவர்களோடு அடிக்கடிகலந்து பேசித்தான் அரசன் ராஜ்யகாரியங்களைச் செய்யத் துணியவேண்டும். அரசன் சொல்லைக் கைவிடவே கூடாது.

**வினா** 40.- ராஜ்ய தந்த்ரங்களுள் முக்யமானது யாது?

**விடை.**- எப்படிப்பட்டவனையும் முழுவதும் நம்பாது, நம்பவில்லை என்பதை வெளிக்காட்டாது, ஒவ்வொருவனிடமிருந்தராஜ்யஸுக விஷயத்தில் எவ்வளவு கிரஹிக்கலாமோ அவ்வளவையும் க்ரஹித்துக்கொண்டு தன் அறிவுக்கு நேரே தெரிந் தவைகளை விடாது கொண்டு படிப்படியாக தொழில் நடத்துவதே ராஜ்யதந்த்ரங்க ளின் ஸாரம்.

**வினா** 41.- அரசன் ஸந்யாஸிகளை எவ்வாறு நடத்தவேண்டும்?

**விடை.**- ஸந்பாஸிகளைக் கண்ட மாத்திரத்தில் அவர்களை அரசன் பூஜித்து தனது ரஹஸ்யங்களை அவர்களிடம் கூறவேண்டும். அவர்களை ஆதரித்து மஹா மரியாதையுடன் வைத்திருக்கவேண்டும். ஸந்யாஸிகளை அரசன் எக்காலத்தும் நம்பவேண்டும். அவர்கள் குணத்தைக்கண்டு திருடர்களும் நடுங்குவர். சிறந்த ஸந்யாஸிகளையே, கூடுமாகில், அரசன் தன்ஸொத்துக்களுக்குக் காவலாக வைத்து அவர்கள் புத்திமதிப்படி நடக்கவேண்டும். ஆனால் அரசன் ஸந்யாஸிகளிடம் அடிக்கடி சென்று மாத்திரம் காத்திருந்து துதிக்கவேகூடாது. விரோதி ராஜ்யத்திலி ருக்கும் ஸந்யாஸிகளைக் கூட அரசன் நன்குமதிக்கவேண்டும்.

**வினா 42.-** எவ்வாறு ராஜ்யத்தை அரசன் ஆண்டுவர வேண்டும்?

**விடை.-** ஒவ்வொரு க்ராமத்திற்கும் ஒரு அதிகாரி ஏற்படுத்த வேண்டும்; பத்து க்ராமங்களுக்கு ஓர் மேல் அதிகாரியும், இரண்டு அதிகாரிகளுக்குமேல் ஓர் உத்யோ ஹஸ்தனும், 100- க்ராமங்களுக்கு மொத்தமாக மேல்பார்வை செய்வதற்கு ஓர் அதிகாரியும், 1000-க்கு ஓர் சிறந்த அதிகாரியும் ஏற்படுத்தித் தன் ராஜ்யத்தைப்பிரிக்க வேண்டும். ஒவ்வொரு க்ராமாதிகாரியும் அங்குள்ள ஒவ்வொருவனுடைய ஸ்திதியையும் தெரிந்து கொள்ள வேண்டும். அங்கு ஏதாவது கொடிய தொழில் செய்யப்பட்டால், அதன் தண்டனை விஷயமாக மேல் உத்யோ கஸ்தனுக்குத் தெரிவிக்கவேண்டும். க்ரமம்வரையில் இந்த அதிகாரியே ராஜாவைப்போல் நடந்து கொள்ளவேண்டும். இவன் கொஞ்சம் வரி போட்டு மேல் உத்யோகஸ்தனுக்குக் கொடுக்கவேண்டும். இம்மாதிரி பத்துப்பெயர்கொடுக்க 10-க்ராமங்கள் ஒன்றுக்கு உள்ள மேல் அதிகாரி ஜீவிக்க வேண்டும். இம்மாதிரியே 20-க்ராமாதிகாரி தனக்கு அடுத்த கீழ்ப்படியில் இருப்பவர்களால் ஜீவிக்கவேண்டும். 100- க்ராமாதிகாரி அரசனால் ஸன்மானிக்கப்பட்டு ஒரு நல்ல க்ராமத்திலிருந்துவரும் வரும்படியைக் கொண்டு ஜீவிக்கவேண்டியது. இந்த ஸொந்த க்ராமம் 1000-க்ராமாதிகாரியின் கீழ் இருக்க வேண்டியது. 1000- க்ராமாதிகாரி ஜீவனத்திற்கு, ஓர் நல்ல பட்டணம் விடப்படவேண்டும். இந்த அதிகாரிகள் நடவடிக்கைகளை, ஓர் புத்திமானான மந்திரி மேல்பார்வை பார்க்கவேண்டும். இந்த மந்திரிக்கு வேவுகாரர் முதலியோர் இருக்க வேண்டும். அரசன் பொதுவாக ஒவ்வொரு தொழிலாளியின்வரும்படி,வேலைக்குச் செய்யவேண்டிய செலவு, வ்யாபார நிலை முதலியவைகளை உத்தேசித்து தகுந்த வரி போடவேண்டும். அதிக வரியால் ஜனங்களை அரசன் வருத்தக் கூடாது. ஏழைகளை வரியால் கஷ்டப்படுத்தவே கூடாது, வரிவாங்குவதிலும் அதிகமாகக் கஷ்டப்படுத்தாது குளிரப் பேசியோ பயப்படுத்தியோ வாங்க வேண்டும். சிற்சில ஸமயங்களில், வரிப்பணத்தால் தான் செய்யும் பொது நன்மைகளையும் எடுத்துக்கூற வேண்டும். வைச்யர்களிடம் அரசன் ஸ்நேஹமுடையவனாக இருத்தல் வேண்டும். இவைகள் மூலமாக ராஜ்யத்தை அரசன் ஆண்டு வர வேண்டும்.

**வினா 43.-** அரசன் அதிக வரி வாங்கவேண்டுமாகில் எவ்வாறு முயல வேண்டும்?

**விடை.-** வரிகொடுப்பவனுக்குக் கஷ்டம் தோன்றாமலிருக்கும் படி, கன்றுக்குட்டியின் மேல் சிறுபாரங்கள் ஏற்றி முடிவில் பெரும் பாரம் தாங்கப் பழக்குவது போல், கொஞ்சம் கொஞ்சமாக வரியை ஏற்றி நாளடைவில் தனக்கு வேண்டிய அதிக பணத்தைச் சேகரிக்க வேண்டும். இதனோடுகூட அவர்கள் பயப்பட்டாவது அல்லது அரசன் கஷ்டத்தை உணர்ந்தாவது கீழ்ப்படிந்து நடப்பதற்கு வேண்டிய ஏற்பாடுகள் செய்ய வேண்டும். தலைவர்களாய் இருப்பவர்களை அரசன் முதலில் கையுள் போட்டுக் கொண்டு, சிற்சில இடங்களில் சண்டைகள் கூட உண் டாக்கிப்பின்னர் ந்யாயம் தீர்த்து, அரசன் வேண்டிய வரிகளை அடையவேண்டும். தன் உத்தரவின்றி அதிகவரி வாங்கும் உத்யோகஸ்தர்களை அரசன் தகுந்தபடி தண்டிக்க வேண்டும். கள்ளுக்கடை, சூதாடும் இடம், நாடக சாலை, தேவடியாள் வீடு

இவைகளுக்குமெதுவாக அதிக வரியிட்டு, முடிவில் இவைகளை ஒழித்து விடவேண்டும். ராஜ்யத்தில் அதிகப் பிச்சைக்காரர்கள் இல்லாதபடி செய்யவேண்டும். தானும் பணக்காரப் பிரஜைகளுமாகச் சேர்ந்து அதிகஜனங்களை பிச்சை எடுக்காதபடி பரோபகாரங்கள் செய்ய வேண்டும். தொழிலாளிகளுக்கும் வ்யாபாரிகளுக்கும் தமது லாபவிஷயத்தில் பயம் ஏற்படாதபடி அரசன் காக்கவேண்டும். இம்மாதிரி நடந்து கொண்டால் அரசனுக்குப்ரஜைகளிடத்திலிருந்து அதிகப்பணம் எளிதில் வாங்க முடியும்.

**வினா** 44.- அரசன் ராஜ்யம் ஆளுங்கால் தன் விஷயமாக என்ன ஏற்பாடுகள் செய்து கொள்ள வேண்டும்?

**விடை.-** முதலில் தனக்கு என்னென்ன கெட்ட பழக்கங்கள் உண்டு, எவ்விஷயங்களில் மனம் குழம்பும், தன் மடத்தனமான நடத்தைகளுக்குக் காரணங்கள் யாவை என்பவற்றை நன்குணர்ந்து தன்னை சீர்திருத்திக்கொள்ள வேவுகாரர் மூலமாக தன் நடத்தைகளையும், ராஜ்யம் ஆளும் முறமைகளையும் பற்றி ஜனங்களுக்கு உள்ள அபிப்ராயம் இன்னது என்பதைத் தெரிந்துகொள்ள வேண்டும். தன்னைப் பற்றி பலர் பல விதமாகத்தான் பேசுவார்கள். கெட்ட அபிப்ராயங்களை அரசன் அதிகமாகக் கேள்விப்பட்டால் கோபங்கொள்ளாது அவை களிலிருந்து தான் எவ்வளவு சீர்திருத்த முடியுமோ, அவ்வளவையும் கவனித்து நடக்கவேண்டும். தன்னை வீணாகக் குற்றம் கூறுபவனை ஸமயம் பார்த்து ந்யாயம் கூறி அல்லது முடிவில் கண்டித்து ஜாக்ரதையாக அடக்க வேண்டும். எவ்வழியிலும் அரசன் தனது ஆட்சியை ஜனங்களுக்கு ஸுகமாக்க வேண்டும். இந்த விஷயமாக முன்காலத்தில் **உத்தயருக்கும் மாந்தாதாவுக்கும்** ஸ்ம்வாதம் நடந்தது.

**வினா**45.- யுத்த முறைகள் என்ன?

விடை.- எந்த ராஜ்யத்துள் யுத்தத்திற்காக அரசன் சென்ற போதிலும், முதலில் அந்த அரசனும் அவன் ப்ரஜைகளும் தனக்குக் கீழ்ப்படிந்து கப்பம் செலுத்துவார்களா என்று பொதுவாகக் கேட்கவேண்டும். அதற்கு அவர்கள் இசையாவிடில், யுத்தம் தொடங்கலாம். யுத்தத்தில் அரசன் தர்ம யுத்தத்தையே செய்யவேண்டும். எதிரி எவ்வாறு எந்த எந்த ஆயுதங்களுடன் இருக்கிறானோ அது போலவே தானும் இருக்கவேண்டும். ஒவ்வொருவன் ஒவ்வொருவனை எதிர்க்கவேண்டும். பல பேர்கள் சேர்ந்து ஒருவனை எதிர்த்துச் சண்டையிடவே கூடாது. விஷம் ஏற்றிய அம்புகளை ஒருபொழுதும் உபயோகிக்கக் கூடாது. அதிக காயப்பட்டவன், இளைத்தவன், ஆயுதம் ஒடிந்து வருந்துபவன், சரணமென்று அடைந்தவன், ஓடுபவன், ஸ்திரீ, குழந்தை, கிழவன் இவர்களிடம் யுத்தமே செய்யக்கூடாது. ஓர் போர்வீரன் காயப்பட்டு விழுந்தால், அவனை அவன் வீட்டிற்காவது அனுப்ப வேண்டும், அல்லது ஜயித்தவன் அவனைத் தன் வீட்டிற்குக் கொண்டு போய் ஸ்வஸ்தப்படுத்தி ஊருக்கு அனுப்பவேண்டும். அதர்மமாக பின்னே இருந்து அடித்தல், வேறொருவனோடு போர் செய்யுங்கால் இடையில் வந்து திடீரென்று அடித்தல் ஆகிய இவைகளைச் செய்து யுத்தம் செய்யக் கூடாது. யுத்தத்திற் பிடிபடுபவர்களிடத்தில் அரசன் ஜாக்ரதையாக நடந்துகொள்ளவேண்டும். ஒருஸ்திரீ அகப்பட்டுக்கொண்டால் அரசன் அவளை ஒரு

வருஷம் வரையில் அன்புடன் வைத்திருந்து, அவள் ஸம்மதப்பட்டால் அவளைக் கல்யாணம் செய்துகொள்ளலாம். இல்லாவிடில் அவளை ஸ்வந்த வீட்டிற்கு அனுப்பி விட வேண்டும். மரண தண்டனை விதிக்கப்பட்டவர்களுடைய ஸொத்தை அரசன் ஒருநாளும் அபஹரிக்கவே கூடாது. ப்ராஹ்மணர்கள் சண்டை நடக்கும்பொழுது மத்தியில் வந்து விலக்கினால் உடனே சண்டையை நிறுத்திவிடவேண்டும். யுத்தமுகத்தில் யார் வில்லெடுத்து வந்தாலும்ஸரி, அவர்களை மனச்சஞ்சல மில்லாது க்ஷத்திரியன் எதிர்த்துச் சண்டை செய்யவேண்டும். அவர்களைக் கொல்லும்படி நேர்தாலும் அவனுக்குப் பாபமில்லை.

**வினா** 46.- இக்கொடுந் தொழில் செய்யும் க்ஷத்ரியனுக்கு நற்கதி வருவதெப்படி?

**விடை.-** அரசன் யுத்த முகத்தில் இவ்வாறு தன் தர்மப்படி செய்யவேண்டும். இப்படி இருப்பினும் பின்னர் அவன் செய்யும் துஷ்ட நிக்ரஹம், சிஷ்டபரிபாலனம், ப்ரஜா ரக்ஷணம், பொது நன்மைக்கு உழைத்தல், முதலியநற் தொழில்களே அவனை மேன்மைப்படுத்தும். மேலும் தான் எவ்வளவு தடுத்தும் தடுக்க முடியாததாயும், தன் பக்கத்திலேயே ந்யாயமுள்ள தாயுமிருக்கையில் ஏற்படும் யுத்தத்தில் அரசன் செய்யும் கொடுந்தொழில்கள்யாவும் பாபச் செயல்களே யல்ல. முன் வைத்த அடி பின் வைக்காத தீரத்வம், தர்மமாக யுத்தம் செய்தல், மரணத்தைத் த்ருணமாக எண்ணுதல், தன் பக்கமாக இருக்கும் ந்யாயத்தை நிலைநிறுத்த எண்ணுதல் ஆகிய இவைகளே கொலையாகிய கொடுந்தொழிலை யுத்தகளத்தில் சிறப்புற் றோங்கும்படி செய்கின்றன.

**வினா** 47.- யுத்தத்தில் இறக்கும்படி நேரிடும் க்ஷத்ரியன்கதி என்ன?

**விடை.-** முன்காலத்தில் இந்த விஷயமாக **இந்த்ரனுக்கும் அம்பரீஷருக்கும்** ஓர் ஸம்வாதம் நடந்திருக்கிறது. அம்பரீஷர் ஓர் நாள் ஸ்வர்க்கம் போகையில் அங்கு தன் ஸேனாதிபதி என்பவன் ஸுகிப்பதைக் கண்டு இந்திரனை நோக்கி, “என்ஸேனாதிபதிக்கு இவ்வளவு சிறப்புவரக் காரணம் என்ன"? என்று கேட்டார். அதற்கு இந்த்ரன் 'யுத்தம் ஓர் யாகத்திற்கு ஸமம். யானைகளே ஹோதா, குதிரைகளே அத்வர்யூ, எதிரிகளின் மாம்ஸங்களே ஆஹுதிகள், ரத்தமே நெய், நாய் நரி பேய் கழுகுகளே ஸதஸ்யர்கள், ஆயுதங்களே தர்விகளும் கரண்டிகளும், கத்தியே களரும் தடி, யுத்தத்தில் உண்டாகும் சப்தங்களே மந்த்ரங்கள், விழும் அடிகளே யாக விஷயமாகச் செலவிடும் பணம், முடிவில் ஓடும் ரக்தப்பிரவாஹமே யாகபலன், முண்டங்களே யூபஸ்தம்பங்கள், வாத்யம் முதலியவைகளே உத்காதா; இந்த யாகத்தில் முன்வைத்த காலை (பயத்தால்) பின்வைக்காது சண்டையிடுவதே தீக்ஷை. யுத்தகளமே யாகவேதி. இந்த யுத்தமாகிய யாகத்தில் தைர்யமாகச் சண்டையிட்டு இறப்பவனுக்கு உடனே மேலானஸ்வர்க்க பதவியும் ஸுகமும் கிடைக்கும். இவனுக்காக ஒருவரும் உலகில் துக்கிக்கமாட்டார்கள்' என்றான். ஜனகரும் **ப்ரதர்தன்னை** எதிர்த்து யுத்தம் செய்யப் புகும்முன் தனது போர்வீரர்களை நோக்கி “யுத்தத்தில் முன்வைத்த கால் பின்வைக்காது சண்டை செய்யுங்கால், இறக்கும்படி நேரிட்டபோதிலும் அவன் அடையும் வீரஸ்வர்க்கத்தையும்,

பயங்குள்ளிகள் உயிரோடு திரும்பியபோதிலும் அடையும் அவமானத்தையும், பின்னர் அவர் சிக்கிக்கொள்ளும் நரகத்தையும் வர்ணித்து அவர்களை உத்ஸாஹப் படுத்தினார்." ஆகவே யுத்தத்தில் இறக்கும்படி நேரிடும் வீரனுக்கு வீரஸ்வர்க்கமே ஒழிய வேறில்லை.

**வினா** 48.- ராஜா எவ்வாறு யுத்தத்திற்குத் தயாராக வேண்டும்?

**விடை**:- யுத்தம் யுத்தம் தொடங்கும் முன்னரே ஸாமதானபேதங்களைத் தகுந்தபடி உபயோகப்படுத்தித் தன்பக்கத்திலிருப்பவர்கள் எதிரி பக்கம் போகாமல் தடுத்து எதிரி பக்கத்தவரைத் தன்பக்கத்தில் கூடியவரையில் இழுக்கமுயல வேண்டும். சண்டைக்குப் போகும் முன், கவசங்கள் ஆயுதங்கள், முதலியவை களையும் நால்வகை ஸேனைகளையும் ஒழுங்குபடுத்திக் கொள்ள வேண்டும். அதிக உஷ்ணமும் குளிரும் இல்லாததாயும், பயிர்கள் விளையும் தருணமாயும், தண்ணீர் கஷ்டமில்லாத காலமாயும், உள்ள சித்திரை முதலிய மாதங்களில் யுத்த யாத்திரை செய்ய வேண்டும். எதிரியினுடைய நிலையையும் நன்றாகக்கவனித்து அதற்கேற்ப ஸேனையைத் துரிதமாகவோ மெதுவாகவோ நல்லவழியே நடத்தவேண்டும். முன்புறம் எப்பொழுதும் தீரர்களே இருக்க வேண்டும். படைவீடு காட்'டின் அருகாமை யில் கட்டவேண்டும். காற்று எதிராக இல்லாத இடத்திலிருந்து சண்டை தொடங்க வேண்டும். யுத்தகளம், சேற்று நிலம், கட்டுக் கடைத் தண்ணீர், குழிகள், கற்கள் முதவியவைகள் இல்லாததாய், ஸமபூமியாக இருத்தல் வேண்டும். காலாள்படை பொதுவாக முக்யம், குதிரைப்படை நன்றாக வெயில் அடிக்கும் தினத்திர்க்கும், யானைப்படை மழைக்காலத்திற்கும் மிக உபயோகம். இவைகளை உத்தேசித்து காலத்திற்குத் தகுந்தபடி ஸேனைகளை உபயோகிக்க வேண்டும். ராஜ்யத்தைப் பிரித்து அதிகாரிகள் ஏற்படுத்துவதுபோல், ஸேனைகளைப் பிரித்து தலைவர்களை ஏற்படுத்த வேண்டும். எல்லோரிடமிருந்தும் யுத்தத்திற்கு முன்னரே 'பிரியாது சண்டையிட்டுஜயிப்போம்' என்று உறுதிவாக்கைப் பெறவேண்டும். பின்னர் 'பயங்குள்ளிகள் பின்னடையட்டும்' என்று கூற வேண்டும். இதன்பின்பு திடச்சித்தத் துடன் சண்டையைத் தொடங்கவேண்டும்.

**வினா** 49.- சண்டையில் ஜயம் வருவதைக் குறிப்பிக்கும் அடையாளங்கள் எவை?

**விடை**.- படையில் உள்ள மனிதர்கள் ஜந்துக்கள் எல்லாம் மிகுந்த உத்ஸா ஹத்துடன் இருந்தால் அந்த ஸேனைக்கு, ஜயம்வரலாம். சகுனங்களும் பின்வரும் ஜயாபஜயங்களை குறிப்பாகக்காட்டும். படைவீரர்கள் சுத்த மனதுடனும் அன்புடனும் இருப்பது, எதிரிகளின் சங்கதிகள் வேவுகாரர்கள் மூலமாக அதிகமாக வெளிப்படுவது, வெறுப்பு, எதிரிகளை வருத்தவேண்டும் என்ற கெட்ட எண்ணங்கள் அரசன் மனதில் இல்லாதிருத்தல் முதலியவைகளே ஜயக்குறிகள்.

**வினா** 50- விரோதிகளை எவ்வாறு நடத்தவேண்டும்?

**விடை.-** விரோதிகளை சண்டையாலேயேதான் வேண்டும் என்று எண்ணி விடக் கூடாது. கோபம், பயம், ஸந்தோஷம் முதலியவைகளை ரஹஸ்யமாக வைத்துக் கொண்டு விரோதிகளை திடீரென்று தாக்கவேண்டும். விரோதிகளிடம் நம்பிக்கைவைக்கவும் கூடாது, அவநம்பிக்கைப்படுவதாகவும் காட்டிக்கொள்ளக் கூடாது, விரோதிகளை தோற்கடித்ததின் பின்பு மிகுந்தஜாக்ரதையாக இருக்க வேண்டும். வேவுகாரர் மூலமாக விரோதிகள் மத்தியில் சண்டைகள் உண்டாக்கி அவர்கள் பலத்தைக் குறைக்க வேண்டும். ஸாமதான உபாயங்களையும் ஸமயம் அறிந்து உபயோகப்படுத்தித் தன்னைவிடப் பெரிய விரோதிகளை அடக்கவேண்டும். சிற்சில ஸமயங்களில் தந்த்ரமாக பலவானான விரோதியை வீழ்த்தவேண்டும். இதன் பிறகு ப்ராஹ்மணர்கள் மூலமாகவிரோதிகளை நாசம் செய்யும் ஹோமங்களையும் செய்ய வேண்டும்.

**வினா** 51.- உத்யோகஸ்தர்களால் எதிர்க்கப்பட்டும், ஸேனைகள் அடங்காமலும், தனத்தை இழந்தும் வருந்தும் அரசன் எவ்வாறு ஸுகம் அடைவது?

**விடை.-** முன்னர் வலிகுறைந்த **கேகயராஜனுக்கும்** ஓர் ரிஷிக்கும் இந்த விஷயத்தில் ஸம்வாதம் ஒன்று நடந்திருக்கிறது. வலிகுறைந்து மறுபடியும் ஓங்குவது அஸாத்யம் என்று ஓர் அரசனுக்குத் தோன்றினால் இரண்டு விதமாக நடக்கலாம். முதலாவது உலகவிஷய நிலையாமை, விஷயங்களால் வரும் துக்கம் முதலியவைகளை எண்ணி விரக்தனாகலாம். இல்லாவிடில் தன்னைவிடபலம் அதிகமாயிருக்கும் அரசனிடம் சென்று தன் குறையைக்கூறி அவனிடம் மந்திரி முதலிய பெரிய ஸ்தானங்களில் அமர்ந்து ஸுகிக்கலாம். ராஜ்யமே வேண்டும் என்ற எண்ணம் பலம் குறைந்த அரசனுக்கு இருக்குமாகில் உடனே அவன் தந்த்ரங்கள் மூலமாக எதிரியினிடம் இருந்து கொண்டே அவன் பொக்கிஷத்தைக் குறைத்து அவனுக்கு ராஜ்யத்தில் வெறுப்புவரும்படி செய்து தன் கார்யத்தை ஸாதித்துக் கொள்ள வேண்டும்.

**வினா** 52.- அரசன் வீட்டில் செய்யவேண்டிய கார்யங்கள் யாவை?

**விடை.-** காலையில் எழுந்ததும் நித்ய கர்மானுஷ்டானாதிகளைச் செய்து முடித்து தாய் தந்தை குரு முதலிய மூவர்களையும் வழிப்பட்டுப் பின்னர் அவன் ராஜ்ய கார்யங்களைப் பார்க்கத் தொடங்க வேண்டும். அமைதியுடன் நித்ய கர்மானுஷ்டானம் முதலியவைகளை இடை இடையே தகுந்த ஸமயத்தில் செய்து கொண்டு, ஒழிந்த வேளைகளில் ஸுகங்களை மிதமாக அனுபவித்துக்கொண்டு, பகவத் பக்தியில் நடுநடுவே மறவாது பழகிக்கொண்டு தனது காலத்தைக் கழித்து வரவேண்டும்.

**வினா** 53.- அரசன் ஸத்ய அஸத்யங்களை எவ்வாறு உணர்ந்து ஒழுக வேண்டும்?

**விடை.-** அரசன் பொதுவாக ஸத்யத்தைக் கடைப்பிடித்து அஸத்யத்தை நீக்கி நடக்க வேண்டும். சிற்சில ஸமயங்களில் உள்ளதை உள்ளபடி கூறமுடியாது

ராஜ்யதந்த்ரம் நடத்தவேண்டிவரும். அப்பொழுது கூடியவரையில் உண்மையாயும், முடியாத விடங்களில் ஒன்றையும் வெளியிடாமலும், இவ்வாறு கூட நடக்க முடியாத விடங்களில் அவச்யமாக வேண்டி பொய்யையும் கூறி ராஜ்ய நன்மையை நாடுவதே அரசனுக்கு ஸத்யவழி என்னப்படும். இந்த ஸமயங்களில் அரசன் உள்ளதை உள்ளபடி கூறி ராஜ்யத்திற்கு ஆபத்து வரும்படி செய்வானாகில் அவன் பொய் சொன்னவனாவன். அரசன் கூர்மையான புத்தியால், எந்தெந்த ஸமயங்களில் வெறும் ஸத்யம் அஸத்யமாகும், வெறும் அஸத்யம் ஸத்யமாகும், மௌனம் ஸத்யமாகும் என்பதை உணர்ந்து, ராஜ்ய ஸுகத்தைநாடும் ஸத்யமும் அஸ்த்யமும் ஸத்யங்களே, ராஜ்யத்திற்குக் கேடுவிளைக்கும் ஸத்ய அஸ்த்யங்கள், அஸத்யங் களே என்ற கோட்பாட்டின்படி நடப்பதே சிறந்த வழி.

**வினா** 54.- பொதுவாக ஜனங்களுக்கு ஏற்படும் கஷ்டங்களிலிருந்து நீங்குவது எப்படி?

**விடை**.- உலகத்தில் ஸுகதுக்கங்கள் மாறி மாறி வருவது ஸகஜம். இவைகளிருந்து தப்புவதற்கு ஒரே வழிதான் உண்டு. இந்த வழி, ஸ்வதர்மாசரணம், நேர்மை, முன் கோபம் இன்மை, குளிர்ந்தவாக்கு, பெரியோருக்குப் பணிந்து நடத்தல், மதவிஷய ஆராய்ச்சி, மதத்வேஷம் இன்மை, உண்மை உறைத்தல் முதலிய நற்குணங்களில் பழகி, எதிலும் மிதத்திற்கு மிஞ்சாதிருந்து, விடாது பகவத் பக்தி செய்தல் ஆகிய இவைகள் அடங்கிய வைதிகமார்க்கமே.

**வினா** 55.- பெரியோர் சிறியோர்களைக் கண்டறிந்து நடத்தும் விதம் எப்படி?

**விடை**.- ஒரு சுடுகாட்டில் ஒரு நரி இருந்தது. அது முந்தின ஜன்மத்தில் ஓர் கொடிய அரசனாக இருந்தது. அதற்கு பூர்வஜன்ம ஞாபகம் இருந்தபடியால் மாம்ஸாதிகள் தின்னாது புல் பூண்டுகளையே தின்று பிழைத்து வந்தது. கூட இருந்த நரிகள், ஆனமட்டும் அதை மாற்றப்பார்த்தன. முடியாமல் போய்விட்டது. இப்படி இருக்கையில் அந்தச் சுடுகாட்டிற்கு ஓர் புலி வந்து தனக்குத் தகுந்த மந்திரியை ஏற்படுத்திக்கொள்ள வேண்டும் என்ற ஆவலுடன் தேடிப்பார்த்தது. இந்த நரியின் குணங்களைக் கேட்டு தன் மந்திரி நிலையில் இதை இருக்கும்படி வேண்டியது. அது ‘எனக்குப் பழக்கமில்லை. மேலும் அந்த நிலையிலிருந்தால் ந்யாயப்படி நடக்க முடியாது. நடந்தால் வீண் விரோதங்கள் ஏற்படும்' என்று எவ்வளவோ தடுத்துக் கூறுயும் கேட்காது, புலி அதை தனக்கு மந்திரி யாகும்படி கட்டாயப்படுத்தியது. நரி அவ்வாறே செய்ய, மற்றைய கீழ் அதிகாரிகளுக்கு அன்று முதல் அநியாய வழிகளில் போய் பணம் ஸம்பாதிக்க முடியாமல் போய் விட்டது. மற்றைய ஜெந்துக்கள் மிகுந்த கோபங் கொண்டு புலிக்கு ஆஹாரமாக வைத்திருந்த மாம்ஸத்தைத் திருடி, நரி வீட்டில் கொண்டு போட்டுவிட்டன. புலி வந்ததும் மாம்ஸம் காணாது கோபங்கொண்டு நரி வீட்டிலிருப்பதை அறிந்து, நரியைக் கொன்று விடும்படி உத்தரவு செய்தது. பின்னர் தன் வீட்டிலுள்ளோரது புத்திமதி களின்படி தன் உத்தரவை மாற்றி மாம்ஸம் தின்னும் வழக்கமில்லாத நரியை அழைத்து நடந்தவைகளைக் கூற, அது ‘இனிமேல் எனக்கு உத்யோகம் போதும்' என்று சொல்லி புலி எவ்வளவு கூறியும் கேட்காது 'அரசன் கீழ் காத்திருக்கும்

உத்யோகஸ்தர் கதி அபாய்கரமானது' என்று கூறிவிட்டு காடுசென்று ப்ராயோப வேசம் செய்து உயிர்விட்டது. அரசன் பெரியோர் சிறியோர்களை, ஆழ்ந்த விசாரணை, நேரிடப்பார்த்தல் முதலியவைகளைச் செய்து உணர்ந்து பெரியோர் களை மந்திரிகளாக்கிக்கொள்ளல் வேண்டும். பின்பு, தனக்கே நேரிட ஸந்தேஹம் வந்தால் ஒழிய, கேட்பார் பேச்சைக் கேட்டுக் கொண்டு பெரியோர்களை ஸந்தேஹிக் கவே கூடாது. அவ்வாறு செய்தால் அவர்களை இழக்கும்படி நேரிடும்.

**வினா** 56.- எப்பொழுதும் அரசன் எவ்வாறிருக்க வேண்டும்?

**விடை.**- அரசன் எப்பொழுதும் சுருசுருப்பாக இருக்கவேண்டும். சேம்பேரியாக இருக்கவே கூடாது. முன் ஒரு காலத்தில் ஓர் ஒட்டகம், தான் இரை தேடுவதற்காகத் தன் கழுத்து நீளவேண்டும் என்று வேண்டிக்கொண்டது. பகவான் அருளால் அவ்வாறே ஆக அது இருந்த விடத்தி லிருந்துகொண்டே கழுத்தை நீட்டி ஆஹாரம் உண்ணத் தொடங்கியது. அது வர வர சேம்பேரியாகி நடப்பதைக்கூட நிறுத்தி விட்டது. இப்படி இருக்கையில் காற்றும் மழையும் உண்டாக அதுசேம்பேரித் தனத்தால் கழுத்தைகூடச் சுருக்கிக் கொள்ளாது முகத்தை அருகாமையிலிருந்த ஓர் குஹையுள் விட்டுவிட்டது. அங்கு மழைக்கு ஒதுங்கிய ஓர் நரி, பசி அதிகரித்ததால் அதன் முகத்தைக் கடித்துதின்னத் தொடங்கிவிட்டது. பின்னர் ஒட்டகம் எவ்வளவு முயன்றபோதிலும் நரியிடமிருந்து தப்புவிக்க முடியவில்லை. முடிவில் நரிக்கு இரையாகி இறந்தது. இது போல சேம்பேரி அரசன் மிகுந்த துக்கத்திற்கு ஆளாவான்.

**வினா** 57.- பலவானான விரோதியிடம் அரசன் எப்படி நடந்து கொண்டு தன் ராஜ்யத்தைக் காக்கவேண்டும்?

**விடை.**- முன்னொருகாலத்தில் ஸமுத்திரமானது ஆறுகளை நோக்கி, 'உங்கள் வெள்ளத்தில் பெரிய மரங்களை எல்லாம் அடித்துக்கொண்டு வருகிறீர்களே, ஏன் அதிக நாணற்புற்களைக் கொண்டுவருவதில்லை' என்றது. அதற்கு ஆறுகள் நாங்கள் வரும் வழியில் பெரிய மரங்கள் தான் எங்களை எதிர்த்து நின்று அகப்பட்டுக் கொள்வது. நாணற் புற்களோ நாங்கள் வரும்பொழுது வணங்கிப் பின்னர் நிமிருகின்றன. எங்களால் அவைகளை வேரோடு பேர்க்க முடியவில்லை' என்றன. இதுபோல பலவானான அரசன் தன்னொடு சண்டை செய்ய இடங்கொடுக்காது நயமாகவே வணங்கி. அவனிடம் இருந்து தப்புவித்து தன் ராஜ்யத்தை ஓர் அரசன் தக்கவைத்துக் கொள்ள வேண்டும்.

**வினா** 58.- அதிகாரிகளின் அவமதிப்பான வார்த்தைகளைப் பெருந்தன்மை உடைய மஹான்கள் எவ்வாறு கொள்வர்?

**விடை.**- பெரியோர்கள் கோபங்கொள்ளாது அந்த வார்த்தைகளை மதிக்கவே மாட்டார்கள். இதனால் மஹான்களின் பாபங்களில் பாதி, அதிகாரிகளுக்குப் போய்விட அவர்கள் பாபம் குறையும். இந்தமாதிரி நடந்துகொண்டது அந்த அதிகாரி மூலமாகவே வெளியாகி, வித்வானது மேன்மையையும் அதிகாரியினது கீழ்மையையும் பலரறிய வெளிப்படுத்தும். அவமதிப்பான வார்த்தைகளை

அலக்ஷ்யம் பண்ணி மனங்கலையாது திடமாகத் தம் வழியே நடப்பதே பெரியோருக்கு அழகு. அவ்வாரின்றி அவமதிப்பான வார்த்தைகளைத் திருப்பினால் வித்வானும் அதிகாரியின் அதோகதியை அடைவான். வீணாகச் சண்டையும் அதிகரிக்கும். ஆதலால் அந்த அதிகாரியோடு பேசுவதைக் கூட நிறுத்திவிடவேண்டியது.

**வினா** 59.- அரசன் ராஜ்யத்தின் பொது நன்மையைக் குறித்து முக்யமாகக் கவனிக்கவேண்டியது என்ன?

**விடை.**- உத்யோகஸ்தர் நியமிக்கும் விஷயத்தையே அரசன் முக்யமாகக் கவனிக்க வேண்டியது. ஒர் காட்டில் ஒர் ரிஷி தபஸூ செய்து கொண்டிருந்தார். அவர் அருகில் காட்டு மிருகங்கள் எல்லாம் ஸஹஜமாக வந்துபோவது வழக்கம். ஒரு நாய் மாத்திரம் அவரை விட்டுப் பிரியாது அவரது பாதாரவிந்தங்களிலேயே இருந்தது. இப்படி இருக்கையில் ஓர் சிறுத்தைப் புலி அங்குவர அதைக்கண்டு அந்த நாய் மிகப் பயந்து போயிற்று. அருகாமையிலிருந்த நாய் மேல் கருணை கூர்ந்து ரிஷி அந்த நாயை சிறுத்தையாக்கினர். வந்தசிறுத்தை ஸாதாரணமாகப் போய் விட்டது. இவ்வாறு ஒவ்வொரு பெரிய மிருகமும் அருகேவர அதற்கு ஏற்றபடி இந்த நாயையும் ரிஷி பெரிய மிருகமாக்கி வந்தார். முடிவில் இந்த நாய் ரிஷி கிருபையால் சிங்கத்தைக் கொல்லும் சரபரூபத்தையும் அடைந்தது. கொஞ்சநாள் கழிந்ததும் தனக்குவேண்டிய மாம்ஸ் ஆஹாரம் அகப்படாமல்போக நாய்ச் சரபம் ரிஷியையே கொன்று தின்ன வந்து விட்டது. ரிஷி கோபங்கொண்டு 'அதை முன்போல நாயாக்கி விட்டனர். இது போல அபிமானம் கருணை இவைகளை முன்னிட்டு அரசன் யோக்யதை இல்லாத ஒருவனை மேல் அதிகாரத்தில் நியமிக்கவே கூடாது. அப்படிச் செய்தால் முடுவில் அரசனுக்கே மிகுந்த கேடு உண்டாகும். ஆகவே ஒவ்வொரு உத்யோகத்திற்கும் அரசன் தகுந்தவர்களையே நியமிக்க வேண்டும்.

**வினா** 60.- நான்கு வித புருஷார்த்தங்களின் ஸ்வரூபம் என்ன?

**விடை.**- தர்ம அர்த்த காம மோக்ஷம் (அறம், பொருள், இன்பம், வீடு) என்பவை களே நான்குவித புருஷார்த்தங்கள். இவைகளில் முதல் மூன்றினுள் பின்னதற்கு முன்னது காரணமாகும். இப்படி இருப்பினும் இகலோக விஷயங்களுக்கு அர்த்தமே (பணமே) மிக முக்யம். இதனால் தான் தர்மமும் காமமும் கைக்கூடும். இப்படி இருப்பினும் தர்மமே மிகச் சிறந்தது. தர்மம் தவறினால் அர்த்தமும் காமமும் ஒழுங்கு தவறிப்போக வீண்கஷ்டத்திற்குக் காரணமாகும். மனதின் பலம் வரவரத் தளர்ந்து கொண்டே வரும். இவைகள் எல்லாம் பயனற்றவை என்று உணர்ந்து தருணம் பார்த்து பக்குவகாலத்தில், பரம்பொருளை அடைய எண்ணி, இவைகளை விடுவதே மோக்ஷம் என்னப்படும். இதற்கும் ஆதியில் தர்மானுஷ்டான மூலமாகவரும் பெரியோர்கள் அனுக்கிரஹம் அவசியம்.

**வினா** 61.- தர்மவழி நடப்பதன் சிறப்பு எந்தத் தன்மை உடையது.

**விடை.**- இந்தவிஷயத்தில் முன்னரே த்ருதிராஷ்டிரனுக்கும் துர்யோதனனுக்கும் ஸம்வாதம் நடந்திருக்கிறது. துர்யோதனன் ராஜஸூய யாகம் முடிந்து அவமா

னப்பட்டு ஹஸ்தினாபுரி வந்ததும், த்ருதிராஷ்டிரனிடம் மிகுந்த துக்கப்பட்டுத் தனக்குப் பாண்டவர்கள் நிலை எவ்வாறு வருமென்று கேட்டான். அதற்கு அவன் "தர்மநெறி தவறாது நடந்தால் உனக்கு எளிதில் அந்தச் சிறந்தநிலை வரும். முன்காலத்தில் இந்திரன் பிரஹ்லாதரால் ராஜ்யம் இழந்து வருந்திக்கொண்டிருக் கையில் பிரஹஸ்பதியை நோக்கி 'ஸுகம் அடையும் வழ எப்படி' என்று கேட்க, அவர் 'மேலான ரஹஸ்யம் ஒன்றுண்டு. அதை சுக்ராசாரியரிடமிருந்து தெரிந்து கொள்ள வேண்டும்" என்று கூறினார். இந்திரன் அவரிடம் போக அவர் பிரஹ்லாதரிடம் சென்று கேட்கும்படி ஏவினார். அவ்வாறே செய்ய ப்ராஹ்மண உருவுடன் இந்திரன் பிரஹ்லாதரிடம் போனான். பிரஹ்லாதர் பிராஹ்மணனை நோக்கி, 'ராஜன் என்ற கர்வமே எனக்கு வருவதில்லை. என் புரோஹிதர் கூறும் வழியில் நான் நடக்கிறேன். ப்ராஹ்மணர்களுக்கு மிகுந்த மரியாதை செய்கிறேன். ஸதா ஸத்ஸங்கம் செய்வேன். மனோ நிரோதத்தில் பழகிவருகிறேன். ஆகையால் 'பொறுத்தவர் பூமியாள்வர்' என்றபடி என்னிடம் திரிலோகாதிபத்யம் தக்கிற்று' என்றார். பின்னர் வேண்டிய வரனைக் கேட்டுக்கொள்ளும்படி பிராஹ்மணருக்குப் பிரஹ்லாதர் அனுமதி கொடுக்க ப்ராஹ்மணர், 'உன் நன்னடக்கை எனக்கு வர வேண்டும்,' என்று கேட்டார். 'தந்தேன்' என்று கூற, முறையே அவரிடமிருந்து நன்னடக்கை போனதும், நேர்மை, ஸத்யம், ஸத்கர்மம், சக்தி, சிறப்பு முதலியவை கள் எல்லாம் அகன்று இந்திரனிடம் போய்ச் சேர்ந்தன. ஆகவே நன்னடக்கையால் தான் எல்லாச் சிறப்பும் உண்டாவது. ஆகையால், துர்யோதனா! இவ்வாறு நடந்து தர்மபுத்ரர் அடைந்த சிறப்பை நீயும் அடை" என்றார். இதனாலேயே தர்மநெறி தவறாது நடப்பதன் மேன்மை விளங்கும்.

**வினா** 62.- எதிர்பார்த்தல் என்பதன் ஸ்வரூபம் என்ன?

**விடை.-** ஓர் அரசன் ஓர் காட்டில் வேட்டையாடச் சென்றான். அங்கு ஓர் மானைக் கண்டு அதன்மேல் பாணம் விட்டு அந்த மானைப் பிடித்துவிடலாம் என்று ஆவலுடன் துறத்தினான். அது அரசனை அவன் பரிவாரங்களிடமிருந்து பிரித்து காட்டுள் வெகு தூரம் கொண்டுபோய் விட்டது. வெகு தூரம் போய் மான் மறைய, மிகுந்த களைப்பால் நகரமாட்டாது அரசன் ஓர் ஆசிரமத்தின் வாயிவில்வந்து விழுந்தான். அதனுள் இருந்த ரிஷி அரசனுக்கு வேண்டிய உபசாரங்கள் செய்ய அரசன் தன் கதையைச் சொல்லி, 'மனிதனிடம் இருக்கும் எதிர்பார்க்கும் குணம் பெரியதா, அல்லது ஆகாயம் பெரியதா?' என்று கேட்டான். அதற்கு அவர், நான் பதரிகாசிரமம்போயிருந்தேன். அங்குமிகுந்த ஒல்லியாக இருந்த **தனு** என்ற தபோதனரிடம் ஓர் அரசன் வந்து தன்பிள்ளை இருக்கும் இடம்தெரியாது, தான் தவிப்பதாகச் சொல்லி வருந்தினான். மேலும் எப்படியாவது தனக்குப்பிள்ளை முடிவில் கிடைத்து விடுவான் என்று தான் எதிர்பார்ப்பதாகவும் கூறினான். இதைக் கேட்டதும் தனு' என்பவர் அரசனை நோக்கி 'இவ்வுலகில் விஷயங்கள் ஸம்பந்தமாக எதிர்பார்த்தல் மிகவும் நுட்பமானது. பொதுவாகக் கூறின், என் தேகத்தைவிட விஷயஸம்பந்தமாக எதிர்பார்ப்பது மிகச் சிறியது. அது பொதுவாகப் பயனே படாது. அஸாத்யஸமயங்களிலும் நுண்ணியதான எதிர்பார்த்தல் என்ற குணம் மனிதர்களு க்கு வந்துவிடும். அதுமனிதரை மிகுந்த ஆவலுடன் தொழில் செய்யும்படி தூண்டும்' என்றார். இதைக்கேட்டு வேட்டையாடிவந்த அரசன் மான்கிடைக்கும் என்று

எதிர்பார்ப்பதை விட்டு ஸுகம் அடைந்தான். ஆகவே அரசன் வீணாக எதிர்பார்த்து மோசம் போகாது மனதை சாந்தமாக வைத்துக் கொள்ளவேண்டும்.

**வினா** 63.- ராஜதர்மத்தின் சுருக்கும் என்ன?

**விடை.**- பெரியோர்களுக்கு வந்தனை வழிபாடு செய்தல், பகவத்பக்தனாக இருத்தல், பிரஜைகளை ரக்ஷித்தல், தந்திரமாக நடந்து ராஜ்யத்தை ஸுகப்படுத்தல், பக்ஷபாதமின்றி தண்டனை விதித்து நியாயம் செலுத்துதல், விரோதிகளிடம் தகுந்தபடி நடந்து ராஜ்யத்தைத் தக்கவைத்துக்கொள்ளுதல், தர்மயுத்தம் செய்தல், முன்வைத்தகால் பின்வைக்காதிருத்தல், முன்கோபமில்லாமை, எவ்வளவு கஷ்டம் வந்தாலும் இந்த தர்மங்களை விடாதிருத்தல் ஆகிய இவைகளே ராஜதர்மத்தின் சுருக்கம்.

---

## 2. ஆபத் தர்மம்

**வினா** 64.- ராஜன் தன் குணங்களில் தவறியதாலும், பிரஜைகள் கொடுமை யாலும், எதிரியின் உபத்திரவத்தாலும் வருந்தும்கால் எவ்வாறு நடந்து கொள்ள வேண்டும்?

**விடை.**- எதிரி தர்மாத்மாவாக இருந்தால் உடனே அரசன் அவனோடு ஸமாதானம் செய்து கொண்டு ஸுகம் அடைய வேண்டும். எதிரி அக்ரமக்காரனாக இருந்தும் தனக்கு ஓர் கேடு விளைவிக்காமலிருப்பானாயின், அவனோடும் ஸமாதானம் செய்துகொள்ளலாம். எதிரி மிகுந்த அக்ரமக்காரனாயிருந்தாலும் ஸரி அல்லது யுத்தத்தில் தன் ஸ்திரீ முதலியவைகளை இழக்கும்படி நேரிட்டாலும் ஸரி இந்த ஸ்மயங்களில் அரசன் சண்டையிட்டு வீரத்தன்மையுடன் இறந்தாலும் இறக்க வேண்டுமே ஒழிய, ஸமாதானமே செய்து கொள்ளக்கூடாது.

**வினா** 65.- தர்மம் நிலைகுலைந்து திருடர் கஷ்டம் அதிகரிக்குங் காலத்தில் க்ருஹஸ்தராக இருக்கவேண்டும் என்றெண்ணும் பிராஹ்மணர் எவ்வாறு வாழ்வது?

**விடை.**- இந்த ஸமயத்தில் தான் பிரஹ்மணன் தன் புத்தி சாதுர்யத்தால் பிழைக்க வேண்டும். கொடியவர்களிடம் இருந்து தந்திரமாகப் பணங்களைப் பறித்து நல்லவர்களுக்குக் கொடுத்துத்தாமும் ஸுகிக்கவேண்டியது. இந்த ஸமயத்தில் கொடியவர்கள் விஷயத்தில் நியாயம் தவறி நடந்தாலும் பாபம் ஏற்படவே மாட்டாது.

**வினா** 66.- தர்மம் நிலைகுலைந்த காலத்தில் அரசன் எவ்வாறு நடந்து கொள்ள வேண்டும்?

**விடை.**- இந்த ஆபத் ஸம:பத்தில் கூட பிராஹ்மணாராதனத்தை அரசன் விட்டுவிடக் கூடாது. கண்டபடி கோட் சொல்லும் குணமுடைய ஜனங்கள் கூறும் அவதூறுகளை நம்பி தண்டனைகள் செய்யத்தொடங்கிவிடக் கூடாது; அவதூறுகள்

பரவிக்குழப்பம் உண்டாக்க இடமும் கொடுக்கக்கூடாது. இந்த ஸமயங்களில் எவ்வழியாலாவது அரசன் தன் கஜானாவை நிறைத்துவிட முயல வேண்டும். இதன் பின்னர் அரசன் குழப்பத்தை அடக்கி தர்மத்தை நிலை நிறுத்துவது எளிது. எல்லாம் அடங்கிய பின்னர் தன் பாபச்செயல்களைப் பலர் அறியச்சொல்லி பாபத்திலிருந்து நீங்க வேண்டும்.

**வினா** 67.- ஆபத்காலங்களில் அதிக பாபம் வாராது, அநீதியான செயல்களை எவ்வாறு செய்வது?

**விடை.**- திருடர்களுள்ளும் சிற்சில தர்மங்கள் உண்டு. அதன்படி நடந்தால் திருடர்களுக்குக் கூடப்பாபம் உண்டாவதில்லை. இந்த விஷயமாக ஓர் கதையுண்டு. முன்காலத்தில் ஓர் காட்டில் க்ஷத்ரியனுக்கும் வேடத்திக்கும் பிறந்த **காயவ்யன்** என்ற ஒரு கள்ளன் இருந்தான். அவன் வேடத்தொழிலில் மிகத்தேர்ந்தவன். அவன் வைக்கும் குறி ஒருநாளும் தவறாது. தன் தாய் தந்தையர்களை அவன் தவறாது வழிபட்டு, அவர்களை ஸுகப்படுத்துவான். பிராஹ்மணர்களிடம் அதிக மரியாதை. இவனை ஓர் கள்ளர் கூட்டம் தமக்குத் தலைவனாக்கிக் கொண்டது. அப்பொழுது அவன் அவர்களை நோக்கி 'ஓடுபவனைக் கொல்வது, பிறர்மனைவிகளைக் கற்பழிப்பது, பிராஹ்மணர் ஸொத்தை அபஹரிப்பது, ஒருவன் ஸொத்து முழுவதை யும் அபஹரிப்பது, கன்யாஸ்திரீகளைக் கெடுப்பது, கிராம நகரங்களில் தலைவன் போலவாழுவது, இவைகள் எல்லாம் அதர்மங்கள். இவைகளை மாத்திரம் செய்யாது உமது தொழிலை நடத்துங்கள்' என்று கட்டளையிட்டான். இதனால் இவனும் இவன் கூட்டமும் இகத்திலும் பரத்திலும் மிகுந்த ஸுகம்பெற்றனர். இதே மாதிரி ஆபத்காலத்திலும் செய்யும் அநியாயத்திற்கும் ஓர் ஒழுங்உண்டு. அதைமீறி நடவாது அவசியம் செய்யவேண்டிய அநியாயத்தைச் செய்துவந்தால் அரசனுக்குப் பாபமே ஸம்பவிக்காது.

**வினா** 68.- ஆபத்காலங்களில் அரசன் ஸுகம்பெறவேண்டுமாகில் எவ்வாறிருக்கவேண்டும்?

**விடை.**- ஓர் குளத்தில் மூன்று மீன்களிருந்தன. ஒன்று **ஆபத்து வருமுன் காக்கும்** திறனுடையது. இரண்டாவது **ஆபத்து வருங்கால் காக்கும்** திறனுடையது. மூன்றாவது **ஆபத்துவந்த பின் காக்கும்** திறனுடையது. ஒருநாள் மீன்கள் எல்லாவற்றையும் பிடிக்க எண்ணி ஓர் செம்படவன் குளத்தின் தண்ணீரை வடிக்கத் தொடங்கினான். தண்ணீர் குறைவதைக்கண்ட முதல் மீன், மற்றிரண்டையும் நோக்கி தண்ணீர் குறைகிறது. பின் நமக்கு என்ன ஆபத்து வருமோதெரியவில்லை. ஆகையால் ஓடும் தண்ணீரோடு நாமும் இக்குளம் விட்டு வெளிஏறி வேறோர் ஆழமான குளம் போகலாம்" என்றது. அதற்கு மூன்றாவது 'இப்பொழுது என்ன அவஸரம் இதற்கு' என்றும், இண்டாவது ஆபத்து வருங்கால் நாம் எளிதில் தப்புவித் துக்கொள்ளலாம், வீண்பயம் எதற்கு' என்றும் மறுமொழி கூறின. இதைக் கேட்டதும், முதல் மீன் ஓடும் தண்ணீர் மூலமாக வெளியேறி ஸுகம் அடைந்தது. தண்ணீர் நன்றாக வடிந்ததும் இவ்விரண்டு மீன்களும் செம்படவன் பெட்டியில் அகப்பட்டன. அப்பொழுது இரண்டாவது மீன் யோசனைசெய்து அவன் பெட்டியைக் கடித்து ஓர்

ஓட்டையை உண்டாக்கிக்கொண்டது. மூன்றாவதோ செயலற்று பிரமித்து நின்றது. செம்படவன் பெட்டியை ஓர் குளத்திற்குக் கொண்டுபோய் முழுத்தி மீன்களை அலம்பினான். அப்பொழுது இரண்டாவது மீன் தான் செய்த ஓட்டையின் வழியாக தப்புவித்துக் கொண்டது. மூன்றாவது இறந்தது. ஆதலால் ஆபத்காலத்தில் வருமுன்காக்கும் திறனுடையவனும், வருங்கால்காக்கும் திறனுடையவனும், ஸுகம் அடைவார்கள். வந்தபின்காக்கும் சேம்பேரி மிகுந்த கஷ்டங்களுக்கு உள்ளா வான்

**வினா** 69.- அநேக விரோதிகளின் இடையில் அகப்பட்டுத் தத்தளிக்கும் அரசன் எவ்வாறு நடந்துகொள்ள வேண்டும்?

**விடை**.- ஓர் காட்டில் ஓர் பெரிய ஆலமரமிருந்தது. அதன் கிளையில் ஓர் பூனையும், அதன் அடியில் ஓர் பொந்தில் ஓர் எலியும் வஸித்துவந்தன. ஒருநாள் ஒரு வேடன் வந்து மரத்தடியில் வலையை விரித்து, அதன் அடியில் சில மாம்ஸத் துண்டுகளை இரைத்துவிட்டுப் போய்விட்டான். வலையில் அநேகம் பக்ஷிகள் முதலியன அகப்பட, தினம் காலையில் வேடன் அவைகளை வீட்டிற்கு எடுத்துப் போவது வழக்கம். ஓர் இரவில் மரத்தின் மேலிருந்த பூனை மாம்ஸத்திற்கு ஆசைப்பட்டு மோசம் போய் வலையில் அகப்பட்டுக்கொண்டது. அந்த ஸமயத்தில் வளையிலிருந்து எலியும் வெளியில் வந்து மாம்ஸத்துண்டுகளைத் தின்னத் தொடங்கிற்று. வலையில் பிடிபட்ட பூனையின் மேல் பயமின்றி ஏரி நின்றுகொண்டு கூட மாம்ஸத்தைத் தின்றுவந்தது. இப்படி இருக்கையில் மரத்தின் மேல் ஓர் ஆந்தையும், மரத்தடியில் ஓர் கீரிப் பிள்ளையும் வர, அவைகள் இரண்டும் எலியைக் கொல்லத் தயாராயின. இதைக்கண்ட எலி மிகுந்த யோசனையின் பேரில் 'மூன்று விரோதிகளுள் பூனை இப்பொழுது கஷ்டத்திலிருப்பது. இதை நாம் எளிதல் வசப்படுத்திக் கொண்டு தப்பித்துக்கொள்ளலாம்' என்று தீர்மானித்துப் பூனையை நோக்கி 'எனக்கு இரண்டு விரோதிகள் வந்திருக்கின்றனர். இந்த ஸமயத்தில் நீதான் என்னைக் காப்பாற்ற வேண்டும். உன் கால்களுக்கு இடையில் நான் வந்து பதுங்கிக் கொள்ளுகிறேன். நீ என்னைக் கொல்லக்கூடாது. இப்படிச் செய்வாயாகில் நான் தப்பித்துக்கொண்டதும் உன்னை வலையிலிருந்து விடுவிப்பேன்' என்றது. பூனை இதற்கு இசைய, எலி பூனையின் கால்களுக்கு இடையில் சென்று ஒளிந்தது. ஆந்தையும், கீரியும் கொஞ்ச நாழிகைக் காத்திருந்து எலி வெளிவாராதது கண்டு பூனைக்கு பயந்து ஓடிப்போய்விட்டன. பின்னர் எலி வெளி ஏறி வலையில் இரண்டொரு கயிற்றைத்தவிற மற்றவைகளைக் கடித்துவிட்டு சும்மா இருந்தது. அவைகளையும் கடித்துத் தன்னை விடுவிடிக்கும்படி பூனை வேண்ட, புத்தியுள்ள எலி "நீயோ எனக்கு விரோதி. உன்னை இப்பொழுது விடுவித்தால் என்னை நீ தின்றுவிடுவாய். ஆகையால் வேடன் அருகாமையில் வருகையில் உன்னை விடுவிக்கிறேன். அப்பொழுது வேடனுக்குப் பயந்து நீ மரத்தின்மேல் ஏருவாயே ஒழிய என்னைத்தின்ன நிற்கமாட்டாய். ஆகையால் பொறுத்துக்கொள்' என்றது. எலி தன். வாக்கின்படி மறுநாள் காலையில் வேடன் வலை அருகில் வந்து கொண்டிருக் கையிலேயே, பூனைபை விடுவித்து விட்டு வளையுள் புகுந்து கொள்ள, பூனை பயத்தால் அவஸரமாக மரத்தின் மேல் ஏரியது. பின்னர் பூனை எலியை எவ்வளவோ தன்னிடம் வந்து ஸ்நேஹம் செய்து கொள்ளும்படி வேண்டியது. அதற்கு

எலி, நீயோ என் ஜென்மவிரோதி. உனக்கும் எனக்கும் என்ன ஸ்நேஹம்வந்தது. நீயும் நானும் ஆபத்துக்குள்ளானோம். அப்பொழுது இருவரும் தப்புவித்துக்கொள்ளுவதற்காக நான் உன்னை நேசித்தேன். இப்பொழுது நாம் இருவரும் பழய நிலைக்கு வந்துவிட்ட படியால், இனி நான் உன்னை அணுகவே மாட்டேன்' என்று ஒதுங்கிவிட்டது. இதுபோல அநேக விரோதிகளுக்கு இடையில் அகப்பட்டுக்கொள்ளும் அரசன், அபாயத்திலிருக்கும் ஒர் பலவானான விரோதிக்குக்கீழ்ப்படிந்து அவனுக்கு உபகாரம் செய்து மற்றவர்களிடம் இருந்து தப்புவித்துக்கொண்டு தன் ராஜ்யத்தைக் கைப்பற்றிக் கொண்டபிறகு அந்த விரோதியினிடமிருந்துகூட ஒதுங்கிவிடவேண்டும்.

**வினா** 70.- நம்பிக்கையான விடத்தில் ஸந்தேகம் அல்லது மனஸ்தாபம் ஏற்பட்ட காலத்தில் அரசன் எவ்வாறு நடந்து கொள்ள வேண்டும்?

**விடை.- பிரம்மதத்தன்** என்ற ஒரு அரசன் இருந்தான். அவன் **புஞ்ஜனி** என்ற ஒரு பறவையை வளர்த்து வந்தான். அதற்கு ஓர் குஞ்சு உண்டாயிற்று. அதே ஸமயத்தில் அரசனுக்கும் ஓர் ஆண்பிள்ளை பிறந்தது. புஞ்ஜனி தினம் தோறும் இரண்டு பழங்களைக் கொண்டு வந்து ஒன்றைத் தன் குஞ்சுக்கும் மற்றொன்றை அரசன் பிள்ளைக்கும் கொடுப்பது வழக்கம். இப்படி இருக்கையில் புஞ்ஜனி இறை தேடப்போன ஸமயம் பார்த்து, ராஜகுமாரன் பறவைக்குஞ்சுடன் விளையாடத் தொடங்கினான். விளையாட்டாய் அவன் அந்தக்குஞ்சின் கழுத்தைப் பிடித்து அமுக்க அது இறந்தது. பறவை வந்து பார்த்து மிகுந்த கோபம் கொண்டு ராஜகுமாரன் கண்ணைத் தன் நகத்தால் கொடைந்து பிடுங்கிவிட்டது. இதன் பின்னர், அது அரண்மனையை விட்டு வெளியேரத் தலைப்பட்டது. இதைக்கண்ட பிரம்மதத்தன் 'உன் குஞ்சைக்கொன்றதற்காக, என் பிள்ளையின் கண்ணை நீ பிடுங்கினாயே ஒழிய வேறல்ல. எனக்கு இந்த விஷயத்தில் யாதொரு கோபமும் இல்லை. நீ முன் போலவே இங்கே இருக்கலாம்" என்று மன்றாடியும், பறவை 'ஓரிடத்தில் மனஸ்தாபம் வர இடம் கொடுத்துவிட்டுப் பின்னர் அங்கே இருப்பது அபாய ஹேதுவாகும். நான் போய் வருகிறேன்' என்று திடமாகக்கூறிவிட்டுப் பறந்துபோய் விட்டது. இதுபோல நம்பிக்கையான விடங்களில் மனஸ்தாபம் ஏற்பட்டால் அரசன் மெதுவாகவும் தந்திரமாகவும் ஒதுங்கி விட வேண்டும்.

**வினா** 71.- தேசத்திற்கே மிகுந்த கஷ்டம் வந்து ஜனங்கள் தபிக்குங்கால் ப்ராஹ்மணன் எவ்வாறு ஜீவிக்கவேண்டும்?

**விடை.-** பிராஹ்மணர்கள் கூடியவரையில் ஒழுங்கு தவறாது இருக்க வேண்டும். ஒன்றும் முடியாமல் போனால் எப்படியாவது உயிர் தரிக்க முயலவேண்டும். முன்காலத்தில் மழையே இல்லாமல் போக பெரிய பஞ்சம் எற்பட்டது. அப்பொழுது விச்வாமித்ரர் சாப்பிடக்கூட ஒன்றும் அகப்படாது திரியலா யினர். ஒருநாள் மிகுந்த பசியுடன் ஓர் பரச்சேரியண்டைவந்து தம்மால் இயன்ற மட்டும் யாசித்தனர். ஒருவரும் அவருக்குப்பிச்சை போடவில்லை. நடக்கமாட்டாது களைப்புடன் ஓர் வீட்டு அருகில் விழுந்துவிட்டார். இரவு வந்ததும், எல்லோரும் உறங்கிவிட அந்த வீட்டுள் நாய் மாம்ஸம் வைத்திருப்பதைக் கண்டார். இதை

எடுத்து உண்டு உயிர் தரிப்பதுமேல் என்று அவருக்குத் தோன்ற, அதைச் சென்று எடுத்தார். அப்பொழுது வீட்டுக்காரன் எழுந்து ப்ராஹ்மணா! நீ திருடுவது நியாயமா? நீ மாம்ஸம் தின்னலாமா? புலி பசித்தாலும் புல்லைத் தின்னுமா?' என்று கேட்க, 'என்பசி எனக்கல்லவோ தெரியும். உயிர்போய்விடும் போல இருக்கிறது. ஆதலால் தான் இந்த அருவெறுப்பான கார்யத்தைச் செய்யவேண்டி வந்தது. இல்லாவிடில் மனதார யான் இப்படிச் செய்வேனா? ஆபத்துக்குப்பாபமில்லை' என்று ஸமாதானம் கூறி, அதை எடுத்துச் சென்று சமைத்து நித்ய கர்மானுஷ்டானாதிகளைச் செய்து, உண்டார். அப்பொழுது மழை ஏராளமாகப் பெய்து தேசம் செழித்தது.

**வினா** 72.- அதர்மமே தர்மமாகிவிட்டால் தர்மாதர்ம விவேகம் உண்டாவது எப்படி?

**விடை.**- கேவலம் வேதத்தில் கூறியதை மாத்திரம் தர்மம் என்று எண்ணி விடக்கூடாது. சிற்சில ஆபத்காலங்களில் அந்த தர்மங்களை அனுஷ்டிப்பதே அதர்மமாகவும், அவைகளை அனுஷ்டிக்காது அதர்மத்தை அனுஷ்டிப்பதே தர்மமாக வும் முடியும். இந்த ரகஸ்யத்தை உணரவேண்டும். இந்த ஆபத்காலங்களில் தர்மாதர்ம விவேகம் வருவதெப்படி என்றால் தர்மவான்கள் யுக்தியாலும், அவர்கள் ஆபத்காலங்களில் வரம்பு கிடந்து நடக்கும் மாதிரியாலும் ஆபத்தர்மம் இன்னவை என்பதை உணரவேண்டும். ஸாதாரண ஸமயங்களில் பொது தர்மங்களை மாற்றிச் செய்வது பெரியோர்க்கு அழகல்ல. ஆகவே ஆபத்காலங்களில் சாந்த மனதுடைய பெரியோர் நடந்து கொள்ளும் வழியேதர்மம்; மற்றவை எல்லாம் அதர்மம். எல்லோருக்கும் எல்லாக் காலத்திலும் மாறாத தர்மம் ஒன்றுண்டு. அதாவது படித் தவர்களாயும், தபோதனர்களாயும், வைதிக மார்க்கத்தில் இருப்பவர்களாயும் உள்ள ப்ராஹ்மணர்களை வழிபடுவது என்பதே. இதைத்தவிற மற்றவைகள் எல்லாம் மாறும் தன்மை உடையனவே.

**வினா** 73.- சரணாகத ரக்ஷணத்தால் அரசனுக்கு வரும்பயன் யாது?

**விடை.**- முன்னர் பரசுராமரை நோக்கி இந்தக்கேள்வியை **முசுகுந்தர்** கேட்க, அவர் பின்வரும் கதையைச் சொன்னார். ஓர்காட்டில் ஓர் கொடிய வேடன் இருந்தான். தனக்கு உறவினர்கள் ஒருவரும் இல்லாமலிருந்தும் வீணாகக் காட்டு மிருகங்களைக் கொல்லுவதில் மிகுந்த ப்ரீதி உடையவனாக இருந்தான். ஒருநாள் பெரிய காற்றும் மழையும் அடிக்கக் குளிரால் மிகவருந்தி சுற்றுமுற்றும் பார்த்தான். அருகாமையில் பெண்புறாவொன்று குளிரால் விறைத்துக் கீழேகிடந்தது. அப்பொழுதும் ஈவுஇறக்கமின்றி அந்தப் புறாவைத்தன் கூட்டுள் பிடித்துப் போட்டுக் கொண்டான். மழைநின்றுவிட்டது. இருளும் வந்து மூடிக்கொண்டது. வீடு தூரமாக இருந்ததால் காட்டில் ஓர் மரத்தடியில் இரவைக் கழிப்பதாக அவன் தீர்மானித்தான். அந்த மரக்கிளைகளிலேயே தன்குடும்பத்தோடு ஓர் புறா இருந்தது. அது மழை நின்றும் தன் பெண்சாதி வரவில்லையே என்று கதறித் துக்கித்தது. இதைக் கேட்டுக் கூட்டிலிருந்த பெண்புறா தன் நிலையைக்கூறி அதன் துக்கத்தைச் சற்றுமாற்றியது. அப்பொழுது தன் துக்கம் நீங்கி அந்தப் புறாவானது, தன் இடத்திற்கு வந்திருக்கும் விரோதி அதிதியாகவந்தால் அவனுக்கும் மரியாதை செய்யவேண்டும் என்ற

விதிப்படி வேடனுக்கு வந்தனை வழிபாடுகள் செய்தது. வேடன் குளிரால் நடுங்கு வதைக் கண்டு சில உலர்ந்த சருகுகளைக் கொண்டு வந்து போட்டு அருகாமை யிலிருந்து நெருப்புக் கொண்டு வந்து புறா தீமூட்டியது. பின்னர் வேடன் பசியாக விருக்கிறது என்று கூற, தான் மறுநாளைக்கென்று சேர்த்து வைக்காததை எண்ணித் துக்கித்துவிட்டு முடிவில் தன் தேகத்தையே அதிதிக்குக் கொடுத்து ரக்ஷிப்பதாகத் தீர்மானித்து எரிந்து கொண்டிருந்த நெருப்பில் புகுந்து ப்ராணனை விட்டது. இக்குறிப்பை அறிந்த வேடன்மனம் பதைத்தது. 'ஐயோ! இந்தப்பக்ஷியின் அன்பைப்பார்! அதிதியாகிய என்னை விரோதி என்றுகூடக் கருதாது என் பசியாற்ற உயிர்விட்டதே! நான்மாத்திரம் தானா இந்த ஒழுங்கறியாது கொடியவனாக வேண்டும். அந்யாயமாய் எவ்வளவு ஜெந்துக்களைக் கொன்று இதுவரையில் ஸந்தோஷித்துப் பாபம் அடைந்துவிட்டேன்' என்று பலவாறாகத் துக்கித்து அன்றுடன் தன் கொடுந்தொழிலை விட்டுவிட்டு பெண்புறாவையும் கூட்டிலிருந்து விடுவித்தான். பெண் புறாவும் தன் நாயகன் இறந்ததை எண்ணித் துக்கித்து தீயில் மூழ்கி உயிர்விட்டது. இவைகளைக்கண்ட வேடன் கொடுமை நீங்கி, தன் தேகத்தில் படுங்காயங்களைக்கூடக் கவனியாது காட்டில் உலாவி ஓர் காட்டுத்தீயில் அகப்பட்டு முடிவில் இறந்தான். இரண்டு புறாக்களுக்கும் வேடனுக்கும் ஸ்வர்க்கம் கிடைத்தது. ஆகவே விரோதியாயினும் சரணாகதனை ரக்ஷிக்கவேண்டியது. சரணாகத ரக்ஷணத்தால், செய்பவன் பெறுபவன் இருவரும் பயனடையவர். சரணமடைடவன் கொடியவனாயினும் தன்னை ரிக்ஷிப்பவன் நற்குணத்தால் நல்லவனாகி விடுவான்.

**வினா** 74.- அறியாமற் செய்த பாபம் தொலைவ தெப்படி?

**விடை.**- ஓர் அரசன் தன்னை அறியாது ஓர் ப்ராஹ்மணனைக் கொல்லும்படி நேர அவனுக்கு, ப்ரஹ்மஹத்திதோஷம் வந்தது. ப்ராஹ்மணர்கள் எலலோரும் அவனை விட்டு விலகினர். தன் பாபத்தை எண்ணி எண்ணி அரசன் துக்கிக்கலா னான். அப்பொழுது, 'அறியாமல் செய்த பாபத்திற்கு பரிஹாரம் யாது?' என்று அவன் ஓர் ரிஷியை நோக்கிக்கேட்டான். அதற்கு அவர் 'செய்தபாபத்தைப் பலர் அறியக் கூறுவதால் வரும் அவமதிப்பைப் பொறுப்பதும், செய்த பாபத்தை எண்ணி துச்கிப்பதும், மறுபடியும் அந்தப்பாபத்தை நாடாதிருப்பதும், யாகாதி ஸத்கர்மங்க ளைச் செய்வதும் ஆகிய இவைகளே அறியாமற் செய்த பாபங்களுக்குப் பரிஹாரம்' என்றார். இதன்படி நடந்து அரசன் புனிதனான்.

**வினா** 75.- பலவானான விரோதியின் கோபத்தை. ஓர் அரசன் மூட்டிவிட்டால் அவன் நடக்கவேண்டிய மாதிரி எப்படி?

**விடை.**- முன்காலத்தில் ஓர் பெரியமரம் தான் வயிரம் பாய்ந்ததென்றும், தன்னைக் காற்றால் அசைக்கவே முடியாதென்றும் பெருமை பேசிற்று. இது வாயுபகவானுக்குத் தெரியவர, அவர் அடுத்தநாள் இந்தமரத்தை அடித்துச் சாய்ப்பதாகத் தீர்மானித்துவிட்டார். அந்த ஸமாசாரம் தெரியவர மரம் தன் கிளை முதலியவைகளை இழந்து ஒரே கம்பம் போல மிகவும் பணிவுடன் நின்றது. மறுநாள் வாயுபகவான் வந்து பார்த்து சிரித் விட்டு மரத்தை ஒன்றும் செய்யாது போய்விட்டார். ஆகவே பலமானவிரோதியை வீணாகக் கோபம் மூட்டிய அரசன்,

அவனால் தனக்குவரும் கேட்டைத் தானே வரவழைத்துக்கொண்டு எதிரிக்கு அடிபணிந்து தப்புவித்துக் கொள்ள வேண்டும்.

**வினா** 76.- பாபத்திற்கு வேர் யாது? துக்கத்திற்குக்காரணம் யாது?

**விடை**.- பாபத்திற்கு பிறர் பொருளை விரும்புவதே வேர். இதிலிருந்து கோபம், காமம் முதலிய எல்லாப்பாபங்களும் உண்டாகின்றன. எல்லாவிதப் பொய்யும் பிரட்டும் இதனாலே தான் உண்டாவது. துக்கத்திற்குக் காரணம் அஞ்ஞானமும், அதனால் உண்டாகும் பாபங்களும். இந்த அஞ்ஞானத்திலிருந்துதான் ராகம், துவேஷம், முதலிய துவந்தவங்கள் ஏற்படுவது. இந்த அஞ்ஞானத்தால், பிறர் பொருளை விரும்பும் குணமும், பின்னதால் முன்னதும் அதிகரிக்கும். ஆதலால் அவ்விரண்டையும் ஒருவன் தொலைக்க முயலவேண்டும்.

**வினா** 77- தர்மங்களின் ஸாரம் என்ன?

**விடை**.- ஸகல தர்மங்களும் உபரதி (இந்திரியங்கள் மூலமாக வரும் போகத்தில் இச்சை வாராமலும், மனம் அலையாமலும் தடுப்பது) என்பதிலே அடக்கம். இது ஒருவனுக்கு இருந்துவிட்டால் மற்றைய குணங்கள் யாவும் அவனுக்கு. உண்டாகும். இந்த உபரதியிலேயே, அஹிம்ஸை, பக்ஷபாதமின்மை முதலிய நற்குணங்கள் அடங்கியிருக்கின்றன. இந்த உபரதிதான் ஸகல விஷயங்களுக்கும் ஆதாரமாகிய தபஸுக்கும் ஆதாரம்.

**வினா** 78.- உண்மையின் சிறப்பு யாது?

**விடை**.- உண்மைதான் தர்மம், தபஸ், யோகம், பரம்பொருளாகவும் இருப்பது. ஒருகாலத்தில், ஆயிரம் அச்வமேத யாகத்தையும் உண்மையையும் சீர் தூக்கிப் பார்த்தவிடத்து உண்மைகனமாக விருந்ததாம்.

**வினா** 79.- கொடியவர்களின் ஸ்வரூபம் என்ன?

**விடை**.- கொடியவர்கள் மனம் பாபத்திலேயும், பரஹிம்ஸையிலேயும், ஸதா தங்குதடையின்றிப் போய்க்கொண்டிருக்கும். யாரைக்கண்டாலும் இவனுக்கு ஸந்தேஹம் இருக்கும். இவன் தனக்கு நன்மை செய்பவர்களைப் பார்த்தால் தன்னால் ஏமாற்றப்பட்டவர்கள் என்று எண்ணுவான். எப்பொழுதும் தன் நயத்தைக் கருதும் குணம் இவனுக்கு உண்டு.

**வினா** 80. - நன்றி கொல்பவர் கதி என்ன?

**விடை**.- ஓர் ஊரில் ஓர் ப்ராஹ்மணன் இருந்தான். அவனுக்கு ப்ராஹ்மண குணங்களே இல்லை. அவன் ஓர் கள்வர் சேரியில் சென்று பிச்சை கேட்க, அவர்களுள் ஒருவன் ப்ராஹ்மணனுக்கு ஓர் வீடு, பெண்சாதி, திரவ்யங்கள் முதலியவைகளைக் கொடுத்து அங்கேயே அவரை நிறுத்திவிட்டான். கொஞ்சகாலம்

அவர் ஸுகத்தில் மூழ்கியிருக்கையில் அவர் ஸ்நேஹிதரான வேறோர் ப்ராஹ்மணர் அங்குவந்து அவரை இழிவான ஸங்கத்தைவிட்டு வெளி ஏறும்படி எவ்வளவோ வேண்டினார். முடிவில் இருவரும் ஒருநாள் இரவில் வெளி ஏறி, வெவ்வேறுதிக்கை நோக்கிப் புறப்பட்டனர். கெட்டுப்போன ப்ராஹ்மணன் வழியில் ஏற்பட்ட அநேக ஆபத்துக்களிலிருந்து தப்புவித்து காட்டுவழியாகப்போய் ஓர் ஆலமரத்தடியில் மிகுந்த பசியின் களைப்பால் தங்கினான். அங்கு ப்ரஹ்மாவின் தோழனான **நாடீஜங்கன்** என்ற கொக்குவஸித்து வந்தது. அது, வந்த ப்ராஹ்மணனை விதிப்படி உபசரித்து அன்று இரவு அங்கு தங்கும்படி வேண்டியது. அப்பொழுது அந்த ப்ராஹ்மணன் தான் கெட்டுப்போனதையும், பின்னர் வெளியேறினதையும், தான் பொருளில்லாது அப்பொழுது படும் கஷ்டங்களை எடுத்து விஸ்தரிக்க, கொக்கு மிக இறங்கி, 'அருகாமையில் என் தோழனாகிய **விருபாக்ஷன்** என்ற ராக்ஷஸன் இருக்கிறான். அவனிடம் நீர்போய் நான் அனுப்புவித்தகாகச் சொல்லும். உமக்கு வேண்டிய பொருளை அவன் கொடுப்பான்' என்றது. ப்ராஹ்மணன் அவ்வாறே செய்ய, விருபாக்ஷனால் மிகுந்த மரியாதை செய்யப்பட்டு முடிவில் அவனிடம் இருந்து, தான் தூக்கும்படியான ஓர் பெரியமூட்டை பொன் பெற்றுக்கொண்டு ஊர்நோக்கிப் புறப்பட்டான். வரும் வழியில் நாடீஜங்கன் ஆலமரத்தடியில் ஓர் இரவில் வர, அந்தக்கொக்கு முன்போல எல்லாம் செய்து நிர்ப்பயமாக பிராஹ்மணன் அருகில் உறங்கியது. நடு இரவில் ப்ராஹ்மணன் எழுந்து, போகும் வழியில் ஆஹாரத்திற்காக (செய்து நன்றியை மறந்து) கொக்கை அருகாமையிலிருந்த நெருப்பில் சுட்டுக்கொன்று மாம்ஸத்தை வாட்டிக் கொண்டு ப்ரயாணம்புறப்பட்டான். தன் இடம் இரண்டொரு நாள் தன் தோழனானகொக்கு வாராது கண்டு விருபாக்ஷன் வேலைக்காரர்களை விட்டுத்தேடச்சொல்ல, அவர்கள் ஆலமரத்தடியில் கொக்கின் இறகுகளைக்கண்டு, ஒடோடியும் போய் ப்ராஹ்மணனைப் பிடித்து விருபாக்ஷன் முந்நிலையில் கொண்டு விட்டார்கள். அவனிடமிருந்த கொக்கு மாம்ஸத்தைக் கண்டு அரசன் துக்கித்து விட்டு ப்ராஹ்மணனைக் கொல்ல உத்தரவளித்து நாடீஜங்கனுக்கு விதிப்படி தகனம் முதலியன செய்தான். அப்பொழுது காமதேனுவந்து தன் பாலைச்சிதையில் சொரிந்து நாடீஜங்கனை உயிரோடு எழும்படி செய்தது. அந்தக்கொக்கு தன் அதிதியான ப்ராஹ்மணனையும் எழுப்பும்படி வேண்ட, அவனும் கொக்கின் நற்குணத்தால் உயிரோடு எழுந்தும் அவன் நன்றி கொன்றபாபம் போகவே இல்லை. இதனாலே அவன் கள்ளர்சேரிசென்று தன் பெண்சாதியோடிருந்து அநேக்குழந்தை களைப்பெற்று இகத்தில் மிக வருந்தி பரத்திலும் கோரமான நரகில் வருந்தினான். ஆகையால் நன்றி கொன்றால் அதற்கு ப்ராயச்சித்தமே இல்லை. அந்த பாபம் பட்டேதான் தீரவேண்டும்.

---

## 3. மோக்ஷ தர்மம்

**வினா** 81.- பெண்சாதி முதலிய கிட்டின உறவினர்கள் இறக்கும்படி நேரிட்ட காலத்தில் எழும் துக்கத்தை எவ்வாறு ஆற்றுவது?

**விடை.-** முன் காலத்தில் **ஸேநஜித்** என்ற அரசன், பிள்ளையை இழந்து துக்கிக்குங்கால் ஓர் ப்ராஹ்மணர் அவர் அரண்மனைக்கு வந்து, தாம் தமது துக்கங்களை மாற்றிக் கொண்டவழியைக்கூறிப் பின்வருமாறு அரசனைத் தேற்றினார். 'உலகத்தில் எல்லோருக்கும் மரணம் என்பது நிச்சயம். உலகம் முழுவதையும் எடுத்துக்கொண்டால் ஒவ்வொரு விநாடிக்கும் யாராவது ஒருவர் இறந்துகொண்டே இருப்பார்கள். இப்படி இருக்க இதற்குத் துக்கித்து முடியுமா? மேலும் ஸஹஜமாகஇருக்கும் மரணம் நம்மருகில் வருங்கால்மாத்திரம் துக்கிப்பது அழகா? இது ஸ்வயநயம் கருதலாகாதா? ஒருவனைச் சேர்ந்த பெண்சாதி முதலியவர்கள், அலைமோதும் கடலில் மிதக்கும் இரண்டு தடிகள் போன்றவர் களல்லவா? சேர்வதும் பிரிவதும் ஒரு நிலையா? உலகத்தில் ஸுகதுக்கங்கள் மாறிமாறிச் சுழன்றுகொண்டேவரும். ஆகவே இவைகளில் அழுந்துவது அழகன்று. மேலும் ஸம்ஸாராதிகள் இருந்தால் அவைகளைக் காப்பாற்ற எவ்வளவு அநீதிகளில் எல்லாம் மனிதன் புகும்படி நேரிடுகிறது. ஓயாது துக்கிப்பதால் இறந்தவர் திரும்புவரா? இப்படி துக்கிப்பதால் வீணாக மனங்கலங்கி நாம் அனுஷ்டிக்க வேண்டிய தர்மங்கள் மறந்துபோய், தத்தளித்துக்கொண்டிருக்கையில் நாமும் மரணத்திற்கு இறையாகவேண்டியது தானே. ஆகவே மரணம் நம்மை அணுகும் முன் கொடைமுதலிய வற்றால் ஸமாதானம் பெறவேண்டியது அவசியம் அல்லவா? உலகில் எந்தவஸ்துவைத் தான் நம்மது என்றிருக்கமுடியும்? தேகம் நம்மது என்றிருக்கச் சுடுகாட்டு நாய் நரிகள் தமது என்று தாமிருக்கும். இப்படியே மற்றவைகளுக்கும். மேலும் ஸுகதுக்காதிகள் நம்மைக் கேட்டா வருகின்றன? தீடீரென்று விதிப்படி வரும். அவற்றை ஒரு பொருட்டாகவே எண்ணக்கூடாது. **பிங்களை** என்னும் தாஸி தான் கோரியது கிடைக்காத காலத்தும் மனதை ஸமாதானப் படுத்திக்கொண்டு ஸுகம் பெறவில்லையா?' (**பாகவத வினா விடை 11-ம் ஸ்கந்தம் பார்க்க**.) இம்மாதிரியான எண்ணங்கள் துக்கம் வருங்கால் அப்யாஸ பலத்தால் கூடவே ஒருவன் மனத்து எழுமாயின் வரும் துக்கம் சின்னாபின்னமாகிப் பரந்தோடிப்போம்.

**வினா** 82.- காலம் அதிவேகமாகக் கழிந்துகொண்டிருக்க, இந்த ஸமயத்தில் எதை நல்ல வஸ்துவென மனிதன் நாடவேண்டும்?

**விடை.-** இந்த விஷயத்தில் ஓர் ப்ராஹ்மணனுக்கும் அவன் பிள்ளை **மேதாவிக்கும்** ஓர் ஸம்வாதம் நடந்திருக்கிறது. அதில் பிள்ளை இந்தக் கேள்வியைக் கேட்க தகப்பன் 'முறைப்படி நான்கு ஆச்ரமங்களிலும் நிலைபெற்றுப் . பழகி தர்மங்களை அனுஷ்டித்து முடிவில் ஸந்யாஸியாவதே மனிதன் நாடவேண்டி யது' என்றார். அதற்குப் பிள்ளை 'இன்ன ஸமயம் இன்னாரிடம்தான்வரும் என்று நிலையாக இல்லாத மரணத்திற்கு ஆளாகும் மனிதன் எவ்வாறு தாமதமாக ஆச்ரம தர்மங்களை அனுஷ்டித்துக் கொண்டு வீண் காலம் போக்குவது?' என்று மிகுந்த ஆவலுடன் கேட்டான். 'நீதான் நாடவேண்டிய நல்ல வஸ்து இன்னதென்றுகூறு' என்று தகப்பன் கேட்க, பிள்ளை கூறுகிறான். 'மரணபயம் உண்டாகி வருத்தம் உண்டாவதற்கு உலகவஸ்துக்கள் நம்மது என்ற அபிமானமே காரணம். இந்த உண்மையை உணர்ந்து மரணத்திற்கு (மரண பயத்திலிருந்து) தப்புவதே மனிதன்

நாடவேண்டிய நல்லவஸ்து. இந்த அபிமானம் நீங்குவதற்கு அஹிம்ஸை, வைராக்யம், ச்ரவண மனன நிதித்யாஸனம், உள்ளத்துறவு ஆகிய இவைகளில் ஒருவன் பழகவேண்டும். பிசாசங்கள் செய்யக்கூடியதாகிய ப்ராணி ஹிம்ஸை அடங்கிய யாகங்களைச் செய்து என்னைப் போன்றவர்களால் எவ்வாறு பகவத் ஆராதனம் செய்யமுடியும்? அபிமானமே துக்கஹேது. இதை எவ்விதத்திலாவது ஒழிக்க முயல வேண்டும்' என்றான்.

**வினா** 83.- ஸுகதுக்கவிஷயத்தில் பணக்காரனுக்கும் ஏழைக்கும் உள்ள வித்யாஸம் யாது?

**விடை.- சம்பகர்** என்ற ப்ராஹ்மணர் இந்த விஷயத்தைப் பின்வருமாறு பரிசீலனம் செய்து முடிவு கட்டியிருக்கிறார். 'உலகில். ஞானியாகிய திடச்சித்தன் என்றும், அஞ்ஞானியாகிய சஞ்சலசித்தன் என்றும் இருதிறத்தார்கள் உண்டு.

(1) இவர்களுள் திடச்சித்தர்கள் பணக்காரர்களாக இருந்தால், அதனால் ஏற்படக்கூடிய கோபதாபாதிகளான வ்யவஹாரத்தில் நடித்து அடிக்கடித்தமது மனதை சீர்திருத்தி நிலை நிறுத்தி ஸுகம் பெற முயல வேண்டும். ஆகவே கெட்டவர் போல நடித்துத் திரிவதிலேயே இவர்கள் மனம் போகுமே ஒழிய பரமபதம் சேர்க்கக்கூடிய அபிமானம் நீங்கிய நிஷ்டையில் பழகக் காலம் நேராது. ஒருவேளை இம்மாதிரியாக உள்ளவர்கள் தமது கீழதிகாரிகளிடம் வ்யவஹாராதிகளை ஒப்புவித்துத் தனியே நிஷ்டைபழகலாம். இப்படிச் செய்தால் அதிகாரிகளின் மோசக்கருத்து முதலியவை களை எண்ணி மனம் கலையாதிருக்க வேண்டும். இப்படியும் இருப்பார்களாகில் பணத்திற்கும் இவர்களுக்கும் ஸம்பந்தமே இல்லை. இவர்கள் ஏழைகளுக்கு ஸமம்.

(2) திடச்சித்தர்கள் ஏழைகளாக இருப்பின், ஓர் விதக்கஷ்டமும் இன்றி இவர்கள் நிஷ்டைபழகலாம்.

(3) சஞ்சல சித்தர்கள் பணக்காரர்களாக இருந்தால் தனமதத்திற்கு ஆளாகி கோபதாபாதிகளில் மூழ்கிப் பரமபதம் என்று ஒன்று உண்டு என்பதை மறந்து தீராத்துக்கத்திற்கு ஆளாவர்.

(4) இவர்களுக்கு ஏழைத்தனம் இருந்தால் மேலெழும் ஆசை முதலியவைகள் பூர்த்தியாக இடமில்லாமல் போக, நாளடைவில் இவர்களும் சாந்த சித்தர்களாவர். இந்நிலை வந்தபிறகு பணம்வந்ததும் ஸுகவிஷயத்தில் திடச்சித்தர்களாகையால் ஏழைகள் போலவே இருப்பார்கள்.

(5) **முடிவு:** ஆகையால் பணம் ஓர் பேய், அதைஓட்ட தரித்திரமே நல்லதொரு மந்திரம். தரித்ரனாக இருக்கும் நிலையே மோக்ஷத்திற்கு ஸுகமானவழி, ஏனெனில் அது உள்ளத்துறவுக்கு நல்ல ஸாதனம். தரித்திரத்தின் சிறப்பு உலகத்தில் எதற்கும் இல்லை. ஆகையால் தரித்திரன் ஸுகதுக்கங்களில் அழுந்தவே மாட்டான். பணக்காரனோ அழுந்தித் தத்தளிப்பன். தரித்திரத்தோடு கூடிய ஞானியே மிகச் சிறந்தவன்.

**வினா** 84.- நல்ல விஷயங்களில் பணத்தைச் செலவுசெய்ய வேண்டும் என்ற ஆவலுடைய ஒருவனுக்கு எவ்வளவு முயன்றும்பணம் கிடைக்காவிட்டால் அவன் ஸுகம் பெறுவதெப்படி?

**விடை.**- இந்த விஷயமாக ஓர் பழயகதை ஒன்றிருக்கிறது. முன்காலத்தில் **மன்கி** என்றொரு ரிஷி இருந்தார். அவர் எவ்வளவோ முயன்றும் அவருக்கு பணம் ஸம்பாதிக்க முடியாமல் பேய்விட்டது. முடிவில் தம்கையிலிருந்த கொஞ்சமான பணத்தைப் போட்டு ஒருஜோடி எருது வாங்கி பழக்கிப் பயிரிட்டுசெல்வம் சேர்ப்போம் என்று எண்ணி, இரண்டு எருதுகள் வாங்கினார். இவைகள் கழுத்தில் நுகத்தடியை மாட்டி இவைகளைவயலுக்கு ஓட்டிப் போகையில் இவைகள், படுத்திருந்த ஓர் ஒட்டகத்தைக் கண்டு மிரண்டு ஓடிப்போய் அதன் கழுத்தில் விழுந்தன. இதனால் கோபங்கொண்ட ஒட்டகம் எழுந்து ஒடத்தொடங்கியது. நுகத்தடி ஒட்டகத்தின் கழுத்தில் தாங்கி நிற்க, இரண்டு எருதுகளும் தராசுத்தட்டுகள் போல தொங்கத் தொடங்கின. அவைகள் கழுத்து நெருங்கி மூச்சுவிட முடியாமல் தத்தளித்தன. இவ்வாறு தம் கடைசி முயற்சியும் வீணானது கண்டு, 'ஆ! வீண் மனோராஜ்யத்தால் கெட்டேன்! பணம் ஸம்பாதித்து பெரிய காரியங்களைப் புரட்டி விட வேண்டுமென்றல்லவோ மிகுந்த ஆவலுடன் எதிர்பார்த்து பெரிய துக்கத்திற்கு ஆளானேன்! இந்த ஆசையே ஸகல துக்கத்திற்கும் காரணம். இதை ஒழித்தால் எல்லாம் ஒழியும். ஸுகம் வந்தால் அதில் மூழ்காது அனுபவிப்போம். துக்கம் வந்த காலத்தில் வாராத ஸுகத்தை எண்ணிவந்த துக்கத்தை அதிகப்படுத்திக் கொள்ளாது நிற்போம். இனி ஆசையால் எதிர்பார்த்து மனமழியவே மாட்டேன். ஸுகங்கள் அனுபவிப்பதால் ஆசை நீங்காது. வெண்ணையைச் சொரிந்தால் நெருப்பு எப்படி வளருமே அப்படி ஆசையும் விருத்தியாகுமே ஒழிய, ஒழியாது. ஆசையே துக்கஹேது என்று உணர்ந்து ஒதுங்கினால் தான் ஆசை நம்மைவிட்டும் நீங்கும். இனி ஆசைக்கு இடங்கொடாது, விதிவசமாக வந்ததை அதில் மூழ்காது அனுபவித்து சாந்தனாக இருப்பேன்' என்று மனனம் செய்து ஸுகம்பெற்றார் மன்கிரிஷி. இதுவே எண்ணியவை கைகூடாக்கால் ஸுகம் பெறும் வழி.

**வினா** 85.- பொதுவாக சித்தஸமாதானம் வருவது எப்படி?

**விடை.**- முன்காலத்தில் **ஜனகர்** சித்தஸமாதானம் பெறும் ஸமயத்தில் 'என் சிறப்பிற்கோ தங்குதடையே இல்லை, ஆயினும் இங்கு எனது என்பது ஒன்றும் இல்லை. மிதிலையாகிய என்ராஜ்ய முழுவதும் எறிந்து சாம்பலானாலும் எனக்குக் கொஞ்சம் கூட நஷ்டமே ஏற்படாது' என்று பரவசமாகக் கூறியிருக்கிறார். இதன் ரஹஸ்யத்தை நன்றாக மனனம் செய்தால் சாந்தி உண்டாகும். மேலும் முன்காலத்தில் **யயாதி**, ராஜன் **போத்யரைக்** கண்டு இந்தக் கேள்வியைக் கேட்டிருக்கிறான். அதற்கு அந்த ரிஷி, 'உலகில் உள்ள வஸ்துக்கள் எல்லாம் எனக்கு பரமரஹாஸ்யமாகிய அபிமானம் நீங்கும் வழியை நினைப்பு மூட்டுகின்றன. அவைகளை உணர்ந்து நான் சித்தஸமாதானம் பெறுகிறேன். அவைகளுள் மூக்யமானவை, **பிங்களை** என்னும் தாஸி , தூக்கணாங்குருவி, தேனீ, அம்பு செய்வோன், கந்யகை, பாம்பு, ஆகிய இவ்வாறும் என் முக்கிய குருவாவார்கள்' என்றார். (இவைகளின் ரஹஸ்யத்தை **பாகவத வினாவிடை 11-ம் ஸ்கந்தத்தில் காண்க**.) இவைகளை மனனம் செய்தால் எளிதில் ஒருவனுக்கு சாந்திபிறக்கும்.

**வினா** 86.- இவ்வுலகில் ஸுகம் அடைய ஒருவன் எவ்வாறு நடந்துகொள்ள வேண்டியது?

**விடை.**- இந்த விஷயத்தைப்பற்றி முன்காலத்தில் **ப்ரஹ்லாதருக்கும்**, **அஜகரர்** என்ற ரிஷிக்கும் ஸம்வாதம் ஒன்று நடந்திருக்கிறது. அஜகரர் ப்ரஹ்லாதருக்குப் பின்வருவமாறு பதில் கூறியிருக்கிறார். 'உலகில் காலக்ரமத்தில் எல்லாம் அழியவேண்டியது தான். நிலையுள்ளது ஒன்றும் இல்லை. உலக விஷயங்கள் ஒன்றும் நம்மைக் கேட்டாவது நமக்காகவாவது நடப்பனவாகக் காணப்படவில்லை. ஆதலால் தர்மவிருத்தமின்றி வரும்ஸுகங்களை அங்கீகரித் தும், வாராதவைகளைப் பற்றிச் சிந்திக்காமலும், இருக்கிறேன். இதனால் துக்கம் என்னை பாதிப்பதே இல்லை. அதுவும் ஸுகம்போல நிலையில்லாததாகவே தோற்றுகிறது. இம்மாதிரி அபிமானம் நீங்கி மலைப்பாம்பின் விருத்தியை அனுஸரித்து யாதொருவிதத்திலும் சித்த சஞ்சலம் ஏற்படாது நான் நடப்பதால் எனக்கு எப்பொழுதும் ஸுகம் தான். இம்மாதிரி மனதின் நிலையை மாற்றிக்கொள்ளு வதே எப்பொழுதும் ஸுகம் பெறுவதற்குத் தகுந் தவழி' என்றார்.

**வினா** 87.- உலக விஷயங்களுள் எதில் மனிதன் நம்பி நிலைத்து நிற்கலாம்?

**விடை.**- ஞானமே மனிதனுக்கு ஆதாரமாக உள்ளது. இதைத்தவிற வேறு எதை நம்பினபோதிலும் மோசம் போகவேண்டியது தான். முன்காலத்தில் தனமதத்தால் வெறிகொண்ட வைச்யன் ஒருவன் கண்தலை தெரியாது ரதம் ஓட்டி ஓர் ரிஷிபுத்திரன் மேல் ஏற்றிவிட்டான். அவன் செயலற்றுப் போக, 'இறந்தால் நலம்' என்று தன் உயிரைவிடத் தயாரானான். அப்பொழுது இந்த்ரன் ஒரு நரி உருக் கொண்டு வந்து, 'ஏன் ஆத்மாவை வெறுக்கிறாய்? உனக்கோ கைகள் இருக்கின்றன. நல்ல அறிவும் இருக்கின்றது. உயிரோடிருந்தால் நீ எவ்விதத்திலும் ஸுகமாக வாழலாம். தற்கொலை செய்துகொள்ள எண்ணுவது பாபம். உன்புத்தியை உபயோகப்படுத்தி ஞானத்தின் வழியாக தர்ம வழியில் நடந்து சிறப்படை. எவ்வளவு கஷ்டம் வந்தாலும் புத்திமான்கள் ஞானபலத்தால் இறக்கவேண்டும் என்று கோரவே மாட்டார்கள். மானிடஜன்மம் சிறந்தது. அதிலும் வீண் குதர்க்கபுத்தியில்லாது தர்ம விஷய ஞானமும் அனுஷ்டானமும் இருப்பது மிகச் சிறந்தது' என்றான். இதைக்கேட்டு அந்தச் சிறுவன் வீடு சென்று தேறி, மேன்மை அடைத்தான்.

**வினா** 88.- ஞானமும் பரம ஸுகமும் ஸித்திக்கும் வழி யாது?

**விடை.**- அநேகவித பாபத்தொழில்கள் இருக்கின்றன. அவைகளை விட முயல வேண்டும். வேதவிஷயங்களை உள்ளபடி உணர்ந்து ஒருவன் தன் யுக்தி பூர்வமாக நல்வழியைக் கண்டறிந்து நடக்க வேண்டும்.

**வினா** 89.- பிரபஞ்ச ஸ்ருஷ்டி விஷயம் எம்மாதிரியுள்ளது?

**விடை.**- **பாகவத வினாவிடை 3-வது ஸ்கந்தத்தையும், அநுபந்தங்க ளையும் பார்க்க.**

**வினா** 90.- மனிதனிடத்திருக்கும் அத்யாத்ம விஷயம் யாது?

**விடை.**- மனிதனிடம் பஞ்ச ஞானேந்திரியங்கள் மனதுபுத்தி, ஆத்மா, ஆகிய ஏழு விஷயங்கள் காணப்படுகின்றன. இந்திரியங்கள் வெளிவிஷயங்களை உணருவன, மனம் உணர்ந்த வஸ்துக்களை சேர்த்து அவைகளைப் பற்றி ஸந்தேஹிக்கும் ஸ்வபாவம் உடையது. புத்தி தீர்மானம் செய்வது. ஆத்மா இவைகளுக்கு எல்லாம்ஸாக்ஷி. அது எங்கும் பரவி நிற்பது. ஸாத்விகம், ராஜஸம், தாமஸம் என்று கூறப்படும் குணங்கள் மூன்றும், இந்திரியம் மனஸ் புத்தி இவைகளில் காணப்படுவன. இக்குணங்களால் இழுக்கப்பட்ட புத்தி இந்திரிய மனங்களோடு ஒன்றாகி தாழ்ந்த நிலையை அடைகின்றது. இவைகளிலிருந்து விடுபட்டால் அது ஆத்மாதை நோக்குகின்றது. ஸாத்விக ராஜஸ தாமஸங்களால் முறையே ஒருவனுக்கு ஸுகம், துக்கம், மயக்கம் ஆகிய மூன்றும் உண்டாகின்றன. புத்தியிலேயே இம்மூன்று குணங்களும் தொழிற்படுகின்றன. ஆத்மாவில் இவைகள் இல்லவே இல்லை. ஆனால் புத்தி முதலியவைகள் எல்லாம் இந்த ஆத்மாவின் ஸந்நிதானத்தில் தான் சேஷ்டிக்கின்றன. ஆத்மாவின் உண்மை நிலையை அறிந்து குணங்களுக்கு ஈடுபடாமல் இந்த்ரியாதிகளைத் திருப்பி ஜாக்ரதையாய் நடப்பவனே உண்மையை உணர்ந்து ஸுகம்பெறுவான். இவன் நிர்பயமாக உலகில் வாழ்ந்து பரமபதம் பெறுவான். இதுவே அத்யாத்ம ரஹஸ்யம்.

**வினா** 91.- இந்த அத்யாத்மத்தை உணர்ந்தவன் எவ்வாறு காலத்தைக் கழிப்பன்?

**விடை.**- வாக்முதலிய இந்திரியங்களை அடக்கி அசையாமல் தேஹஞாபகமே இல்லாது பரம்பொருளில் மூழ்கி இருப்பான். இவன் இந்திரியங்களிருந்தும் இல்லாதவர்கள் போலவே இருப்பான். இவ்வாறு பழகி வருவதால் உலக விஷயங்கள் ஒன்றும் இவனைத் தாக்கமாட்டா. இம்மாதிரி செய்யப்படும் யோகத்தால் உண்டாகக் கூடிய ஆனந்தத்திற்கு ஈடானது வேறொன்றும் இல்லை. இம்மாதிரி இருந்து முடிவில் போகி அப்பேற்பட்டதாகிய பரமபதத்தை அடைவான்.

**வினா** 92.- மந்திர ஜபங்கள் பண்ணுகிறவர்கள் அடையும் முடிவு யாது?

**விடை.**- மந்திர ஜபம் பண்ணுகிறவர்களுக்கு வரவர கர்மபந்தங்கள் குறைந்து கொண்டுவரும். அவர்கள் தம் மந்திரப் பொருளையே ஞாபகத்தில் வைப்பார்கள். மற்றவைகள் எல்லாம் அவர் மனத்தை விட்டு அகலும். இம்மாதிரி விஷய வாஸனைகள் எல்லாம் அற்றுப்போக அவருக்கு உள்ளத்துறவு உண்டாகும், இதன் மூலமாக அவன் பரமபதம் பெறுவன். முன் காலத்தில் ஓர் ப்ராஹ்மணர் மிகுந்த ச்ரத்தையோடு காயத்ரி ஜபம் பண்ணிக்கொண்டு வந்தார். அவருக்கு காயத்ரீ தேவதை பிரஸந்நமாகி 'என்ன வேண்டும்' என்று கேட்டாள். அதற்கு அவர் எனக்கு வேண்டியது ஒன்றும் இல்லை, இந்த ஜபத்திலிருக்கும் ச்ரத்தை எனக்குக் குறையக் கூடாது' என்று கேட்டார். தேவதை 'அவ்வாறே ஆகட்டும். நீர் பிரஹ்மலோகம் பெற்று சிறப்படைவீர். உம்மிடம் தர்மராஜன், காலன், ம்ருத்யூ, மூவரும் வந்து சாஸ்த்ரவிஷய தர்க்கம் செய்வார்கள்' என்று கூறி மறைந்தாள். தர்மராஜன் வந்து

'நீர்செய்த ஜபத்திற்குப்பலன் வந்துவிட்டது, உமது தேஹத்தை விட்டு விடும், தேவதைகளைவிட மேலான பதவி உமக்குத் தயாராக இருக்கிறது' என்றான். 'இவைகளுக்கு எல்லாம் அப்பாற்பட்ட மேலான நிலை எனக்கு இந்த தேஹத்திலே யே ஜபத்தால் கிடைக்கும். உன் பதவி வேண்டியதில்லை போய்வா ?' என்றார் பிராஹ்மணர். இம்மாதிரியே காலன் ம்ருத்யூ இருவரும் ப்ராஹ்மணனை சிறந்த பதங்களைக் காட்டி ஏமாற்றப் பார்த்தனர். ப்ராஹ்மணர் ஜபத்தில் தமக்கு இருக்கும் நம்பிக்கையால் ஏமாறவில்லை. இப்படி இருக்கையில் மஹா கீர்த்திமானான புண்யாத்மாவாகிய **இக்ஷ்வாகு** என்ற அரசன் அங்கு வந்து ப்ராஹ்மணன் ஜபத்திற்கு மெச்சி அவருக்கு வேண்டியதைத் தருவதாகச் சொன்னான். அதற்கு ப்ராஹ்மணர், 'நான் வாங்குவதை நிறுத்தி விட்டேன். நான் வேண்டுமானால் உமக்கு ஏதாவது கொடுக்கிறேன். வாங்கிக்கொள்ளும்' என்றார். தான் க்ஷத்ரியனாகையால் ஒன்றும் வாங்கக்கூடாது என்றும், தாம் வாங்குவதை நிறுத்தி விட்டபடியால் ஒன்றையும் பெறக்கூடாது என்றும் இருவரும் கொஞ்ச நாழிகை தர்க்கித்த பின்பு, இஷ்வாகு 'உமது ஜபத்தின் பலத்தைக்கொடுத்து விடும்' என்றார். 'இதோகொடுத்து விட்டேன்' என்றார். 'என்ன பலன்?' என்று கேட்டான் அரசன். 'நான் பலனை உத்தேசித்து ஜபம் செய்யவில்லை. ஆதலால் எனக்கு அது இன்னது என்பது தெரியாது' என்றார் பிராஹ்மணர். 'அப்படியானால் நான் எதை வாங்குவது?' என்றான் அரசன். இவ்வாறு தர்க்கம் நடக்கையில் ஸ்வர்க்காதிபதி வந்து பிராஹ்மணரும் அரசனும் அடைந்த முடிவு இரண்டும் ஸமமானது என்று தீர்மானித்துத் தர்க்கம் தீரும்படி செய்தான். அவர்கள் இருவரும் ஒவ்வொருவருடைய பாதி பலனை மற்றொருவருக்குக் கொடுத்து முன் இருந்த நிலையிலேயே நின்றனர். முடிவில் இருவரும் ப்ரஹ்மலோ கம்பெற்று ஆனந்தித்தனர். ஆகவே ச்ரத்தையுடன் ஜபம் செய்யும் ஒருவனுக்கு, அநேக யாகாதி க்ருதுக்கள் செய்து பின்னர் உலகம் துறந்த யோகிக்கு வரும் பலன் கிடைக்கும்.

**வினா** 93.- வைதிக கர்மாக்கள் உண்டாகக் காரணம் யாது? இவைகளின் முடிவு யாது?

**விடை**.- மனிதர்கள் மனதை சாந்தப்படுத்தும் விஷயம் ஸுககரமாயும், சஞ்சலப்படுத்தும் விஷயம் துக்ககரமாயும் இருக்கும். மனிதன் ஸுகத்தை அடையவும், துக்கத்தை நீக்கவும் முயலுவதால் கர்மாக்கள் உண்டாகின்றன. இந்த மாதிரி ஆசையுடை:ப ஸாதாரண ஜனங்களைக் கவர்ந்து கர்மம் செய்யச்சொல்லி அதன் கஷ்டங்களைக் காட்டி சித்தசுத்தி உண்டாக்கி கர்மங்களிலிருந்து விடுவிப்பதே வைதிக கர்மங்களின் நோக்கம்.

**வினா** 94:- ஞானத்தின் ஸ்வரூபமும் நோக்கமும் யாவை?

**விடை**.- முற்கூறிய ஸுகதுக்காதிகளின் நிலையாமை உணர்ந்து அவைகள் இரண்டுமற்ற ஆனந்த அத்யாத்ம நிலையை அடைய வேண்டும் என்பதே ஞானம் பெற ஒருவனைத் தூண்டும். கர்மங்கள் தந்த்ரமாக ஸாதாரண ஜனங்களை இந்நிலைக்குக் கொண்டுவந்துவிடும். இம்மாதிரி முயற்சிப்போர் எளிதில் பரமபதம் பெறுவர்.

**வினா** 95.- வைதிக கர்மங்களால் எவ்வாறு ஞானம் பெறுவது? வேறு ஏதாவது முடிவும் அவைகளால் ஏற்படுமோ?

**விடை**.- முற்கூறிய வைதிக் கர்ம ரஹஸ்யத்தை உணர்ந்து, அவைகளின் பலத்தில் மனதைச் செலுத்தாது, அவச்யம் செய்யவேண்டிய கடமைகளாக அவற்றில் ஒருவன் பழகிவந்தால் முடிவில் அவன் மனம் சுத்தமாகி அவனுக்கு ஞானம் பிறக்கும். இவ்வாறு உணர்ச்சியோடு கர்மம் செய்யாது, ஜனங்களைத் தூண்டுவதற்காக அவைகளுக்கு பலனாகக் கூறப்பட்டவைகளை இச்சித்து காமம் ஒருவன் செய்தால் அவன் காம பந்தத்திலிருந்து ஒரு நாளும் விடுபடமாட்டான். கர்மபலனை ஸ்வர்க்கநரகங்களில் அனுபவித்துக் காமம் க்ஷணித்ததும் உலகத்தில் வந்து அவன் பிறக்க வேண்டியது தான்.

**வினா** 96.- மோக்ஷம் அடையும் வழி எப்படி?

**விடை**.- விசித்ரமாகக் காணப்படும் பிரபஞ்சம் எல்லாம், இந்திரியங்களுக்குப் புலப்படாது ஓர் காரணத்திலிருந்து (ஆலமரம் சிறிய விரையிலிருந்து தழைப்பது போல) வெளிவந்ததென்றும், இது ஒழுங்காகத் தொழிற்பட, இதற்கும் அப்பாற்பட்டு மனவாக்குக்கு எட்டா ஓர் பரம் பொருளுள் இது அடங்கி இருத்தல் வேண்டும் என்றும் முதலில் உணரவேண்டும். பின்னர் அண்டத்தில் உள்ளது போல பிண்டமா கிய நமது தேஹத்திலும், ஸகல வ்யவஹாரங்களை நடத்துவதற்கு நமது அறிவுக்கு அப்பாற்பட்ட ஆத்மா ஒன்று உண்டு என்பதை உணர வேண்டும். இவ்விரண்டுக்கும் உள்ள ஸம்பந்தத்தை, விசாரணை ஞானம், த்யானம் முதலியவைகளால் உணர்ந்து வருத்தவிரைபோல மனதைமேல்மேலும் கிளம்பாது தடுத்து நிற்பதே மோக்ஷத்திற்கு வழி.

**வினா** 97.- பட்டிணி கிடத்தல், கல்யாணம் இல்லாதிருத்தல், அதிதிபூஜை முதலியன தபஸா?

**விடை**.- ஸாதாரணமாக இவைகளில் திடீரென்று தீவ்ரமாகப் பழகுவது ஆத்ம ஞானத்திற்குத் தடையாக ஏற்படும். இவைகளில் உள்ளபடி பழகுவது மிகுந்த பழக்க த்தின் பேரில் ஏற்பட்டால் தான் நிலைகுலையாது நிற்கும். ஆதலால் ஸாதாரணமாக இரண்டு வேளை தேஹதாரணத்திற்கு மாத்திரம் வேண்டியதை (ருசி முதலியவை களைக் கவனிக்காது) சாப்பிடுபவனே பட்டினி கிடப்பவன். யாகாதி காலங்களைத் தவிற மாம்ஸித்தைத் தொடாதவனே மாம்ஸ பக்ஷணம் செய்யாதவன். தன் பெண் சாதி யுடன் தகுந்த காலங்களில் மாத்திரம் ஸுகிப்பவனே பிரஹ்மசாரி. ஸ்வாமி நைவேதனம் ஆன பின்னரும் வரும் அதிதிகள் வீட்டிலுள்ளோர் எல்லோரும் போஜனம் செய்து திருப்தியடைந்த பின்னரும் போஜனம் செய்பவனே அதிதிபூஜை செய்பவன். ஆகவே இவ்வாறு முற்கூறியவைகளை அனுஷ்டிப்பதே உண்மையான தபஸாகிய வ்யவஹார ஒடுக்கம், அடக்கம் முதலியவைகளை உண்டாக்கி ஆத்ம ஞானம் வரும்படி செய்யும்.

**வினா** 98.- மனிதன் உண்மையாகப் பார்க்குங்கால் தொழில்களுக்குக் கர்த்தா வாக இருப்பானா?

**விடை**.- ஸாதாரணமாக அவன் கர்த்தாப்போல காணப்படுவான். ஆழ்ந்து யோசித்தால் அவன் கர்த்தாவாகவே மாட்டான். அப்படி இருந்தால் அவன் தொடங்கும் காரியங்கள் எல்லாம் ஜயமாகவேண்டும். எவனும் தன் காரியம் முடியக் கூடாது என்று ஓர் தொழிலைத் தொடங்கமாட்டான். ஆகவே கர்மங்கள் எல்லாம் பிரகிருதியினதும் அதனாலாகிய தேஹத்தினதும் தர்மமே ஒழிய ஆத்மாவின் தர்மமே அல்ல. இதை உள்ளபடி உணர்ந்தால் ஒருவனுக்கு உலக விஷய ஆசை எளிதில் நீங்கும்.

**வினா** 99.- தான் நினைத்தவைகள் ஒன்றும் முடியாத ஒருவன் உலகில் எவ்வாறு சாந்தமாக வஸிப்பது?

**விடை**.- முன்காலத்தில் மஹாபலி இந்திரனால் ஜயிக்கப்பட்டு எல்லாம் இழந்து கஷ்டகாலத்தில் கழுதை ஜன்மத்தை அடைந்தான். அப்பொழுது இந்திரன் அவனைத்தேடிச் சென்று பரிஹாஸம் செய்து துக்கத்தை மூட்டினான். அதற்குப் பலி, 'இப்பொழுது உன்காலம். எனக்கும் என்றைக்காவது காலம் வரும். இவ்வாறு எல்லாம் காலத்தைப் பொருத்திருக்க அதனால் வரும் ஸுகதுக்கங்களை ஒரு பொருட்டாக அறிவுடையோர் பாவியார்கள். ஆதலால் அவர் ஸுகத்தில் மூழ்கி, துக்கிக்கும் விரோதிகளை உன்போலப் பழிக்கமாட்டார்கள். இவ்வாறு செய்பவர்கள் துக்கம் வந்த காலத்தில் அதில் மூழ்கி உயிர் இழப்பார்களே ஒழிய நிலைத்து வாழ அவர்களால் முடியாது. மேலும் இவ்வாறு பெருமை பேசுபவர்களிடம் ஸுகம் அதிகமாக நிலைக்காது," என்று கூறி இந்திரன் வாயை அடக்கினான். ஆகவே பலி மனதைப் போன்ற மனதை வைத்துக்கொண்டால் எப்படிப்பட்ட கஷ்ட காலத்தையும் பொறுக்கலாம். இந்திரனைப் போலிருந்தால் ஒன்றும் செய்யமுடியாது தவிக்க வேண்டும்.

**வினா** 100.- ஸுகம் அதிகமாக நிலைத்திருப்பதற்கு என்ன வழி?

**விடை**.- முன் கதையில் பலி இந்திரனுக்கு புத்தி கூறி முடித்ததும் அவன் தேஹத்திலிருந்து லக்ஷ்மீதேவி (ஸுகதேவதை) வெளிவந்து இந்திரனிடம், பலி சொல்வது உண்மை, ஆதலால் அவனைப் பரிஹாஸம் செய்யாது மரியாதையாய் நடத்த வேண்டும்' என்றும், நான் இப்பொழுது பலியினிடமிருந்து பிரியவேண்டிய காலமாதலால் பிரிந்தேன்' என்றும், 'எப்பொழுதும் தர்மப்படி நடப்பவர்களிடமே நான் நிலைத்திருப்பது,' என்றும், கூறினாள். உடனே இந்திரன் வெட்கி, 'நீ என்னிடம் நிலைத்திருக்க என்ன வழி?' என்று கேட்க, அவள் 'என்னை நான்கு பாகமாகப் பிரித்து வேத விதிப்படி வை' என்றாள். இந்திரன், முதல் பாகத்தைப் பூமியிலும் ரண்டாவதை ஜலத்திலும், மூன்றாவதை அக்னியிலும் நான்காவதை ஸத்துக்களிடத் தும் வைத்துக்காப்பாற்ற இந்திரனோடு லக்ஷ்மி வஸிக்கத் தொடங்கினாள். ஆகை யால் உலகஸுகங்களை விதிப்படி பலர் சேர்ந்து அனுபவித்தால் ஸுகம் நம்மிடம்

நீடித்திருக்கும். தன் நயம் கருதுபவரிடம் எதகம் நீடித்து நிற்காது. உலக ஸுகங்கள் கொடையாலேயே நிலைத்து நிற்பவை.

**வினா** 101.- ஸ்ருஷ்டி எத்தனை விதம் அவைகளுள் பேதம் என்ன?

**விடை.- ஈச்வர ஸ்ருஷடி**, **ஜீவஸ்ருஷ்டி** என்ற இரண்டு வித ஸ்ருஷ்டி யுண்டு. ஈச்வர ஸ்ருஷ்டி, பிரபஞ்சம் முதலிய விசித்திரங்கள். இவைகளால் ஜீவனுக்கு ஓர்விதக் கெடுதியும் இல்லை. தத்தாத்திரேயர் முதலியோர் விஷயத்திலி ருந்தது போல (**பாகவத வினாவிடை 11-ம் ஸ்கந்தம் பார்க்க**) ஈச்வர ஸ்ருஷ்டி மோக்ஷ வழியுமாகும். ஜீவ ஸ்ருஷ்டி அபிமானம் காமம் முதலியன. இவைகள் ஜீவனை பந்தப்படுத்தும் திறனுடையவை. இதை ஜீவன் மனத்தைவிட்டு நீக்க முயல வேண்டும். முன்னதை அவன் நினைத்தாலும் விடமுடியாது. 'மண் ஈச்வர ஸ்ருஷ்டி, பானையும் அதன் மேல்வரும் அபிமானாதிகளும் ஜீவஸ்ருஷ்டி; நாடு ஈச்வர ஸ்ருஷ்டி, நகரமும் அதன் ஸம்பந்தமாகவரும் அபிமானாதிகளும் மனிதஸ்ருஷ்டி'.

**வினா** 102 - பரமபதம் பெறவேண்டும் என்ற எண்ணமுடைய மனிதன் முக்கியமாக உணரவேண்டிய வேதரஹஸ்யம் எது?

**விடை.**- பரம்பொருள் இரண்டுவிதமாகக் காட்டப்பட்டிருக்கிறது. வேதங்களில் நேரிட வர்ணிக்கக்கூடிய ஸகுணப் பிரஹ்மம் ஒன்று. வேதங்களுக்கு அப்பாற்பட்ட தாயும் மனவாக்குக் கெட்டாததாயும் வேதங்களால் ஒருவாறு குறிக்கப்படும் நிர் குணப்பிரஹ்மம் மற்றொன்று. இவ்விஷயமே மனிதன் முக்கியமாக உணரவேண்டி யது.

**வினா** 103.- விதம் விதமான வழிகள் வேதங்களில் கூறப்படுகின்றன; பொதுவாகக் கர்மம் செய்ய வேண்டும் என்றொருபாகமும், கர்மத்தை விடு என்று மற்றொரு பாகமும் கூறுகின்றன. இவைகளில் எதை ஒருவன் பின்பற்றுவது?

**விடை**- வேதங்கள் அதிகாரி பேதத்திற்குத் தகுந்தபடி அநேக வழிகளைக் காட்டுகின்றன. இம்மார்க்கங்கள் எல்லாம் ஏணியின் படிகள் போன்றவை. மேலான மனவாக்கெட்டா நிர்குணமாகிய பரம்பொருளைப் பற்றுவதே இந்த ஏணியின் முடிவு. எவனுக்கு எந்த வழி தகுதியாகத் தோற்றுமோ அதை (வேத ரஹஸ்யத்தை உள்ளபடி உணர்ந்து மறவாது) பின்பற்றுவதே நலம், வீணாக ஒருவன் ஸந்தேஹிக்க வேண்டியதில்லை.

**வினா** 104.- மனிதன் நிலையை எவ்விதமாக உணருவது?

**விடை.**- மனிதனிடம் ஆசை என்ற மரம் ஒன்று உண்டு.. விபரீத ஞானமே அதன் விதை. கோபமும் மதமுமே அதன் அடிமரம், கர்மம் செய்யவேண்டும் என்ற ஆவலே அதைச் சுற்றியுள்ள குழி. அஞ்ஞானமே அதன்வேர், அலக்ஷயமே ஜலம், பொறாமையே இலைகள், கெட்ட கர்மாக்களே அதன் ரஸம், புத்திமயக்கமும் சஞ்சலமுமே அதன் சுள்ளிகள், துக்கமே கிளைகள், பயமே ஓர் முளை, ஸுக

இச்சையே அதைச் சுற்றும் கொடி, மனிதர்கள் இதில் உண்டாகக்கூடிய பழத்தால் ஸுகம் பெற எண்ணுகிறார்கள். இதை ஞானத்தால் வெட்டிச் சாய்ப்பவனே பரமபதம் அடைவான். விஷயஸுக அனுபவத்தால் இதைவளர விடுபவன் இதனாலேயே இறப்பான்.

**வினா** 105.- தர்மத்தின் ஸ்வரூபம் யாது?

**விடை.**- பெரியோர் நடத்தை, வேதம் ஸ்மிருதி இவைகளின் கோட்பாடுகள், நடத்தையின் நோக்கம் இவைகளே ஓர் செயலை தர்மம் அதர்மம் என்று குறிப்பிக்க ஏற்பட்டுள்ள ஆதாரங்கள். இம்மாதிரியான செயல்களையே மேலான அல்லது தாழ்ந்த பலன் கொடுப்பவைகள் என்று ரிஷிகள் பிரித்திருக்கின்றனர். இச்செயல்களு க்குப் பொதுவாக ஸுகமேபலன். ஒருவன் தர்மப்படி நடக்கிறான் என்பதை அவன் செயலின் ஸ்வரூபத்தாலும், அவன் செய்யும் காலத்தின் ஸ்வபாவத்தாலும் தீர்மானம் செய்ய வேண்டியது. கஷ்ட காலங்களில் அவசியம் செய்யவேண்டியதாக வரும் பாபத்தைச் செய்து ஒருவன் தர்மவானாக விளங்கலாம். ஸத்யம் கூறுவது தர்மம் தான். ஆனால் தகாதகாலத்தில் வேறொருவருக்குப் பெருங்கேடு விளைப்ப தாகிய ஸத்யத்தை எவரும் கேட்காதிருக்கையில் தானாகவேகூறுவதும், அல்லது கேடுவிளைப்போர் கேட்கும் காலத்தில் கூறுவதும் அதர்மமே. (**மஹாபாரத வினா விடை 2-ம் பாகம் கர்ண பர்வம் பார்க்க**) இந்த ஸமயங்களில் அஸத்யம் கூறுவதே தர்மம். பொதுவாக ஏற்பட்டுள்ள பிறர் பொருளை விரும்பேல் முதலிய நன்னடக்கைக் கோட்பாடுகளின்படி நடந்து, கெட்ட தொழில்களைச் செய்யாதிருத் தலும், ஸத்யம் உரைத்தல் முதலிய நல்ல செய்கைகளை ஸமயம் அறிந்து செய்வதுமே தர்மத்தின் ஸ்வரூபம். தர்மத்தின் கதி அதிஸூக்ஷ்மம். எப்பொழுதும் கெட்ட தொழிலைச் செய்யவே கூடாது. இந்த விஷயத்தை முன்னர் **துலாதாரன்** என்ற வைச்யன் **ஜாஜலி** என்ற ரிஷிக்கு உபதேசம் செய்திருக்கிறான்.

**வினா** 106.- இந்த ஜாஜலி யார்? இவர் சிறப்பு எத்தன்மையது?

**விடை.**- ஜாஜலி என்பவர் ஓர் ரிஷி. மஹா தபஸ்வி. எவ்வித வெளி விஷயத்திலும் தாக்கற்றவராக இருந்தார். ஓர் ஸமயத்தில் இவர் மெய்ம்மறந்து அசையாது நின்றுகொண்டு தபஸு செய்யத்தொடங்கினார். அப்பொழுது சில குலிங்க ப்பறவைகள் இவர்ஜடையில் கூடு கட்டின. இதை அறிந்த ஜாஜலி அசையாமலே இருந்துவிட்டார். கொஞ்ச காலம் இவ்வாறிருக்க பக்ஷிகள் குஞ்சு பொறித்து குஞ்சுகளும் பெரிதாகிப் பறந்து போயின. ஸுமார் ஒரு மாதம் அவைகள் திரும்பி வாராமல் போக ஜாஜலி தாம் ஒரு பெரிய யாகம் செய்து முடித்தவர் போல திருப்தி அடைந்து ஸ்நானம் செய்து அதிக ஸந்தோஷம் அடைந்தார்.

**வினா** 107.- ஜாஜலிக்கு இந்த ஸமயத்தில் யார் எவ்வாறுபுத்திமதி கூறியது? .

**விடை.**- இவ்வாறு உலகத்தின் விசித்திரம் அறியாது வீண் கர்வம் கொண்ட ஜாஜலியை நோக்கி 'வல்லவனுக்கு வல்லவன் இந்த ஈச்வர ஸ்ருஷ்டியில் எப்பொழு தும் உண்டு. இந்த ரஹஸ்யம் அறியாத சில ஞானிகளே தமது நிலையைக் கண்டு

மகிழ்ந்து கர்விப்பர். நீ காசிநகரத்திலிருக்கும் **துலாதாரன்** என்ற வைச்யனுக்கு நிகரன்று. அவன் கூட உன்னைப்போல கர்விக்கமாட்டானே' என்று ஓர் அசரீரிவாக்குப் பிறந்தது.

**வினா** 108.- உடனே ஜாஜலி என்ன செய்தார்? மேல் என்ன நடந்தது?

**விடை.**- இதைக்கேட்டதும் தெளிந்த ஜாஜலி தாமதிக்காது காசிநோக்கிப் புறப்பட்டார். வழியில் ஏற்பட்ட கஷ்டங்களைக் கவனியாது தம் கர்மமே கண்ணாகத் துலாதாரன் வீடு வந்து சேர்ந்தார். இவரைக் கண்டதும் இவர் விஷயமாக நடந்த அற்புத விஷயங்கள், அசரீரிவாக்குப் பிறந்தது முதலியவைகளை அவன் முன்னர் கூறி இவரை மரியாதை செய்தான். அப்பொழுது துலாதாரன் ஜாஜலிக்குத் தர்ம ரஹஸ்யத்தை உபதேசம் செய்தான்.

**வினா** 109.- துலாதாரன் கூறிய தர்மர ஹஸ்யங்கள் யாவை?

**விடை.**- '**அஹிம்ஸையே பரம தர்மம்**'. மனது வாக்கு காயம் என்ற மூன்று கரணங்களாலும் தன்னால் கூடிய வரையில் ஒருவன் எந்த ஜந்துவுக்கும் கஷ்டத்தை உண்டாக்கக்கூடாது. இதனாலே அவனும் நிர்பயமாக இருப்பான். மற்றையப் பிராணிகளும் நிர்பயமாகவாழும். இந்தக்கலக்கமற்ற வாழ்வே இந்த தர்மத்தின் பலன். இந்த எண்ணமுடைய பணக்காரனே சிறந்தவன். நல்லபேரெடுக்க வேண்டும் என்று காம்யமாக இந்த தர்மத்தை அனுஷ்டித்தால் ஸாதாரண ஸுகமும், நிஷ்காம்யமாக அனுஷ்டித்தால் மோக்ஷஸுகமும் கிடைக்கும். உழுதுண்டு வாழ்வார்க்குநிகர் ஒருவருமில்லை என்பது பலருடைய நம்பிக்கை. இது கூட அஹிம்ஸைக்குக் கீழ்ப்பட்டதே. யாகாதிக்ருதுக்களைக் பிராணிஹிம்ஸைவிட்டு, அன்ன உருண்டைகள் மூலமாகச் செய்ய வேண்டும். யாகரஹஸ்யத்தை உணர்ந்தவர்கள், அதில் நடக்கும் ஏமாராதனை முதலியவைகளிலேயே கண்ணாகவிருப்பர். இது தான் முக்யபாகம். ஞானிகள் மனோரிரோதத்தையே பெரிய யாகமாகக் கொள்வர். ஆதலால் அஹிம்ஸையே பிறரைத் திருப்தி செய்தல் மனோ நிரோதம் முதலிய ரூபமாக விருந்து நிஜயாகமாகின்றது. இந்த யாகத்தில் சிரத்தையே ஒருவனுக்குப் பெண்சாதி. மிகுந்த சிரத்தையாக இதில் பழகுவதே ஆத்மா என்ற புண்யக்ஷேத்திரத்திற்கு ஒருவனை எளிதில் கொண்டு சேர்க்கும்.

**வினா** 110.- மேல் இவர்கள் கதி எவ்வாறாயிற்று?

**விடை.**- இப்படி துலாதாரன் அஹிம்ஸா ரஹஸ்யத்தை விஸ்தரித்து வருகையில், ஆகாயத்தில் சில பறவைகள் பறந்து போயின. அதில் ஜாஜலி ஜடையில் வளர்ந்த சிலபறவைகள் இருக்கக்கண்டு துலாதாரன் ஜாஜலிக்குச் சொல்ல, அவர் அவைகளைக் கூவி அழைத்தார். அவை உடனே பரிவுடன் அருகே வந்து அஹிம்ஸையின் மேன்மையைப் பற்றி துலாதாரன் கூறியது போலக் கூறிப் போயின. இவ்வாறு ஸத்காலக்ஷேபம் செய்துகொண்டு இருவரும் மெய்மறந்து இருக்கையில் ஆகாயத்திலிருந்து விமானம் வர இருவரும் ஸ்வர்க்கம் புகுந்து ஆனந்தம் அனுபவித்தனர்.

**வினா** 111.- இந்த அஹிம்ஸையைப் பற்றி வேறு யார் எப்பொழுது எவ்வாறு விஸ்தரித்திருக்கிறார்?

**விடை**.- ஓர் கோமேத யாகத்தில் முதலில் ஓர் கடாவைப் பிராஹ்மணர்கள் கொன்று விட்டனர். இந்த ஸமயத்தில் அருகே இருந்த பசு மிகுந்த தீனஸ்வரத்துடன் கத்தத் தொடங்கியது. இவை எல்லாவற்றையும் பார்த்திருந்த **விசாரகு** என்ற அரசன் மிகுந்த துக்கம் அடைந்து, 'ஐந்துக்களுக்கு ஸுகம் உண்டாகட்டும். தர்மா தர்ம விவேகம் குறைந்தவர்களும், கீர்த்திபெற வேண்டும் என்ற துர்எண்ணங் கொண்டவர்களும், ஸந்தேஹ மனதுடையவர் யாகத்தில் உயிர்ப் பிராணிகளைக் கொல்வது மேன்மை என்பர். **மனு** அஹிம்ஸையே மேலான தர்மம் என்று கூறுகிறார். கொடியவர்கள் தான், ஸுரை, மீன், மது, மாம்ஸம், முதலியவைகளை ஆஹாரமாகக் கொண்டிருக்கின்றனர். காமக்ரோத மோஹங்களாலேயே இவைகளில் மனிதர்களுக்குப் பற்றுதல் உண்டாகின்றது. யாக ரூபமாக இருக்கும் பரமாத்மாவை பரமான்னமாகிய பாயஸத்தின் மூலமாயே ஆராதிக்கவேண்டும். தேஹதாரணத்தி ற்கு அவசியமாக எவ்வளவு ஹிம்ஸை செய்யும்படி நேருமோ அதையும் மிகுந்த மனக்குறையின் மேல் செய்யலாம். இதுவும் வரவரக் குறைவது நலம்,' என்றார்.

**வினா** 112.- செயல்களைச் செய்யும் முன், ஒருவன் என்ன செய்ய வேண்டும்?

**விடை**.- **எண்ணித் துணிக கர்மம்** என்பது விதி. இதன்படி தனது ஒவ்வொரு செயலைப்பற்றியும் ஒருவன் ஸாவதானமாக யோசிக்க வேண்டும். அது கெட்ட தொழிலா அல்லவா என்றும், கெட்டதாகில் அந்த ஸந்தர்ப்பத்தில் நன்மை உண்டாக்க அவசியம் செய்தே தீரவேண்டுமா என்றும், நல்லதாகில் அந்த ஸந்தர்ப்பத்தில் செய்தால் பிறருக்குக் கெடுதியை விளைக்காதிருக்குமா என்றும், தீரஸாவதானமாக ஆலோசித்துப் பின்னர் ஓர் கர்மத்தைச் செய்யத் துணிய வேண்டும்: முன்காலத்தில் **கௌதமர்** என்ற ஓர் ரிஷி தன்பெண் சாதியான **அஹல்யை** இடம் குற்றம் ஏற்பட்டதைக்கண்டு அவளைக் கொல்லும்படி தன் பிள்ளையான **சிரகாரிக்கு** உத்தரவு கொடுத்துவிட்டுக் கோபத்துடன் தனிமையாக வனம் சென்றார். பார்த்தான் சிரகாரி! கத்தியைக் கையில் வைத்துக் கொண்டு யோசிக்கத்தொடங்கினான், 'தகப்பனார் சொற்படி நடக்கவேண்டியது பிள்ளையின் கடன், தகப்பனாரோ கொல்லும்படி உத்தரவு செய்திருக்கிறார். கொலை கொடுந்தொழில். தாய்க்கொலை கேட்கவேண்டியதே இல்லை. தகப்பனார் உத்தரவைத் தட்டக்கூடாது. ஆனால் கோபத்துடன் இங்கு நில்லாது அவர்போய் விட்டார். ஆதலால் அவர்மனம் எவ்வாறுமாறுமோ? மறுபடியும் வந்து அவர் கொல்லும்படிக் கூறினால் அப்பொழுது பார்த்துக்கொள்ளலாம்' என்று ஒன்றும் செய்யாது நின்றுவிட்டான். (பரசுராமர் தாயைக் கொன்றதை இதோடு ஒப்பிட்டுப் பார்க்க.) இதற்குள் காடுசென்ற கௌதமர் கோபம் தணிந்து வீடுவந்து பிள்ளை தன் உத்தரவுப்படி நடவாததைக்கண்டு மகிழ்ந்து, 'உன் தாய் என்ன செய்வாள். இது அவளாலேயே ஏற்பட்ட குற்றமல்லவே. எனது அஜாக்ரதையே காரணம்' என்று எண்ணித் தன் பெண்சாதிக்குத் தகுந்த தண்டனை விதித்தார்.

**வினா** 113.- அஹிம்ஸா தர்மத்தை அரசன் எவ்வாறு கைக் கொண்டு நடப்பது?

**விடை**.- அரசன் கொடியவர்கள் விஷயத்தில் அஹிம்ஸாதர்மத்தை அனுஷ்டிப்பது மிகக் கஷ்டம். கொடியவர்களுக்கு ஏற்பட்ட தண்டனையைக் குறைத்து அவர்களுக்கு தர்மோபதேசம் செய்து, பின்னர் அவர்கள் நடத்தை சீர்திருந் தாவிடில் கோபதாபமில்லாது ஸாவதானமாக முழுதண்டனை விதிப்பதும், கொலை செய்தவனைக்கூட முதல்தரமாகில் 'உயிர்த் தண்டனை விதியாது கொடிய வேறு தண்டனை விதித்து அவன் மறுபடியும் உலகில் வாழ்ந்து தன் நடத்தையை சீர்திருத்திக்கொள்ள இடங் கொடுப்பதும், இவ்வாறு செய்தும் திருந்தாதவனுக்கு கோபதாபமில்லாது ஸாவதானமாக உயிர்த்தண்டனை விதிப்பதுமே அரசன் அஹிம்ஸா தர்மத்தில் கொடியவர்கள் விஷயமாகப் பழகும் வழிகள். இம்மாதிரி எந்த ஸமயத்திலும் அஹிம்ஸையின் லேசத்தை எங்கும் காட்ட இடமிருக்கும். மனதில் ஸதா அஹிம்ஸா நோக்கமும் செயலில் கூடியவரை எந்த ஸமயத்திலும் அஹிம்ஸையில் பழகுவதுமே இந்த தர்மானுஷ்டான ரஹஸ்யம்.

**வினா** 114.- ஸுகம்பெருவதற்கும் மோக்ஷம் அடைவதற்கும் ஏற்பட்டுள்ள வழிகள் யாவை?

**விடை**.- முன்காலத்தில் நஹுஷராஜன் வீட்டிற்கு பிரஹ்மா வந்தார். அந்தக்கால் வழக்கப்படி அவன் ஓர் ஜந்துவைக் கொன்று அவருக்கு விருந்தளிக்க யத்தனித்தான். அப்பொழுது அந்த ஜந்துவைக் கட்டி இருந்த இடத்தின் அருகே கபிலபகவான் வந்துகொண்டிருந்தார். இந்த ஜந்துவைக் கண்டதும் 'வேதரஹஸ்யம் ஒன்றிருக்க நடக்கும்காரியம் வேறொன்றாயிருக்கிறதே' என்று பெருமூச் செரிந்தார். இந்த ஸமயத்தில் அந்த ஜந்துவுள் ஓர் ரிஷி புகுந்து கொண்டு 'வேதரஹஸ்:பம் எது' என்று கேட்டார். கபிலர் 'அஹிம்ஸையே வேதரஹஸ்யம், கர்மங்களைச்செய், கர்மங்களைச் செய்யாதே என்ற இரண்டு விதக்கோட்பாடுகளே வேதங்களின் ஸாரம். இவைகளிலிருந்து அஹிம்ஸா நோக்கத்தோடு கர்மங்களைச் செய்து முடிவில் கர்மம் செய்யாதிருத்தலே இவ்விருகோட்பாடுகளின்ரஹஸ்யம்' என்றார். 'யாகாதிகள் செய்துமேன்மை பெறவேண்டும், என்று வேதம் கூறவில்லையா?' என்றது ஜந்து. கபிலர் 'நியாயம்தான். அவைகளால் வரும் முடிவு நீடித்து நிலைத்து நிற்காது. யாகத்தைக் கூறிய வேதம் சாதுர்மாஸ்யம் முதலிய அஹிம்ஸா தர்மானுஷ்டானத்தையும் கூறியுள்ளது. ப்ராணி ஹிம்ஸா யாகங்களை விட்டு அஹிம்ஸா யாகங்களில் காலக்ரமத்தில் பழக ஒருவன் முயலவேண்டும். இந்த அஹிம்ஸா தர்மமூலமாகக் கர்மங்கள் செய்து, வேதங்கள் சப்தமூலமாகக் கூறும் ஸ்குண பிரஹ்மோபாஸனை செய்பவனுக்கு ஸுகம் உண்டாகும். வேதங்களால் நேரிடக் கூறமுடியாததாகிய நிச்சப்தமாகிய நிர்க்குணப் பிரஹ்மத்தில் ஈடுபட்டு, வெளி நடத்தையில் இந்த்ரிய நிரோதம், பொறுமை, ஆசை ஓய்ந்ததால் கர்மம் செய்யாதிருத்தல் ஆகிய இவைகளைக் கடைப்பிடித்தலே மோக்ஷுகம் பெரும்வழி' என்றார்.

**வினா** 115.- வேதங்களால் கூறப்படும் தர்மார்த்த காமங்களுள் எது சிறந்தது?

**விடை.-** முன்காலத்தில் ஓர் பிராஹ்மணன் **குண்டதாரன்** என்ற மேகாதிபதியைக் குறித்து தர்மத்தால் வரும் பலனை உத்தேசித்து தர்மம் வேண்டும் என்று தவம் இருந்தான். இவன் தபஸுக்கு மெச்சி குண்டதாரன் பிரத்யக்ஷமாகி, 'எதிர் பார்ப்பதால் பாபங்களும், பொறாமையால் கோபமும், மோசத்தால் காமமும் உண்டாகும். ஆனால் செய்நன்றி கொல்வதால் வேறு பாபங்கள் உண்டாகாது, அதுவே மேலான பாபமாக ஓங்கிநிற்கும்' என்று கூறி எச்சரிக்கை செய்துவிட்டுப் போனான். பின்னர் பிராஹ்மணர் ஸ்வப்னத்தில், குண்டதாரன் தன் மேலதிகாரியிடத்திலிருந்து வெறும் தர்மசிந்தையை மாத்திரம் தனக்கு வாங்கிக்கொடுத்ததாகக் கண்டான். இந்த வரத்தால் பிராஹ்மணன் மனம் உலகவிஷயத்தில் பற்றாது தபஸிலேயே முனைந்துவிட்டது. முன்னர் குண்டதாரன் செய்ந்நன்றி கொல்வதைப் பற்றிக் கூறியதை ஞாபகம் வத்திருந்த பிராஹ்மணன், உலகவிஷய மேன்மை வரும்படி செய்யாது குண்டதாரன் தர்மசிந்தை வாங்கிக் கொடுத்ததை அவஸரப் பட்டு அபகாரம் என்று எண்ணி விடாது நிதானித்துப் பழக்கத்தின் பேரில் மற்றைய உலகத்தவரைவிடத் தான்ஸுகமாக இருப்பதைக் கண்டு, குண்டதாரனிடம் நன்றியறிதலுடையவனாகி தர்மாத்மாவாக உலகில் ஸுகமாக வாழ்ந்துவந்தான். ஆகவே தர்மம் முதலில் கஷ்டமாகத் தோற்றியபோதிலும் உண்மையாக மிகச் சிறந்தது.

**வினா** 116.- ஸ்வர்க்காதி ஸுகங்களை முடிவாக இல்லாது கேவலம் தர்மத்தையே முடிவாக உடைய யாகத்தின் ஸ்வரூபம் என்ன?

**விடை.-** முன்காலத்தில் பிராஹ்மணர் ஒருவர் வேதவிதிப்படி யாகம் செய்ய வேண்டும் என்று ஒன்றையும் விரும்பாது பிச்சைக்காரனைப்போல நியமம் தவறாது விருதம் அனுஷ்டித்துவந்தார். இந்த யாகம் செய்வது பிராணிஹிம்ஸை ஸம்பந்தமுள்ள தாகையால் இவர் பெண்சாதிக்கு இவர் நடத்தையே பிடிக்கவில்லை. ஆயினும் தன் நிலைக்கு ஏற்ற எண்ணத்திற்கு விரோதமாக இவளும் தன் கணவனுடன் உட்காரவேண்டி வந்தது. அப்பொழுது அருகாமையிலிருந்த பர்நாதர் என்ற ரிஷி மான் உருக்கொண்டு, தன்னைக் கொன்று யாகம் செய்யும்படி வேண்டினார். பிராஹமணர் ஜீவகாருண்யத்தால் அந்த மானைக் கொல்வதில்லை என்று தீர்மானித்தார். மான் தன்னை அவசியம் கொல்லவேண்டும் என்றும் அதனால் அவருக்கு ஸுவர்க்க ஸுகம் கிடைக்கும் என்றும் கூறிப் பிராஹ்மணன் ஞானக்கண்ணுக்கு அது புலப்படும்படி செய்தது. இதைப் பார்த்ததும் பிராஹ்மணர் பிராணிவதத்தால்தான் ஸ்வர்க்கஸுகம் கிடைக்கும் என்று எண்ணிக் கலங்கினார். அப்பொழுது மான் தன் நிஜ உருவை எடுத்துப் பிராணிவதம்யாகத்திற்கு முக்கியமல்ல என்று கூறிற்று. வதத்தை எண்ணினமையால் பிராஹ்மணன் தபோபலம் குறைந்தது. இதை ஸரிப்படுத்த பர்நாதர் நியாயப்படி ஓர் யாகம் செய்வித்து அஹிம்ஸையால் சிறப்படையும்படி செய்தனர். ஆதலால் அஹிம்ஸா ஸம்பந்தமாகச் செய்யப்படும் யாகமே தர்மவிருத்திக்குக்காரணமாவது. இங்கு விருத்ராஸுரன் கதை தக்ஷயாகம் முழுவதும் சொல்லப்பட்டிருக்கிறது. (**இதன் விஸ்தாரத்தை பாகவத வினா விடை 6-வது 4-வது ஸ்கந்தங்களில் பார்க்க**.)

**வினா** 117.- சாஸ்திரஞானம், மனோ நிரோதம் முதலியவைகள் இல்லாத ஸந்தேஷப்பிராணி ஒருவனுக்கு சிறப்படைய நல்லவழி எது?

**விடை.-** குரு ஆராதனம், பெரியோருக்குப் பணிவிடைசெய்தல், சாஸ்திர புராணங்களைக் கேட்பது ஆகிய இவைகளே அவன் அனுஷ்டிக்கவேண்டிய நல்ல மார்க்கம். இவ்வாறு அவன் செய்துவந்தால் காலக்கிரமத்தில் அவன் மனம்சுத்தமாகி அதில் சிறந்த ஸாதனமாகிய ஞானம் பதியும். மற்றைய நற்குணங்கள்யாவும் தாமே அவனுக்கு உண்டாக நாளடைவில் அவன் மேலான நிலையை அடைவான்.

**வினா** 118.- யோக மார்க்கத்திற்கும் ஸாங்கிய மார்க்கத்திற்கும் உள்ள ஒற்றுமை வேற்றுமைகள் யாவை?

**விடை-** இரண்டு மார்க்கங்களிலும், விருதம், மனஸ்சுத்தம்' ஜீவகாருண்யம் ஆகிய மூன்று குணங்களும் அவசியம் வேண்டும் என்று கூறப்பட்டிருக்கின்றன. சிற்சில அப்யாஸ மூலமாக நேரிட பிரத்யக்ஷமாகக் காணக்கூடிய பலன்களைக் காட்டி ஒருவனைக்கிரமமாக யோகமார்க்கம் மேலான படிக்குக் கொண்டு போகின் றது. ஸாங்கிய மார்க்கமோ சாள்திர விஷய ஆராய்ச்சி ரூபமாக இருந்து அறிவை தீக்ஷண்யப்படுத்தி அதன் மூலமாக உலக பந்தத்திலிருந்து ஒருவனை விடுவிக்க முயலுகின்றது. யோகமார்க்கத்தில் ஈச்வரனை ஒப்புக்கொண்டு அவரை அடைய அப்பியாஸங்கள் செய்யப்படுகின்றன. ஸாங்க்ய மார்க்கத்தில் ஈசுவரனைப்பற்றி ஒன்றும் வியக்தமாகக் கூறாது விஷயங்களைப் பரிசீலம் பண்ணுவதாலேயே அறிவு தீட்டப்பட்டு ஓர்வித அப்பியாளம் ஸாதிக்கப்படுகிறது. (இதனாலேயே ஸாங்க்யத்தில் நிரீசுவர ஸாங்கியம் கிளம்ப அதிலிருந்து புத்தமதம் உண்டாயிற்று.) இரண்டும் ஒருவனுக்கு அவசியம். இரண்டையும் அனுஷ்டிப்பவர்கள் குதர்க்கம் செய்து படுகுழியில் விழாது நேர்மையாக இருந்தால் மேலான பரமபதம் பெறுவர். புத்திமான்கள் இரண்டையும் அங்கீகரிப்பார்கள்.

**வினா** 119.- யோகசாஸ்திரத்தின் ஸாரம் என்ன?

**விடை.-** யோகம் என்ற ' பதத்திற்கு சேர்த்தல் என்று பொருள். இந்த மார்க்கத்தில் சிற்சில அப்பியாஸமூலமாக மனதை ஒருவன் ஒவ்வொரு நிலையில் நிறுத்தி அங்கு காணப்படும் பகவானது ரூபத்தோடு ஒன்றாகச் சேர்ப்பதே இந்த மார்க்கத்தின் முக்கிய பாகம். இந்த அப்பியாஸம் இரண்டு விதம். மனம் அடக்குவது, சுவாஸம் அடக்குவது என்பவைகளே. தேஹதாரணத்திற்கு வேண்டிய சாப்பிடல் முதலிய தொழில்கள் செய்யும் காலம் தவிற மற்றைய் காலங்களில் இம்மார்க்கத் தில் பழகுபவன் சுவாஸம் அடக்கி மனத்தை வசப்படுத்த முயல வேண்டும்: இந்த ஸாதகத்திற்கு ஸஹாயமாக இருக்கும் சாப்பாடு முதலியவைகளில் ஓர் நியமம் இருக்க வேண்டும். எந்த விஷயத்திலும் அதிகமாக மூழ்காமலும், அவைகளை முற்றிலும் விட்டுவிடாமலும் யோகி தன் த்யான பிராணாயாமாதிகளைச் செய்து வரவேண்டும். மூச்சை அடக்கி மனதை ஏகாக்கிரப்படுத்தி மூலாதாரம், தொப்புள் ஸ்தானம், ஹிருதயஸ்தானம், கண்டஸ்தானம், புருவமத்யம், பிரஹ்மரந்தரம் (உச்சந்தலை) இவைகளில் முறையே வைத்து அங்கு கடவுளை ஒவ்வொரு தகுந்த ரூபத்தோடு த்யானம் செய்து வர வர மேல்படி ஏரி முடிவில் பிரஹ்மரந்திரத்தில் பரமாத்மாவோடு கலந்து யோகி பரமபதம் பெறுவான். இவ்வாறு விருத்தியாகிக்

கொண்டு வருகையில் விசித்ரஸித்திகள் எல்லாம் அவனுக்கு வரும். அவன் அதைக் கவனித்துத் தன் பகவானை மறந்து கண்டவர் வியக்கும்படி ஸித்திகளைக் காட்டிக் கொண்டிருக்கக்கூடாது. இதுவும், இந்த மார்க்கத்தில் சற்று 'ஒழுங்கு தவறினால் வரும் கெடுதிகளுமே இந்த மார்க்கத்தில் உள்ள அபாயங்கள். இவைகளில் அகப்படாது ஒருவன் நடப்பானாகில் இந்த மார்க்கத்தில் இவன் எளிதில் பரமபதம் பெறுவன்.

**வினா** 120.- ஸாங்க்ய சாஸ்திரத்தின் ஸாரம் என்ன?

**விடை.**- ஸங்க்யை என்ற பதத்திற்குக் கணக்கு என்று பொருள். இந்த மார்க்கத்தில் உலக விஷயங்களை பரிசீலனம் செய்து 24 மூல வஸ்துக்களுக்குள் அடக்கி விடுவதால் இந்த சாஸ்திரத்திற்கு இப்பெயர் வந்தது. மூல வஸ்துக்களா வன, **பஞ்ச** பூதங்கள், **பஞ்ச** பிராணன்கள், **பஞ்ச** ஞானேந்திரியங்கள், **பஞ்ச** கர்மேந்திரியங்கள், **நான்கு** அந்தஃகரணம் (மனம், புத்தி, சித்தம், அகங்காரம்) ஆகிய வைகளே. (**இவைகளின் விவரத்தை பாகவத வினா விடை முதல்பாகம் 2-வது அனுபந்தத்தைப் பார்க்க**) இவைகள் மூலமாக பிரபஞ்சவஸ்துக்கள் எல்லாவற்றை யும் மனதிலேயே பிரித்துவரும் வழக்கத்தால் மனதிற்கு உலகப்பற்று எளிதில் விட்டுப்போக அது தன் நிஜரூபமாகியும் 25-வது மூலப்பொருளாகியும் உள்ள ஆத்மா வாகிச் சேஷித்து மோக்ஷ நிலையை அடைகின்றது. (நிரீசுவர ஸாங்க்பத்தில் 25-வது தத்வம் உண்டென்ற நம்பிக்கையே இல்லை. உலக விஷய தத்வஞானமே மோக்ஷம் சேர்ப்பிக்கும் என்பது அவர்களது கொள்கை.) இதில் கூறப்படும் தத்வவிசாரணை கேவலம் வாசா ஞானமாக முடிவதும், ஏமாந்தால் இதுநிரீசுவர வாதமாக முடிவது மே இந்த மார்க்கத்தில் உள்ள அபாயங்கள். இவைகளில் அகப்படாது இதில் ஒருவன் பழகி முன்னுக்கு வர வேண்டும்.

**வினா** 121.- முற்றும் துறத்தல் என்பதன் ஸ்வரூபம் என்ன?

**விடை.**- இந்த விஷபத்தில் முன் காலத்தில் விதேஹதே சாதிபதி.பான **ஜனகருக்கும்**, **ஸுலபை** என்ற ஸந்யாஸினிக்கும் ஓர் ஸம்வாதம் நடந்திருக்கிறது. ஸுலபை ஸந்யாஸினியாக உலகம் முழுவதும் திரிந்துவருகையில் மிதிலை ராஜர் ஜனகர் மோக்ஷஸாதனத்தை அனுஷ்டித்துத் தேர்ந்தவர் என்று கேள்வியுற்று அவரிடம் சென்றாள். ஜனகர் அவளை உட்காரவைத்து, தேஹம் முதலியவைகளை மறந்து அவளுடன் ஸம்வாதம் செய்யத் தொடங்கினார். அவளும் அவ்வாறே செய்தாள். ஜனகர் தான் **பஞ்சசிகர்** என்றவரிடம் உபதேசம் பெற்ற விதத்தையும், அதை ராஜ்ய மத்தியிலிருந்தபடியே அப்யஸித்து ஸித்திபெற்ற வழியையும் அப்பொழுது தன் மனம் தாமரையிலைத் தண்ணீர்போல ராஜ்யத்தில் இருப்பதையும் எடுத்துக்கூறி அவளுடைய நிலையைப்பற்றி விசாரித்தார். இப்படிக் கூறி வருகையில் தான் ராஜதர்மத்தை விடாது மோக்ஷ ஸாதனத்தில் பழகுபவன். என்றும், அவள் பெண்ணாகவிருந்து தன் தர்மப்படி புருஷனுக்கு அடங்கிஇராது இம்மாதிரி உலகெல்லாம் ஸந்யாஸினியாகத்திரிந்து பிராஹ்மணர் முதலியோரை அவமதிப்பது அழகன்று என்றும் குறிப்பாக எடுத்துறைத்தார். இதைக்கேட்டாள் ஸுலபை; மனங்கோணாது மொழியலானாள். நான் உயர் குடிப்பிறந்தவள். **பிரதானர்**

என்ற ராஜரிஷிவம்சம். எனக்குத் தகுந்த புருஷன் அகப்படாததாலும், எனக்கு மோக்ஷ தர்மஞானம் ஏற்பட்டிருந்தபடியாலும், என் நிலையை ஒரு பொருட்டாக எண்ணாது: பிரஹ்மசாரினியாக உலாவலானேன். உண்மையாகப் பார்க்கில் உள்ளத்துறவே மிகச்சிறந்தது. அது இருந்தால் தான் முற்றும் துறந்ததற்கு அடையாளம். இது எந்த நிலையில் இருப்பினும் மனிதர்களுக்கு இருக்கலாம். நீர் ராஜாவாகப் பிறந்து ராஜ்யத்திற்கு அதிபதியானீர். நீர் அதை விடாது உள்ளத்துறவு ஸம்பாதித்தீர். நான் தகுந்த நாயகன் அகப்படாது இருந்தபடியால் அப்படி இருந்து கொண்டே உள்ளத்துறவு ஸம்பாதித்தேன். இவ்வளவு தான்; நம்மிருவர் துறவுள் ஓர் ஏற்றத்தாழ்வு ஒன்றையும் யான் காணவில்லை. ஆனாலும் உமது வ்யவஹாராதிகளை நோக்கின் அவைகள் சாந்தத்திற்கு விரோதமாதலால் உமது மனோதிடம் அடிக்கடி சற்றுக் கலைந்து நிலைக்கும் போலத் தோற்றுகிறது. எனக்கு ஏற்பட்டிருக்கும் வெளித் துறவோடு கலந்த உள்ளத்துறவால் என் மனம் ஸதா கலங்காதிருக்கும். ஆகவே துறவு விஷயத்தில் சற்றும் வித்யாஸமில்லாத நமக்கு உலக வாழ்க்கை ஸம்பர்தப்பட்டவரையில் சற்று ஸுகபேதம் உண்டு. இது எப்படியாயினும் முற்றும் துறந்ததன் லக்ஷணமாகிய உள்ளத்துறவு இருத்தலால் நாம் இருவரும் வீண் விவாதம் செய்யவேண்டியதில்லை' என்றாள் ஸுலபை ஜனகர் ஒன்றும் பதில் கூற முடியாது விழித்தார்.

**வினா** 122.- இதன் பின்பு பீஷ்மர் எந்த விஷயத்தை எடுத்துக் கூறினார்?

**விடை.**- முற்கூறியபடி முற்றும் துறத்தலின் லக்ஷணத்தை எடுத்துக்கூறி அதன் திருஷ்டாந்தமாக வியாஸர் பிள்ளையாகியும் பிறவி ஞானியாயும் இருந்த சுகப்பிரஹ்மத்தின் சரித்திரத்தை எடுத்துக் கூறினார்.

**வினா** 123.- இந்த சுகப்பிரஹ்மம் எவ்வாறு பிறந்தார்?

**விடை.**- முன்னொருகாலத்தில், மஹாதேவர் உல்லாஸமாகக் களித்துவந்த மேருமலைக் கருகில் வ்யாஸர் தவம் செய்தார். பஞ்சபூதங்களின் சக்திவாய்ந்த சிறந்த பிள்ளை ஒருவன் தமக்குக்கிடைக்கவேண்டும் என்பதே அவர் அந்தரங்க நோக்கமாக இருந்தது. இதை ஓர் ஸ்தோத்திர மூலமாக பகவானுக்குத் தெரிவிக்க, மஹாதேவர் பிரஸந்நமாகி அவர் தபஸுக்கு மெச்சி, 'உன் இஷ்டப்படியே உனக்கு ஓர் பிள்ளை உண்டாகும். அது பிறவிஞானியாகவே இருக்கும்' என்று அனுக்ரஹித்தார். இதன்படியே ஓர் அப்ஸரஸ்திரீ மூலமாக வ்யாஸரிடம் **சுகர்** உண்டானார்.

**வினா** 124.- சுகப்பிரஹ்மம் சிறுபிராயம் எவ்வாறு கழிந்தது?

**விடை.**- சுகர் பிறந்ததும் தேவதைகள் எல்லோரும் மகிழ்ந்து அவருக்குத் தகுந்த வஸ்துக்களைக்கொடுத்தனர். வெகு சிறு பிராயத்திலேயே சுகர் ஸகல சாஸ்திரங்களிலும் தேர்ச்சி அடைந்தார். இவரிடம் எல்லோருக்கும் ஓர்வித மரியாதை உண்டாயிற்று. இவர் மனம் மோக்ஷ மார்க்கத்தையே நேரிடப்பற்றி நின்றது. தகப்பனாரை இவர் குருவாக அடுத்து அவர் உத்தரவுப்படி மோக்ஷ சாஸ்திரத்தில் அப்யாஸத்தால்மிகத்தேர்ச்சி அடைந்தார். இவரை சிறப்படையும்படி

செய்வதற்காக வ்யாஸர் ஜனகரிடம் போகும் படி இவருக்கு உத்தரவு செய்தார். போகும் பொழுது சிஷ்யன்போல அடக்க ஒடுக்கமாகப் போக வேண்டும் என்று எச்சரிக்கையும் செய்தார்.

**வினா** 125.- சுகர் ஜனகரிடம் போகும் பொழுது இவருக்கு என்னென்ன ஸம்பவித்தன? இவர் மனோ நிலை எவ்வாறிருந்தது?

**விடை.**- மிதிலா நகரம் சென்று அரண்மனை வாயிலில் போய் சுகர் நின்றார். வாயில் காப்போன் அவரை கடுஞ்சொற்கள் சொல்லி நிறுத்திவிட்டான். இவர் கோபங்கொள்ளாது அங்கேயே நின்றுவிட்டார். இவர் வழியில் மிகுந்த கஷ்டங்க ளுக்கு ஆளாகி இருந்தும் வாயில் காப்பவரிடம் இவருக்குக் கோபம் வரவில்லை. மோக்ஷ ஸாதனங்களையே அவர் மனம் நாடியது. இதற்குள் வாயில் காப்பவருள் வேறொருவன் சுகப்பிரஹ்மத்தின் தேஜஸைக்கண்டு மனம் இறங்கி, அவரை முதல் கட்டுள் கொண்டு போய் விட்டான். இங்கும் இவர் மனம் அசையவில்லை. இங்கு. சில மந்திரிகள் வந்து இவரை இரண்டாம் கட்டுள் கொண்டு போய் விட்டார்கள். இங்கு ஸகலவித உலக ஸுகங்களும் இருந்தன. இங்கு அழகிய மாதர் அனேகர் உபசாரங்கள் செய்து வந்தனர். இவைகளில் சுகர் மனம் பற்றவே இல்லை. மறுநாள் அங்கு ஜனகர் வந்து சேர்ந்து சுகருக்கு உபசாராதிகள் செய்தார். அப்பொழுதும் அவர் மனம் கோணவில்லை. 'உமது நோக்கம்யாது? என்று ஜனகர் கேட்டார்.

**வினா** 126.- சுகர் தர்ம் வந்த காரணத்தைத் தெரிவித்ததும் இருவருக்கும் என்ன ஸம்வாதம் நடந்தது?

**விடை.**- "மோக்ஷஸாதனம் யாது?" என்று கேட்ட சுகரை நோக்கி 'விதிப்படி ஆசிரம தர்மங்களை ஒழுங்காக அனுஷ்டிப்பதே சிறந்த வழி' என்றார் ஜனகர். அதற்கு சுகர் 'ஆதியிலேயே ஞானம் வந்து தேர்ந்தவர்களுக்கும் இந்த வழிதானோ?' என்று கேட்க, அதற்கு ஜனகர் 'அவர்களுக்கும் இந்த வழியே மேல். உமது தகப்பனார் தான் எனக்கு குரு அவர் அனுக்கிரஹத்தால் நான் ஜீவன் முக்தனானேன். ஆதலால் உமது மனோ நிலை எனக்கு நன்றாய்த் தெரிகிறது. உமது விஷயத்தில் இந்த ஆசிரம ஒழுங்கு வேண்டியதே இல்லை. நீர் நேரிட ஸந்யாஸ தர்மத்தையே அனுஷ்டிக்கலாம்' என்றார்.

**வினா** 127.- இவ்வாறு ஜனகரிடம் உபதேசம் பெற்றதும் சுகப்பிரஹ்மம் என்ன செய்தார்? மேல் என்ன நடந்தது?

**விடை.**- உபதேசம் பெற்றதும் சுகர் ஹிமாலயத்தை நோக்கிப் புறப்பட்டு விட்டார். அங்கு போய், அநேகர் தபஸுகள் லித்த சுத்த இடத்தில் தமது தகப்பனாரான வ்யாஸர் தம் சிஷ்யர்களாகிய, ஸுமந்தர், வைசம்பாயனர், ஜைமினி , பைலர் ஆகிய இவர்களுக்கு வேதம் கற்பித்துக் கொண்டிருப்பதைக் கண்டு அவரிடம் அணுகினார். தகப்பனாரிடம் நடந்த விஷயங்களைச் சொன்னார். பின்னர் வ்யாஸர் தமது சிஷ்யர் நால்வர், தமது குமாரர் சுகர் ஆகிய இவர்களிடம் வேதங்களை ஒப்புவித்து அவைகளை உபதேசிக்கும் முறைமைகளை எடுத்துக்

கூறினார். சிஷ்யர்கள் வேதத்தை விருத்தி செய்யக் குருவிடமிருந்து விடைபெற்றுப் போய்விட்டனர். வ்யாஸர் ஆசிரமத்தில் வேதகோஷம் நின்றுபோக, நாரதர்வந்து அதை வ்யாஸர் சுகர் இருவரும் விடாது செய்து வரும்படி தூண்டினார்.

**வினா** 128.- இப்படி இருக்கையில் யார் சுகப்பிரஹ்மத்திற்கு உபதேசம் செய்தது?

**விடை.**- ஒருநாள் வ்யாஸர் ஸ்நாதத்திற்குப் போயிருக்கையில் திரிலோக ஸஞ்சாரியான நாரதர், வ்யாஸர் ஆசிரமத்திற்கு வர, அவருக்கு சுகர் விதிப்படி வந்தனை வழிபாடுகள் செய்தார். அப்பொழுது நாரதர் மகிழ்ந்து சுகருக்கு ஞானோப தேசத்தை விஸ்தாரமாகச் செய்தார்.

**வினா** 129.- இதன் பின்பு சுகப்பிரஹ்மம் என்ன செய்தார்?

**விடை.**- ஜனகர் நாரதர் இவர்களது உபதேசத்தால் நிஷ்டை செய்து பரமபதம் பெற எண்ணி, தம் தகப்பனாரிடம் போய் அவரை வலம் வந்து வனம் போகப் போகிறதாகக் கூறினார். தம்மைத் திருப்தி செய்து ஒருநாள் அங்கேயே இருந்து போகும்படி வ்பாஸர் சுகரை வேண்ட அதை அவர் கவனியாது கைலாஸமலைச் சிகரத்தை நோக்கிச் சென்றார். அங்கு சென்று கிழக்குநோக்கி உட்கார்ந்து கொண்டு நிஷ்டை பழகத் தொடங்கினர். அங்கிருந்து நாரதரிடம் அனுமதி பெற்று சுகர் பரமபதம் நோக்கிப் புறப்பட்டார்.

**வினா** 130.- சுகப்பிரஹ்மம் இவ்வாறு விருத்தியாகிப் போகையில் என்ன விசித்திரங்கள் அங்கு நடந்தன?

**விடை.**- சுகர்மனம் மேன்மை அடைய அடைய அவர்பிரபஞ்ச வஸ்துக்கள் எல்லாவற்றிலும் ஊடுருவிப் பரவினார். இவ்வாறு புரிந்துவரும் சுகரைக்கண்டு அப்ஸரஸ்திரீகள் எல்லோரும் இவர் போகும் பரமபத மார்க்கத்தைக்கண்டு வியந்து நின்றுவிட்டனர். தேவதைகள் எல்லோரும் கை கூப்பிக்கொண்டு நின்றுவிட்டனர். வழியில் எவ்வளவோ பெரிய தடைகள் ஏற்பட்டும் அவைகளை எல்லாம் கவனியாது சுகப்பிரஹ்மம் பிரபஞ்சம் முழுவதும் பரவத் தொடங்கினர்.

**வினா** 131.- சுகர் இவ்வாறு விருத்தியானதும் வ்யாஸர் என்ன செய்தார்?

**விடை.**- சுகர் போனவழியே வ்யாஸர் சென்று அவர் இருந்த இடம் வர, அங்கு சுகரைக் காணவில்லை. அங்கிருந்த ரிஷிகள் எல்லோரும் சுகர் அடைந்த பரமபதத்தை வர்ணித்தனர். அப்பொழுது அன்புமேலிட்டதால் வ்யாஸர் சுகரைக்கூவி அழைத்தார். அண்டபிண்ட சராசரங்கள் எல்லாம் ஏன் என்று பதில் கொடுக்க, தமது பிள்ளை அடைந்த பரமபதத்தின் சிறப்பு விளங்கிற்று. வ்யாஸர் துக்கத்தோடு அங்கேயே நின்றுவிட்டார். அருகாமையில் ஜலக்ரீடை செய்து கொண்டிருந்த பெண்கள், முன் சுகர் போகும் பொழுது வெட்கப்படாமலிருந்தும் கிழவரான வ்யாஸரைக் கண்டதும் வெட்கித் தமது வஸ்திரங்களை உடுத்திக்கொள்ள ஓடினர்.

இதைக் கண்டதும் தமது பிள்ளையின் சுத்தம் தமக்கு இல்லை என்று அவருக்கே விளங்கக் கொஞ்சம் துக்கம் மாறியது, அப்பொழுது பரமசிவன் பிரத்யக்ஷமாகி வ்யாஸருக்கு தேறுதல் சொல்லி சுகப்பிரஹ்மத்தின் உருவம் மாத்திரம் அவரோடேயே இருக்கும்படி அனுக்கிரஹித்தார்.

**வினா** 132.- மோக்ஷாபேக்ஷை உடையவர்கள் யாரை எவ்வாறு ஆராதிக்க வேண்டும்?

**விடை.**- பதரிகாசிரமத்தில் நர நாராயணாள் ஒருநாள் நித்யகர்மானுஷ்டான த்தை முடித்துக்கொண்டிருக்கையில் நாரதர் வந்து சேர்ந்தார். 'எல்லாவற்றிற்கும் ஆதார பூதமாகத் தாங்கள் இருக்க தாங்கள் யாரை ஆராதிக்கிறீர்கள்?' என்று கேட்டார் நாரதர். அதற்கு அவர்கள், 'முக்குணங்கள், இந்திரியங்கள் முதலிய விஷயங்கள் எல்லாவற்றிற்கும் அப்பாற்பட்டது ஆத்மா. இது தான் ஸூக்ஷ்மமாயும் எல்லாவற்றிற்கும் ஆதாரமாயும் இருக்கிறது. இதனால் தான் எல்லாம் உண்டாகின்றன. இந்த ஆத்ம ஞானத்தாலேயே வெளியாகும் வேதங்கள் எல்லாம் இதைத்தான் வர்ணிக்க முயல்கின்றன. இதை சிரத்தையுடன் அடைய முயல்வதே ஒருவன் அவசியம் செய்ய வேண்டிய ஆராதனை. அதைத்தான் நாங்களும் அனுஷ்டிப்பது' என்றார்கள். ஆகவே மோக்ஷாபேக்ஷை யுடையவர்கள் ஆத்மாவை ஞான நிஷ்டையால் ஆராதிக்கவேண்டும்.

**வினா** 133.- இவ்வாறு நர நாராயணர்கள் கூறுயதும் நாரதர் என்ன செய்தார்?

**விடை.**- நர நாராயணர்களிடமிருந்து விடை பெற்றுக்கொண்டு மேருமலைச் சிகரம்போய் வடமேற்கு மூலையை நோக்கினார். அங்கு திருப்பாற்கடலில் சுவேதத்வீபம் அவர் கண்ணுக்குப் புலப்பட்டது. அங்குள்ளவர்கள் எல்லோரும் பரம்பொருள் பக்தர்கள். அவர்களுக்கு இந்திரியாதிகள் ஸம்பந்தமே இல்லை. எல்லாவிஷயங்களுக்கும் அப்பார்பட்டவர்கள். அவர்களிடமே பகவான் அடங்கி விட்டார். இதைப்பார்த்து ஆனந்த பரவசரானார். பின்னர் அவர் அங்கு சென்றார். அங்குள்ள வெள்ளையான வாஸிகளைக் கண்டார். அவர்களால் ஆராதிக்கப்பெற்று அவர்களுக்கு வந்தனை வழிபாடுகள் செய்துவிட்டு திவ்ய மந்த்ரங்களால் நாராயண ரைத்துதித்தார். அவர் பிரத்யக்ஷமாகி சுவேதத்வீபவாஸிகளின் மோக்ஷ நிலையை யும், தாம் லோகஹிதார்த்தம் எடுக்கும் அவதாரங்களையும் கூறி மறைந்தார். உடனே நாரதர் பதரிகாசிரமம் சென்று நாராயணர் உபதேசத்தை வெளியிட்டார்.

**வினா** 134.- நாராயண பக்தியால் அடையக்கூடிய சிறப்பு எத்தன்மையை உடையது?

**விடை.**- முன்காலத்தில் நாராயண பக்தனான **உபரிசரன்** என்ற ஓர் அரசன் இருந்தான். இவன் பிராணி ஹிம்ஸை இல்லா தயாகம் ஒன்று செய்தான். அதில் தேவதைகள் எல்லோரும் நேரேவந்து ஹவிர் பாகம் வாங்கினர். நாராயணர் மாத்திரம் ஒருவர் கண்ணுக்கும் புலப்படாது, உபரிசரன் கண்ணுக்கு மாத்திரம் தோன்றி ஹவிர் பாகம் வாங்கினார். இதை உணர்ந்த பிரஹஸ்பதிக்குக் கோபம்

வந்தது. அப்பொழுது அங்கிருந்த ரிஷிகள் தாம் தபஸால் சுவேதத்வீபத்திற்குப் போன விஷயத்தையும் அங்கு திவ்யதேஜோரூபமாக பரம்பொருளைக் கண்டதையும், தாம் இந்திரியங்களை இழந்த விதத்தையும், நாராயணர் பிரத்யக்ஷமாகி சுவேதத்வீபவாஸிகளின் பக்தி உள்ளவர்களே தம்மைக் காண்பார் என்று கூறியதையும் எடுத்துக் கூறி நாராயணரின் பெருமையைக் காட்டித்தேற்றினர். பின்னர் யாகம் முடிவு பெற்றது. உபரிசரனுக்கு ஓர் ஆபத்து வர அதிலிருந்து பகவான் அருளால் தப்புவித்து அவன் பரமபதம் பெற்றான்.*

* வினா 134-க்கும் 135-க்கும் இடையில் வைசம்பாயன ஜனமேஜய ஸம்வாதமாக ஸ்ரீமந்நாராயணரது சிறப்பு, ஆராதனாக்கிரமம் நாமங்கள், அவைகளின் பொருள்கள், முதலியவை கூறப்பட்டுள்ளன. அவை பீஷ்ம யுதிஷ்டிர ஸம்வாதமில்லாததால் இங்கு வினாவிடை ரூபமாகக் கூறவில்லை.

**வினா 135.-** உபரிசரனுக்கு என்ன ஆபத்து வந்தது? பின்னர் அவன் எப்படிக் கடைத்தேறினான்?

**விடை.-** ஒருகாலத்தில் தேவதைகள் சில ரிஷிகளை நோக்கி, "வேதம், அஜத்தின் மூலமாக யாகம் நடத்தவேண்டும் என்று விதித்திருக்கிறது. அஜம் என்பதற்கு ஆடு என்று பொருள். ஆதலால் ஆடல்லது வேறு எதன் மூலமாகவும் யாகத்தைச் செய்யலாகாது' என்றார். அதற்கு ரிஷிகள் 'வேதத்தில் விரைகள் மூலமாக யாகம் செய்ய வேண்டும் என்று கூறப்பட்டிருக்கிறது. அவ்விரைகளுக்கே அஜம் என்று பெயர். ஆதலால் ஆட்டைக்கொன்றுயாகம் செய்வது முழுத்தவறு. பெரியவர்கள் கொலையைப் பாபம் என்பார்கள். ஆதலால் பிராணிவதம் உள்ள யாகத்தை நாங்கள் எவ்வாறு செய்வது?' என்று ஆக்ஷேபித்தனர். இப்படி தேவர்களுக்கும் ரிஷிகளுக்கும் தர்க்கம் நடந்து கொண்டு வருகையில் உபரிசரன் அவ்வழியே வந்தான். அவனை ரிஷிகள் இந்த விஷயத்தில் நியாயம் சொல்லும்படி கேட்டனர். உபரிசரன் அஹிம்ஸா யாகம் செய்திருந்த போதிலும், தேவதைகளிடம் இருந்த பக்ஷபாதத்தால் அவர்கள் கூறுவதே நியாயம் என்றான். இதை அறிந்த ரிஷிகள், நீ பூமியில் மூழ்கக்கடவாய், என்று சபித்தனர். அப்படியே உபரிசரன் பூமியில் விழுந்து ஓர் குஹையுள் போய் மாட்டிக்கொண்டான். அப்பொழுது தேவதைகள் அவனுக்கு அவன் நாராயணபக்தியை ஞாபகப்படுத்த, அவன் பரம்பொருளைத் துதித்தான். பகவான் உத்தரவுப்படி கருடன் வந்து உபரிசரனை தன் மூக்கால் தூக்கி பரமபதம் கொண்டு சேர்த்தார். ஆதலால் நாராயணபக்தி மிகுந்த சுவேதத்வீபவாஸிகளின் நிலைக்கும் பரமபத நிலைக்கும் பேதேமே இல்லை.

**வினா 136.-** எல்லாவித தர்மங்களிலும் மோக்ஷ ஸாதனமான சிறந்த தர்ம அனுஷ்டானம் எது?

**விடை.-** ஆசிரம தர்மானுஷ்டானங்கள் எல்லாம் கிரஹஸ்தன் மேல் தாங்கி நிற்பது. அவன் ஸரியாக இருந்தால் தான் எல்லாம் ஸரியாக இருக்கும். ஆதலால் ஒருவர் மேலும் பொருக்காது, மிகுந்த சாந்தமானதாயும், மனதை அதிக வருத்தாத

தாயும் உள்ள விருத்தி ஒன்று உண்டு. அதற்கே **உஞ்சவிருத்தி** என்று பெயர். இது கந்தமூலம், உதிரும் சருகு பழம் முதலியவைகள் சாப்பிடுவது, அல்லது பிறர் எடுக்காது விட்டுப்போன தான்யாதிகளை களத்திலிருந்தபடி பொருக்கிவந்து சமயல் செய்து, சாப்பிடுவதே. ஒருவரையும் கஷ்டப்படுத்தாது பிக்ஷைக்குப் புறப்பட்டு இஷ்டமிருந்து போடுபவர்களிடம் பெற்று ஜீவனம் செய்வதும் இந்தவிருத்தி என்று கூறப்படும். இதன் முக்கிய லக்ஷணம் யாது எனில், அன்றன்று ஆஹாரத்திற்கு வேண்டியது கிடைத்து விட்டால் பிரயத்னத்தை அதோடு நிறுத்திவிடவேண்டும் என்பதே. கிடைக்கும் அரிசியில் நாளைக்கு என்று மிகுதி வைக்கவே கூடாது. இந்த விருத்தியிலிருக்கும் பொழுதும் மனம் பகவானைப்பற்றியே இருக்க ஸாவகாச முண்டு. ஆகவே இந்த விருத்தி நிஷ்டைக்கு விரோதமே அல்ல. ஆதலால்தான் ஞானிக்கு உஞ்சவிருத்தியை விட மிஞ்சினவிருத்தி ஒன்றுமில்லை. இந்த விஷயமாக ஓர் பிராஹ்மணனுக்கும் ஓர் நாகராஜனுக்கும் ஸம்வாதம் நடந்தது. அதில் நாகன் தான் ஸூர்யனிடம் போயிருக்கையில் அங்கு உஞ்சவிருத்தியை அனுஸரித்து ஸத்காலக்ஷேபம் செய்தவனாகி ஓர் பிராஹ்மணன் வந்து ஸூர்யனோடு கலந்தான் என்றும், அப்பொழுது ஸூர்யன் அந்த பிராஹ்மணன் பரமபதம் பெறுவான் என்று கூறினான் என்றும் சொல்ல, நாகனிடம் விடைபெற்று பிராஹ்மணன் ச்யவன ரிஷியிடம் உஞ்சவிருத்தி உபதேசம் பெற்றுப் பிழைத்தான்.

---

# 13. அனுசாஸன பர்வம்

*__ஊ__ரனந்தம் பெற்ற பேரனந் தஞ்சுற்று*
*முறவனந் தம்வினையினா*
*னுடலனந் தஞ்செயும் வினையனந் தங்கருத்*
*தோவனந் தம்பெற் றபேர்*
*சீரனந் தஞ்சொர்க்க நரகமு மனந்தநற்*

*றெய்வமு மனந்த போதந்*
*திகழ்கின்ற சமயமு மனந்தமத ஞன்ஞான*
*சிற்சத்தி யாலு ணர்ந்து*
*காரனந் தங்கோடி வருஷித்த தெனவன்பர்*
*கண்ணும் விண் ணுந்தேக் கவே*
*கருதரிய வானந்த மழை பொழியு முகிலைநங்*
*கடவுளைத் துரிய வடிவைப்*
*பேரனந் தம் பேசி மறையனந் தஞ்சொலும்*
*பெரியமௌனத்தின் வைப்பைப்*
*பேசரு மனந்தபத ஞானவா னந்தமாம்*
*பெரிய பொருளைப்பணி குவாம்.*

**வினா** 1.- இப்பர்வத்திற்கு இப்பெயர் வருவானேன்?

**விடை.-** அனுசாஸனம் என்ற பதத்திற்கு கோட்பாடு என்று பொருள். தர்ம விஷயங்களின் கோட்பாடுகள் இப்பர்வத்தில் விஸ்தரிக்கப்பட்டிருப்பதால் இப்பர்வத் திற்கு இப்பெயர் வந்தது.

**வினா** 2.- சாந்தி பர்வம் கேட்டதும் தர்மபுத்திரர் மனோநிலை எவ்வாறிருந் தது?

**விடை.-** சாந்திபர்வத்தில், முக்கியமாக மோக்ஷதர்மம் கேட்டதும் தர்மபுத்தி ரருக்கு மோக்ஷ ஸாதனங்களில் பழகி வந்தால் நலமாக இருக்கும் என்று பட்டது. இதோடும்கூட இவ்வளவு தர்மங்களையும் எடுத்து உபதேசித்த பீஷ்மர் இருக்கும் கஷ்டஸ்திதி தர்மபுத்திரர் மனதைப் புண்படுத்தியது. பீஷ்மர் போன்ற நல்லவர்களும் உறவினர்களுமான அநேகரை முன்பின் யோசிக்காது கொலை செய் தபாபிகள் நாம் என்ற எண்ணம் அவர் மனதில் கிளம்பி மிக வருத்தியது. உடனே பீஷ்மரை நோக்கி, 'நாங்கள் உங்களைப் போன்ற மஹாத்மாக்களைக் கொன்ற பாபிகள். பாபத்தின் பலனை துக்கரூபமாக நாங்கள் இப்பொழுது அனுபவிக்கிறோம். இனிமேலாவது பரத்தில் இந்தப்பாபம் பாதிக்காதிருக்கும்படி எங்களைப் புனிதர்களாக்க வேண்டும்' என்று மாஹாதுக்கத்துடன் கேட்டுக்கொண்டார்.

**வினா** 3.- பீஷ்மர் தர்மபுத்திரரை இந்த ஸமயத்தில் எவ்வாறு தேற்றினார்?

**விடை.-** 'ஓர்காட்டில் **கௌதமி** என்ற ஒரு கிழவி இருந்தாள். அவள் மஹாதர் மாத்மா. ஒருநாள் அவள் பிள்ளை பாம்பு கடித்திறந்திருப்பதை அவள் கண்டாள். அதே ஸமயத்தில் **அர்ச்சுனகன்** என்ற ஓர்வேடன் குழந்தையைக் கடித்த பாம்பைக் கயிற்றால் கட்டி எடுத்துக்கொண்டு கௌதமியிடம் வந்து, 'இந்த பாபியான பாம்பை நான் கொல்லக் காத்திருக்கிறேன். கஷ்டப்பட்டவள் நீயாகையால் இதை எவ்வாறு கொல்வது என்பதைச் சொல்லு. நானும் அவ்வாறு செய்கிறேன்' என்றான். அதற்கு கௌதமி 'பாம்பை விட்டு விடு. அதென்ன செய்யும் பாபம்! இந்தப் பாம்பைக் கொல்லுவதால் என் பிள்ளை பிழைப்பானா? இதை உயிரோடு விடுவதால் உனக்கு என்னகஷ்டம்? உயிர்ப் பிராணியைக் கொல்லலாகாது' என்றாள். அப்பொழுது

வேடன், 'நீ சொல்லும் வேதாந்தம் உனக்குத் தான் ஸரி. உலகில் துஷ்டஜந்துக்களை அவசியம் கொல்ல வேண்டியது. இல்லாவிடில் அது அநேகரை இவ்வாறே கஷ்டப்படுத்தும்?' என்றான். என் குழந்தை விதிமுடிந்து இறந்தான். பாம்பு வெறும் காரணமாகமாத்திரம் நின்றது. அதற்காக நாம் அதை வேண்டு மென்று கொல்லக் கூடாது பாம்பை விடு' என்றாள் கௌதமி. 'துஷ்டரைக் கொல்வது மிகுந்த மேன்மையை உண்டாக்கும்' என்று எவ்வளவு வேடன் மன்றாடியும் கொளதமி மனம் மாறவில்லை. அப்பொழுது பாம்பு, நான் என்ன செய்வேன். மிருத்யுவால் தூண்டப்பட்டு இதைச் செய்தேன். எனக்கும் இந்தக்குழந்தைக்கும் என்னவிரோதம்?' என்றது. வேடனுக்கு இந்தச்சொல்லைக் கேட்டதும் மிகுந்த கோபம் வந்து விட்டது. பாம்பை வதை செய்யத் தயாராயினன். அப்பொழுது மிருத்யூ ஓடிவந்து, 'காலத்தால் தூண்டப்பட்டு நான் உன்னைத் தூண்டினேன். இந்தக் குழந்தை இறந்தபாபம் என்னை எப்படிச்சேரும்? பாபம் காலனதே' என்றது. உடனே காலன் வந்து, நானும் இந்த மரணத்திற்குக் காரணமல்ல. என்னை இவ்வாறு செய்யத் தூண்டியது, இந்த குழத்தையின் ஜன்மாந்தரக் கர்மமே. இந்தக் கர்மம்தான் ஒருவனுக்கு ஸுகத்தையும் துக்கத்தையும் கொடுப்பது. பாம்பு, மிருத்யூ, நான் எல்லோரும் இந்த மரணத்திற்கு உண்மையான காரணங்கள் அல்லர்." என்று கூற, மிருத்யூவும், காலனும் மறைந்தனர். இவைகளைக்கேட்ட கௌதமி, 'குழந்தை இறந்ததற்குக் குழந்தையின் கர்யமே காரணம். நானும் குழந்தையை இழக்கத் தகுந்த கர்மம் செய்திருப்பேன். ஆதலால் பாம்பை விட்டுவிடு' என்றாள். வேடனும் தேறுதல் அடைந்து பாம்பை விட்டு விட்டான். 'ஆதலால் கௌரவர்களும் பெரியோர்களும் இறந்ததற்கு அவர்கள் கர்மங்களே காரணங்கள். தர்மபுத்திரா! நீர் எப்படிக் காரணமாவீர்? பழி வேண்டுமா னால் உம்மேல் வந்து விட்டது. இந்த ரஹஸ்யத்தை உணர்ந்து துக்கம் தீர்ந்து ஸுகமடையும்' என்று பீஷ்மர் தேற்றினார். பின்னர் தருமபுத்திரர் தர்மங்கனைப் பற்றிக் கேட்க பீஷ்மர் ஒழுங்காக பதில் கூறிவந்தார்.

**வினா** 4.- கிருஹஸ்தன் மிருத்யூவைத்தாண்டும் வழி யாது?

**விடை.**- அக்னியின் குமாரனான **ஸுதர்சனர்** என்பவர் நிருகரது பாட்டனார் பெண்ணான **ஓகவதியை ம**ணந்து நெறி வழுவாது இல்லறம் நடத்தி வந்தார். இவர் இல்லற தர்மப்படி தமதுஸொத்து, பெண்சாதி முதலிய எல்லாவற்றையும் வரும் அதிதிக்கு வந்தனை வழிபாடுகள் செய்ய ஸஹாய வஸ்துக்கள் என்று எண்ணி அதிதிஸத்காரம் செய்து வந்தார். இப்படி இருக்கையில் ஸுதர்சனர் ஒரு நாள் ஸமித்துக் கொண்டுவர காட்டிற்குப் போயிருந்த ஸமயம் பார்த்து ஓர் பிராஹ்மணர் இவர் வீடுவர, அவருக்கு ஒகவதி வேண்டுமாறு வந்தனை வழிபாடுகள் செய்தாள். அவர் ஓகவதியின் கற்பை அழிக்க யத்தனித்தார். இந்த ஸமயத்தில் ஸுதர்சனர் வெளியே வந்து தன் பெண் சாதியைக்கூவி அழைக்க உள்ளிருந்த பிராஹ்மணர் தான் செய்யப் பிரயத்னம் பண்ணும் துஷ்கிருத்பத்தை வாய்விட்டுச் சொன்னார். இந்த ஸமயத்தில் கூட ஸுதர்சனருக்கு மனம் கோணவில்லை. இதுவும் நடக்க வேண்டியிருந்தால் நடந்தேறட்டும் என்று எண்ணி மனம் ஆறியிருந்தார். இவர் வரும் பொழுதே இவர் பின்னே மிருத்யூ தன் தண்டத்தை உயர்த்திக்கொண்டு வந்துகொண்டிருந்தான். "இவர்மனம் கலங்கவேண்டியது தான், உலக விஷயப்பற்று இவருக்கு உண்டென்று ஏற்படும். உடனே இவரை இறையாக்கிவிடலாம்' என்பது

அவன் எண்ணம். இந்த ஆபத்ஸமயத்திலும் ரிஷி மனங்கலையாதிருக்க, உடனே பின் வந்த மருத்யூவும், உள்ளேவந்த ப்ராஹ்மணனும், தன்ஸொந்த உருவமாகிய தர்மதேவதை உருவத்துடன், ஸுதர்சனர் முன்வந்து அவர் மனோதிடத்திற்கு மெச்சி அவர் மரணத்தை ஜயித்துவிட்டதாக ஆசர்வதித்தனர். ஆகவே க்ருஹஸ்தன் இல்லற தர்மம் தவறாது நடந்து கொண்டு எல்லாவிஷயத்திலும் உள்ளத் துறவுடையவனாக இருந்தால் அவன் எளிதில் மரணத்தை ஜயித்து விடலாம்.

**வினா** 5.- மற்றைய ஜாதிகளால் ப்ராஹ்மண்யம் அடையமுடியுமா?

**விடை.**- மற்றையஜாதியார்களால் ப்ராஹ்மண்யம் அடைய முடியவே முடியாது. சிற்சிலர்கள் பராஹ்மண்யம் ஸம்பாதித்திருக்கலாம். அவர்கள் விஷயம் ஓர் ஒழுங்காக மாட்டாது. அவர்கள் ஸம்பந்தமாக சில சிறந்த அற்புத விஷயங்கள் இருப்பதால் அவர்கள் சிறந்த மாறுபாடுகளே ஒழிய வேறல்ல. விச்வாமித்ரர் விஷயத்தில் அவர் பிறப்புக்குக் காரணமான **சரு பிராஹ்மணக்** குழந்தையை உண்டாக்கக் கூடிய சக்தியுடையதாக இருந்தது. (**ஸ்ரீமத் பாகவதவினா விடை 9-வது ஸகந்தம் பார்க்க**.) பிருகு வாக்கின் வலிமையால் வீத ஹவ்யர் என்ற ராஜன் ப்ராஹ்மணரானார். **மதங்கர்** என்ற ரிஷி பிறவிச்சண்டாளராக இருந்ததால் அவரால் ப்ராஹ்மண்பம் ஸம்பாதிக்க முடியவில்லை.

**வினா** 6.- வீதஹவ்யர் ப்ராஹ்மண்யம் ஸம்பாதித்த விதம் யாது?

**விடை.**- வீதஹவ்யர் தமது பிள்ளைகளோடு காசிதேசத்தை நோக்கிப் படை எடுத்துச் சென்று முதலில் அந்தத் தேசத்தரசன் ஸுதேவனைத் தோற்கடித்து அவன் உறவினர்களைக் கொன்றனர். பின்னர் தப்புவித்த பிள்ளையாகிய **திவோ தாஸ ராஜன்** காசிக்கு அரசன் ஆனான். பின்புவீதஹவ்யர் பிள்ளைகள் மறுபடியும் வந்து திவோதாஸரைத் தோற்கடித்து அவர் பிள்ளைகளைக் கொன்று மிகவும் கஷ்டப் படுத்தினார்கள். அப்பொழுது திவோதாஸன் காட்டிற்கு ஓடிப்போய் பரத்வாஜரிடம் சரணம் புகுந்து தன் கஷ்டத்தைச் சொல்லித் துக்கித்தான். அவர் ஓர் யாகம் செய்வித்து வீதஹவ்யரையும் அவர் பிள்ளைகளையும் தண்டிக்கத்தகுந்த பிள்ளை உண்டாகும்படி செய்தார். திவோதாஸருக்குப் **பிரதர்தனன்** என்ற பிள்ளை பிறந்து தகுந்த வயதானதும் வீதஹவ்யர் ராஜ்யத்தை நோக்கிப் படை எடுத்துச் சென்று அவர் பிள்ளைகளைக் கொன்றான் அப்பொழுது வீதஹவ்யர் பயந்து பிருகுரிஷியின் ஆச்ரமம் சென்று அவரிடம் சரணம் அடைந்து அங்கு ஒளித்துக்கொண்டார். பிரதர்தனன் அவரைத் துறத்தி வந்து பிருகுரிஷியுடன் தான் பழிக்குப்பழி வாங்க வேண்டிய அவஸரத்தைக் கூறி வீதஹவ்யரை விட்டு விடும்படிக் கேட்டார். அப்பொழுது ரிஷி 'என் ஆச்ரமத்தில் க்ஷத்ரியனே இல்லை' என்றார். பிரதர் தனன், அப்படியானால் ஸரி. என்னால் வீதஹவ்யருக்கு ப்ராஹ்மண்யம் வந்ததே போதும்' என்று கூறி திருப்தி அடைந்து போய்விட்டான். அன்று முதல் வீதஹவ்யருக்கு ப்ராஹ்மண்யச் சிறப்பு வந்துவிட்டது.

**வினா** 7.- மதங்க ரிஷி யார்? அவருக்குச் சண்டாள தோஷமிருந்தது எவ்வாறு வெளியாயிற்று?

**விடை.-** மதங்கன் ஓர் ப்ராஹ்மணன் பிள்ளை. அவனை அவன் தாய் கர்ப்பம் தரித்திருக்கையில், அவள் கற்புநிலை குலைந்தபடியால் அவனுக்குச் சண்டாளத்வம் பிறவியிலேயே வந்துவிட்டது. இது தகப்பனுக்குக்கூடத் தெரியாது. ஒரு நாள் யாக வஸ்துக்களைச் சேகரித்து வரும்படி ப்ராஹ்மணர் மதங்கனை அனுப்புவித்தார். அவன் ஓர் கோவேரு கழுதைக்குட்டி கட்டிய வண்டியில் ஏறிப்புறப்பட்டான். அது தன் தாயைக்கண்டதும் அதை நோக்கி இழுத்தது. அப்பொழுது மதங்கன் அந்தக் குட்டியை ஈவு இறக்கமின்றி அடித்துக் காயப்படுத்தினான். இதைக் கண்ட தாய்க் கழுதை, குட்டியை நோக்கி 'துக்கித்து என்ன லாபம். உன்னை ஓட்டுவது ஓர் சண்டாளனாக்கும், ப்ராஹ்மணனாகில் இப்படிச் செய்வானா அவன்? பொருத்துக் கொள். பேய்க்கு வாழ்க்கைப்பட்டால் புளியமரத்தில் ஏறத்தானே வேண்டும். முடியாதென்றால் விடுமா?" என்று தேற்றியது. இதைக்கேட்டு மதங்கன் கழுதையிட மிருந்து தன் தாயின் கெட்ட குணத்தை அறிந்து துக்கம் அடைந்து வீட்டிற்குத் திரும்பிப்போய் தகப்பனாரிடம் தன் நிலையைக்கூறி ப்ராஹ்மண்யம் ஸம்பாதிக்கத் தவம் செய்யப் போய்விட்டான்.

**வினா** 8.- மதங்கன் தவம் எவ்வாறு நடந்து முடிந்தது?

**விடை.-** மதங்கன் தவம் செய்யத் தொடங்கி வெகுகாலம் கஷ்டப்பட்டான். இந்திரன் பிரஸன்னமாகி, 'ப்ராஹ்மண்யம் கிடைப்பது துர்லபம். சண்டாளத்வத்தி லிருந்து படிப்படியாக அநேககாலம் ஒவ்வொரு மேல் ஜாதியிலும் பிறந்து உயர்ந்து முடிவில் தான் ப்ராஹ்மண்யம் பெறமுடியும். இந்த ஜன்மத்தில் ப்ராஹ்மண்யம் அடைய முயலுவது உனக்கு வீண்சிரமம்தான்' என்று உள்ளதை உள்ளபடிக் கூறி மறைந்தான். மதங்கன் இதனால் தளராது வெகுநாள் தமஸுசெய்து மன்றாடினான். அடிக்கடி இந்திரனும் புத்திமதி கூறிவந்தான். முடிவில் மதங்கனுக்கே தன் முரட்டுத் தனம் வெளியாயிற்று. பின்னர் அவன் இந்திரனிடமிருந்து இஷ்டப்பட்ட ரூபம் எடுத்துக் கொள்ளும் சக்தியையும், ஆகாய கமனத்தையும் அடைந்து, பெண்கள் ஆராதிக்கும் ஓர் தெய்வம் ஆனான்.

**வினா** 9.- பக்திமான்கள் ஸ்வபாவம் எவ்வாறிருக்கும்?

**விடை.-** காசிதேசத்தில் ஓர்வேடன் வேட்டையாடப் புறப்பட்டு ஓர் மான் கூட்டத்தைக் கண்டு விஷம் தடவிய தன் அம்புகளுள் ஒன்றை எய்தான். அது குறிதவறி அருகாமையில் தழைத்து ஓங்கி இருந்த ஓர் மரத்தில் பாய, மரம் உலர்ந்துபோகத் தொடங்கியது. அந்த மரப்பொந்தில் இருந்த ஓர் கிளி அதை விட்டுப்போகாது அதனோடு தானும் கஷ்டப்பட்டதே ஒழிய அந்த இடம் விட்டு அசையவில்லை. அப்பொழுது இந்திரன் ஓர் ப்ராஹ்மணன் உருக்கொண்டு கிளியிடம் வந்து மரத்தைவிட்டுப் போகும்படி எவ்வளவோ கூறினான். அதைக்கேட்டுக் கிளி இந்திரனை நோக்கி, 'நான் இந்தப்பொந்துள் தான் பிறந்தேன். இந்த மரம் என்னை இதுவரையில் காத்தது. இப்பொழுது மரம் பட்டுப்போகும் கஷ்ட காலத்தை அடைந்திருக்கிறது. இந்த ஸமயம் நான் இதைவிட்டுப் போவது தர்மம் அன்று' என்று கூறியது. இந்திரன் கிளியின் திடத்திற்கு மெச்சி அதன் வேண்டு

கோளின்படி மரத்தைத் தழைத்து ஓங்கும்படி செய்தான். இந்தக் கிளியின் குணமே பக்தர்களது குணம். தாம் தர்மம் என்று கண்டு பின்பற்றிய வழியிலிருந்து பக்தர்கள் மாறவே மாட்டார்கள். அவர்களோடு பழகுபவர்களுக்கு ஸகல இஷ்டங்களும் ஸித்தியாகும் என்பது மரம் தழைத்ததால் தெரிய வருகிறது.

**வினா** 10.- விதி, முயற்சி இவைகளுள் எது சிறந்தது? ஏன்?

**விடை.**- விதி, முயற்சி இரண்டும் கூடினால் தான் ஒருவனுக்குக் கார்யம் ஸித்தியாகும். இதில் ஏதாவது தனித்து நின்றால் முழுப்பலன் கிடையாது. இவைகளுள் விதி இன்னது என்பது தெரியாது. முயற்சியின் பலனால் தான் விதியின் ஸ்வரூபத்தை உணரவேண்டும். முன்னரே இதை அறிய முடியாது. ஆதலால் முயற்சியே மிகச் சிறந்தது. இதை நாமே கவனித்துச்செய்யக் கூடுமாதலால் இதில் தான் நாம் நம்பி. நிற்கவேண்டும். இப்படி முயற்சிக்குங் காலத்தில் நமது காரியம் முடிந்துவிடும் என்று மிகுந்த ஆவலுடன் மாத்திரம் எதிர்ப்பார்க்கக் கூடாது. என்னமோ நாம் செய்வதை திருந்தச் செய்து விடுவோம், விதியிருந்தால் பலன் கிடைக்கும்' என்று ஒருவாறு மனம் அடங்கியே முயற்சிக்க வேண்டும். இவ்வாறு செய்யாது முயற்சிப்பவனுக்கு முடிவில் பலக்குறைவால் துக்கமும், முயற்சியே செய்யாதவனுக்குப் பலனே கிடைக்காததால் கஷ்டமும் ஸம்பவிக்கும். ஆதலால் மனம் அசையாத முயற்சியே சிறந்தது. விதியை நாம் கவனித்துக் கவலைப்பட்டு முயற்சியை நிறுத்தவே கூடாது.

**வினா** 11.- உலகில் வணங்க யோக்யமானவர்கள் யார்?

**விடை.**- பிரஹ்ம ஞானிகளாக இருப்பவர்களே வணங்கத்தக்கவர்கள். உலகில் சண்டையில் தைர்யமாக நின்று தீரனாக விளங்குபவன் உண்மையான வீரனல்ல. தானம் செய்யுங்கால் பலனை உத்தேசிக்காமலும், கர்வம் கொள்ளாமலும் செய்பவனே தீரன். இதைப்போன்ற அனேக தீர குணங்களால் மன மடங்கிய ப்ரஹ்ம ஞானியான ப்ராஹ்மணர்களே மிகச் சிறந்தவர்கள். இத்தகையவன் வயதிற்சிறிய வனாயினும் பெரியவர்கள் அவரை தகப்பனாராகப் பாவித்து மரியாதை செய்ய வேண்டும். இவர்களைத்தான் க்ஷத்திரியர்கள் ஸுகமாக வைத்துக்காப்பாற்ற வேண்டும்.

**வினா** 12.- வாக்குத்தத்தம் செய்தபடி நடவாதவர்கள் கதி என்ன?

**விடை.**- இரண்டு ஸ்நேஹிதர்கள் ஓர் ஊரில் வாழ்ந்துவந்தனர். இவர்களுள் ஒருவன் தானம் கொடுப்பதாக ஓர் ப்ராஹ்மணரை ஆசைகாட்டி அழைத்துவிட்டு அவரைக் கவனிக்ககூடவில்லை. இவன் அடுத்த ஜன்மத்தில் பிணம் தின்னும் நரியாகப் பிறந்தான். பிணம் தின்னுகையில் நரியின் கிட்டே ஓர் குரங்கு வந்து நரியின் கதியைக்கண்டு துக்கிக்க நரி தன் பூர்வ ஜன்ம விருத்தாந்தத்தைக் கூறியது. அப்பொழுது குரங்கு தான் நரியின் பூர்வஜன்ம ஸ்நேஹிதன் என்று கூறித் தான் மனுஷ்ய ஜன்மத்தில் பிராஹ்மணருக்காக வைத்திருந்த பழங்களைத் தின்றதால் தனக்கு இந்த ஜன்மம் வந்தது என்று கூறிற்று. ஆதலால் ப்ராஹ்மணர் விஷயமாக யாதொரு கெடுதியும் செய்யக்கூடாது. பொதுவாக சொன்ன சொல் தவறலாகாது.

**வினா** 13.- கீழ் ஜாதியானுக்கு மேல் ஜாதியான் மேல் ஜாதிக்குறிய விஷயங்களைக் கூறில் இருவர் கதியும் என்னவாகும்?

**விடை.-** ஹிமயலைச் சாரலில் மஹாத்மாக்கள் சிலர் தபஸு முதலியன செய்து வந்தனர். அங்கு ஸத்விருத்தியுள்ள சூத்ரன் ஒருவன் வந்து சேர்ந்து பெரியோர்களுக்குப் பணிவிடை செய்து சிறப்படைய எண்ணினான். இப்படி யிருக்க ப்ராஹ்மண தர்மத்தை அனுஷ்டிக்கவேண்டும் என்ற ஆவல் அவனுக்கு வந்தது. இதன்படி நடக்க அங்குள்ளவர் ஸம்மதிக்கவில்லை. உடனே இவன் வேறு காடு சென்று ப்ராஹ்மண தர்மத்தை அனுஷ்டிக்கலானான். அப்பொழுது இவன் ஆசிரமத்திற்கு ஓர் ரிஷிவந்தார். இவன் தன் ஜாதியைக் கூறாது அவரை சிராத்தம் செய்து வைக்கும்படி வேண்டினான். அவர் அறியாது செய்து வைத்தார். மறு ஜன்மத்தில் சூத்ரன் அரசனாக, ரிஷி அவன்கீழ் புரோஹிதராயும் பிறந்தனர். அரசன் பூர்வ ஜன்ம ஞாபகத்தால் புரோஹிதரை நோக்கி ஒருக்கால் சிரிக்க, புரோஹிதர் இதன் ரஹஸ்யத்தை அரசனிடமிருந்து தெரிந்துகொண்டார். பின்னர் அரசன் புரோஹிதருக்கு வேண்டிய அளவு தனம் கொடுக்க அவர் தான தர்மாதிகள் செய்து சுத்தராகி மிகுந்த கஷ்டப்பட்டுத் தவம் செய்து பூர்வ நிலையை அடைந்தார். ஆதலால் மேலான ஜாதிக்கு உரியவைகளை கீழ் ஜாதியானுக்குச் சொல்லிக் கொடுத்தால் கீழ் ஜாதியான் சிறப்படைவன், மேல் ஜாதியான் மிகுந்த கஷ்டத்திற்கு ஆளாவான்.

**வினா** 14.- ஆண் பெண் இருவருக்குள் உலக விஷய ஸுகமும் பற்றும் யாருக்கு அதிகம்?

**விடை.-** முன்காலத்தில் **பங்கனாச்வன்** என்ற ஒரு அரசனிருந்தான். அவன் ஓர் பெரிய யாகம் செய்யத்தொடங்க இந்திரன் கோபங்கொண்டு அவன் புத்தியை மயக்கிவிட்டான். இந்த அவஸ்ரத்தில், தன் 100 - பிள்ளைகளும் யாகத்திற்குத் தயார் செய்து கொண்டிருக்கையிலேயே, அரசன், குதிரை ஏறி வேட்டைக்குப் புறப்பட்டான். வழியில் தாஹம் அதிகரிக்க ஓர் அழகிய ஏரியைக்கண்டு அதனுள் மூழ்கினான். வெளியிலே எழுந்து நோக்கினான். பெண்ணாக மாறிவிட்டான். ராஜ்யம்வந்து நடந்த ஸங்கதியைக்கூறி பிள்ளைகள் வசம் ராஜ்யத்தை ஒப்புவித்து அரசன் வனம் சென்றான். அங்கு ஓர் ரிஷியின் மூலமாக அரசன் 100-பிள்ளைகளைப்பெற்று அவர்களைத் தன் ராஜ்யம் கொண்டுபோய் தன் பிள்ளைகளுடன் விட்டு ஸ்நேஹமாக வாழும்படி ஏற்பாடு செய்துவிட்டு வந்தான். இவர்கள் ஸுகமாக வாழ்ந்தது இந்திரனுக்குப் பொறுக்க வில்லை. இவர்களுள் சண்டைவரும்படி செய்து அவர்கள் அடித்துக்கொண்டு இறக்கும்படி செய்தான். பின்னர் ப்ராஹ்மணன் உருவோடு இந்திரன் பங்கனாச்வன் பெண்ணாகித் துக்கிக்கும் இடம் வந்து ஸங்கதியை விசாரித்து 'என்னைக் கவனியாது எனக்கு விரோதமான யாகம் செய்து நீ கஷ்டப்படுத்தியதால்தான், நான் உனக்கு இவ்வளவு கஷ்டத்தை உண்டாக்கினேன். நான் தான் இந்திரன்' என்று கூறி புண்படுத்தினான். உடனே அரசன் இந்திரனை அடிபணிந்து நான் பிள்ளை வேண்டும் என்றல்லவோ அந்த யாகத்தைச் செய்தேன். நான் ஒரு அபராதமும் அறியேன்' என்று முறையிட்டான். இந்திரன்

ஸந்தோஷமடைந்து 'உன் பிள்ளைகள் 200-பேரில் யாராவது 100-பெயரை உனக்குத் தருகிறேன், கேட்கலாம்' என, அரசன் 'நான் பெண்ணாக இருக்குங்கால் பெற்றெடுத்த பிள்ளைகள் 100-பேர்களைக் கொடும்' என்று கேட்டான். ஏன் இவ்வளவு பக்ஷபாதம் என்று இந்திரன் கேட்க, 'ஸ்திரியாக இருக்குங்கால் நான் பெற்ற ஸுகத்திற்கு ஈடோ புருஷனாக விருந்தக்கால் அனுபவித்த ஸுகம்? மேலும் ஸ்திரீயாக இருந்து பெற்ற பிள்ளைகளிடம் தான் எனக்கு அதிகப்ரீதி. நான் எப்பொழுதும் ஸ்திரீயாக இருக்க வேண்டும்' என்று கோறினான். இதனால் உலகவிஷயானுபவமும் பற்றும் ஸ்திரீக ளுக்குப் புருஷர்களை விட அதிகம்தான்.

**வினா** 15.- இஹ பர மிரண்டினிலும் ஸுகம்பெற மனிதன் செய்ய வேண்டிய வை யாவை?

**விடை**.- மனது வாக்கு காயம் ஆகிய மூன்று கரண சுத்தியையும் ஒருவன் அடைய முயலுவதுதான் முக்கிய வழி . பிறர் வஸ்துவை விரும்பல், பரஹிம்ஸை செய்ய எண்ணுதல், வேதங்களில் அவநம்பிக்கை, ஆகிய இம் மூன்றும் மனக்குற்ற ங்கள். கெட்ட ஸம்பாஷணை, கொடுஞ்சொல், பரநிந்தை, பொய் ஆகிய இந்நான்கும் வாக்கின் குற்றங்கள். கொல்லுதல், பிறர்பொருளை அபஹரித்தல், பிறர் பெண் சாதிகளைக் கற்பழித்தல் ஆகிய இவை காயத்தின் குற்றங்கள். இவைகளை நீக்கி திரிகரண சுத்தி பெறவேண்டும்.

**வினா** 16.- பரமசிவத்தின் சிறப்பு எத்தன்மையது?

**விடை**- 'பரமசிவம்தான் பரம்பொருள் என்று கூறப்படுவது. இதிலிருந்துதான் ப்ரஹ்மா விஷ்ணு ருத்ரர் முதலிய தேவதைகள் உண்டாகி அவரவர் தமது தொழில்களைச் செய்து வருகின்றனர். ஸ்ரீமந்நாராயணரால்தான் பரமசிவத்தை முற்றும் உணரமுடியும். கிருஷ்ண பரமாத்மாவே பரமசிவத்தை ஆராதித்து சிறப்பு அடைந்திருக்கிறார். இந்த விஷயத்தை அவரே கூறவேண்டும்' என்று கூறி பீஷ்மர் வாயை மூடப் பரமசிவத்தின் சிறப்பை கிருஷ்ண பகவான் கூறலுற்றார்.

**வினா** 17.- கிருஷ்ண பகவாண் ஏன்பரமசிவத்தை ஆராதித்தார்? எவ்வாறு?

**விடை**.- கிருஷ்ணபகவானது அஷ்டமஹிஷிகளுள் ஒருவளாகிய **ஜாம்பவதி** என்பவள் தனக்குத் தகுந்த பிள்ளை வேண்டும் என்றும் அதற்காகப் பரமசிவத்தை ஆராதித்து இஷ்டஸித்தி அடையும்படி செய்யவேண்டும் என்றும் வேண்டினாள். பகவான் இதற்கு இசைந்து ஹிமாசலத்திற்குப் புறப்பட்டுப்போய் அங்கு உபமன்யூ மஹரிஷியிடமிருந்து சிவதீக்ஷை பெற்று பரமசிவத்தை ஆராதித்து ஆறுமாதத்திற் குள் ஸித்திபெற்றார்.

**வினா** 18.- உபமன்யூ மஹரிஷி எவ்வாறு கிருஷ்ண பகவானுக்கு சிவரஹஸ்யங்களை வெளியிட்டார்?

**விடை.-** சிவபக்தியால் மஹாவிஷ்ணு சக்ரத்தையும், இது போல ஸகல தேவதைகளும் தமது ஆயுதங்களையும் பெற்றவிதத்தையும், ஹிரன்யகசிபு, ராவணன் முதலிய அஸுரர்கள் மேன்மை அடைந்த விதத்தையும், யாக்ஞவல்க்யர் வியாஸர் முதலிய ரிஷிகள் சிறப்பு அடைந்த விதத்தையும் முதலில் உபமன்யூ எடுத்துக் கூறினார். பின்னர் தாம் குழந்தையாக விருக்குங்கால் பால் அன்னம் ஆஹாரமாக வேண்டும் என்று அழத் தம் தாயிடமிருந்து சிவமஹாத்ம்பத்தை கேட்டு உணர்ந்து அதனால் ஸகல விஷயங்களை அடையலாம் என்று அறிந்து ஆவலுடன் சிவதபஸ் செய்ததையும், அப்பொழுது இந்திரன் வந்து தம்மை ஏமாற்றப் பார்க்கத் தாம் பரமசிவத்தை விட வேறு தெய்வத்தை வேண்டவில்லை என்றும், பரமசிவத்தின் பெருமை இத்தன்மையது அது இவ்வாறு பரம்பொருளாகும் என்றும் கூறி அவனை நீக்கியதையும், பின்பு சிவன் ப்ரத்யக்ஷமாக அவரைத் துதிசெய்த மாதிரியையும் அப்பொழுது பரமசிவன் தமக்கு அம்ருதபோஜனத்தை அளித்து நிர்பயத்வம் சாந்தி முதலியவைகள் வரும்படி செய்ததையும் விஸ்தாரமாகக் கூறினார். முடிவில் ஆறுமாஸத்திற்குள் கிருஷ்ணபகவானுக்கு சிவதர்சனம் கிடைக்கும் என்றும் தேற்றினார்.

**வினா 19.-** பகவான் பின்னர் என்ன செய்தார்? உபமன்யூவும் முடிவில் பகவானுக்கு என்ன விஷயத்தை கூறினார்?

**விடை.-** ஆறு மாஸத்திற்குள் பகவான் சிவனைத் தர்சித்துத் துதித்து சிறந்த வரன்களைப் பெற்று உபமன்யூவிடம் வந்தார். அவர் முன்காலத்தில் **தண்டி ரிஷி** சிவதபஸ் செய்ததையும் அவர் துதி செய்ததையும் எடுத்துக்கூறினார். பின்னர் பிரஹ்மாவிடமிருந்து தண்டி கற்றுக்கொண்டு தமக்கு உபதேசித்த **சிவஸஹஸ்ர நாமத்தையும்** விஸ்தாரமாக எடுத்து உபதேசித்தார். (இந்த சிவஸஹஸ்ர நாமம், இந்த பர்வம் 17-ம் அத்யாயத்தில் 30-ம் சுலோகம்முதல் 152-ம் சுலோகம் வரையில் உள்ளது. இதில் 104-ம் சுலோகத்தில் பரமசிவத்திற்கு விஷ்ணு என்பது 621-ம் பெயராகக் காணப்படுகிறது.)

**வினா 20.-** இவ்வாறு யுதிஷ்டிரருக்கு சிவஸ்ஹஸ்ரநாம உபதேசம் செய்ததும் பீஷ்மர் ஸந்நிதானத்தில் என்ன நடந்தது?

**விடை.-** வியாஸர், பராசரர், மாண்டவ்யர் முதலிய ரிஷிகள் தமது சிவபக்தி விசேஷத்தையும் அதனால் தாங்கள் பாபங்களிலிருந்து விடுபட்ட விதத்தையும் எடுத்துத் கூறினார்கள். முடிவில் கிருஷ்ணபரமாத்மாவும் சிவமாஹாத்மயத்தை எடுத்துக் கூறி தர்மபுத்ரருக்கு சிவபக்தி வரும்படி செய்தார். மேல் அவர் பீஷ்மரைக் கேள்வி கேட்கத் தொடங்கினார்.

**வினா 21.-** விவாஹத்தின் ரஹஸ்யம் என்ன? எதை முன்னிட்டுக்கொண்டு அதற்கு உரிய தர்மத்தை அனுஷ்டிக்க வேண்டும்?

**விடை.-** முன்னொரு காலத்தில் அஷ்டாவக்ரர் என்ற ஒரு தபோதனர் **வாதன்யர்** என்ற ரிஷியை அடுத்து அவர் பெண்ணைத் தமக்கு விவாஹம் செய்து

கொடுக்கும்படி கேட்டார். அதற்கு அவர் அஷ்டாவக்ரரை நோக்கி 'நீர் வடக்கே ஹிமாலயம் தாண்டிப் போனால் ஓர் பெரிய அரண்மனை தெரியும். அதில் தபோதனத்தை உடைய ஓர் ரிஷி ஸ்திரீ இருக்கிறாள். அவளைக் கண்டு அவள் கூறுவதைக் கேட்டு வந்தால் என் பெண்ணைத் தருகிறேன்' என்றார். அதற்கு இசைந்து அஷ்டாவக்ரர் வடக்கே சென்று அந்ததவப் பெண்ணைக் கண்டு அவள் அரண்மனையில் தங்கினார். அவள் முதல் நாள் இரவில் அஷ்டாவக்ரர் காமத்தைத் தூண்ட முயற்சித்தாள். அவர் மனம் அசையாது 'நீ இவ்வாறு செய்வது நியாயமன்று. நான் விவாஹம் செய்து கொள்ள வந்தவன். உன்னிடம் என் மனம் எவ்வாறு செல்லும்?' என்று உதரிவிட்டார். மறுநாள் இரவில் இந்தக் கிழவி சிறு பெண்ணுருக்கொண்டு அஷ்டாவக்ரரை கலைக்கப்பார்த்தாள். அவர் மனம் கொஞ்சம் அசைந்தது. தமது தபோமஹிமையால் அதை அடக்கிவிட்டார். அப்பொழுது தபஸிப்பெண் தனக்குக் கல்யாணம் ஆகவில்லை என்பதாகவும், தான் மிகவும் அவர் மேல் காதல் கொண்டிருப்பதாகவும் கூறி, எவ்வளவோ ஜாலம் செய்து பார்த்தாள். திடச்சித்தராய் அஷ்டாவக்ரர், 'நான் விவாஹ விஷயமாக வந்த இடத்தில் இதென்ன விபரீதம்! இவ்வாறு என்னைக்கஷ்டப்படுத்துவதால் உனக்கு என்னலாபம்? நான் யாரைக்கோறிவந்தேனோ அவளைத்தவிற வேறு யாரையும் தொடமாட்டேன்' என்று மௌனமானார். தமஸிப்பெண் தன்ஸொந்த ரூபத்துடன் தோன்றி 'உமது இந்திரிய ஜயத்திற்குமெச்சினேன். இம்மாதிரியுள்ளவர்கள் தான் பிள்ளைகளைப் பெற்று உலக உபகாரம் செய்ப யோக்யமானவர்கள். இவர்கள் தான் விவாஹம் செய்து கொண்டு க்ருஹஸ்தர்கள் தர்மத்தை அனுஷ்டிக்கத் தக்கவர்கள். மற்றவர்கள் எல்லாரும் செய்துகொள்வது விவாஹமல்ல, விஷய ஸுகமே. நான் வடக்குத்திக்கு தேவதை. வாதன்யர் தன் மாப்பிள்ளையாக எண்ணுபவர்களை என்னிடம் அனுப்புவதாகவும் நான் அவர்களைப் பரீக்ஷித்து விவாஹத்திற்குத் தகுந்தவர்களா என்று அறிய வேண்டும் என்பதாகவும் முன்னரே ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது. அதன்படி நான் பரீக்ஷித்தேனே ஒழிய வேறல்ல. நீர்போய் இங்கு நடந்தவைகளை வாதன்யரிடம் கூறும்' என்று சொல்லி அஷ்டாவக்ரரை அனுப்பிவிட்டாள். அவர் வாதன்யரிடம் வந்து நடந்தவிஷயங்களைக்கூற விவாஹம் நடந்தேறியது. ஆதாலால் விவாஹமும் அதற்குரிய க்ருஹஸ்த தர்மமும் இந்திரிய ஜயத்தை முன்னிட்டுக் கொண்டே செய்ய வேண்டும். இது இல்லாவிடில் இந்த ஆசிரமபலன் கிடைக்காது.

**வினா** 22.- பிரஹ்மஹத்திக்கு ஸமமான பாபங்கள் எவை?

**விடை.**- பிராஹ்மணர்களை ஆசைகாட்டி மோசம் செய்தல், நல்ல பிராஹ்மணனது ஜீவனோபாயத்தைக் கெடுத்தல், பசுமாடுகளைத் தண்ணீர் குடிக்க ஒட்டாமல் தடுத்தல், வேதங்களை வாசித்து அறியாது குற்றங்கூறல், பெண்ணை விவாஹம் செய்து கொடாதிருத்தல், பிராஹ்மணரை ஹிம்ஸித்தல், கூன் குருடு முடம் பைத்யம் முதலியவர்களது வஸ்துக்களை அபஹரித்தல், நெருப்புவைத்து வேடிக்கைபார்த்தல் ஆகிய இவைகள் பிரஹ்மஹத்திக்கு ஸமமானபாபங்கள் (தீர்த்தங்களின் மஹிமையும் முக்யமாக கங்கையின் மஹிமையும் இங்கு கூறப்படு கின்றது).

**வினா** 23.- சிராத்தாதி கர்மங்களைச் செய்ய வேண்டியதில் மனிதன் அறிய வேண்டிய முக்கிய விஷயங்கள் எவை?

**விடை.**- நித்ய கர்மானுஷ்டானாதிகளை விதிப்படி முடித்து விட்டுப் பகல் 15-ம் நாழிகையில் சிராத்தவிஷயமான தானாதிகளை ஒருவன் செய்ய வேண்டும். சிராத்தாதிகளில் கொடுக்கப்படும் விஷயங்களைப் பலரறிய வெளியிடக் கூடாது. அதில் இடப்படும் அன்னம் எவ்வித அசுத்தத்துடனும் ஸம்பந்தப்படாததாயும், மிகுந்த ஜாக்ரதையோடு தயார்செய்ததாயும், வேறுயாராலும் உண்ணப்படாததாயும், இருத்தல் வேண்டும். மந்திரங்கள் ஸரிவர உச்சரிக்காது சிராத்தத்தை நடத்தவே கூடாது. சிராத்தப் பிராஹ்மணற் கர்மவியாதிகள் இல்லாவதனாயும், பிராஹ்மண விருத்திகளாகிய பிரஹ்மவிசாரம், நித்யகர்மானுஷ்டானம், வித்யாதானம் முதலியவைகளிலேயே நிலைத்திருப்பவனாயும், பணம் வாங்கிக் கொண்டு உழைக்கும் எந்த வேலையிலும் ஸம்பந்தப்படாதவனாயும், பிராஹ்மண குணங்கள் உடையவனாயும் இருத்தல் வேண்டும். சிராத்தத்திற்கு யோக்யமான நல்ல வஸ்துக்கள் கிடைத்தபோதெல்லாம் பிராஹ்மணன் சிராத்தம் பண்ணலாம். இம்மாதிரி சிராத்தாதிகள் செய்வதால் குடும்பக்ஷேமமும், வம்ச விருத்தியுமே முக்கிய பலன்கள்.

**வினா** 24.- தான விஷயத்தில் நாம் வாங்குபவனிடம் முக்கியமாக கவனிக்க வேண்டிய விஷயங்கள் யாவை?

**விடை.**- முன்னரே ஒருவனிடம் வந்து கேட்டிராதவராயும், ஒருவனுக்கு மிகத்தெரிந்தவராயும், அவன் ஊரிலே இருப்பவராயும், அதிக தூரத்திலிருந்து வருபவராயும் உள்ள பிராஹ்மணர்களை மிகுந்த ஜாக்ரதையாகப் பார்த்து தானங்கள் செய்ய வேண்டும். தானம் வாங்கும் பிராஹ்மணர்களிடம் அஹிம்ஸை முதலிய நற்குணங்கள் இருக்கின்றனவா என்றும், பரநிந்தை முதலிய துர்க்குணங்கள் இல்லையா என்றும் மிகுந்த கவனமாகப் பார்த்துத்தானங்கள் செய்யவேண்டும்.

**வினா** 25.- பெண்களின் ஸ்வ பாவங்கள் என்ன?

**விடை.**- பெண்களுக்குப் பொதுவாக உலகப்பற்றும் விஷய ஸுகங்களிடம் அதிக ஆசையும் உண்டு. அவர்கள் மனம் ஸதா சலித்துக்கொண்டே இருக்கும். அவர்கள் மனோ வியாபாரங்களை வெளியில் காட்டவே மாட்டார்கள். உள்ளேயே அவைகளை அடக்கி அழிக்கும் திரனும் அவர்வளுக்கு இல்லை. தகுந்த ஸ்மயங்கள் வந்துவிட்டால் அவர்களால் எப்பொழுதும் போல அடங்கி நிற்பது மிகுந்த கஷ்டம். ஆகையால் தான் அவர்களைத் தவற இடங்கொடாது மிகுந்த ஜாக்ரதையுடன் புருஷர்கள் காப்பாற்ற வேண்டும். முரட்டுத்தனம் அவர்களுக்கு ரொம்ப அதிகம். ஆனால் திடச்சித்தம் அவர்களுக்கு அதிகமாக இல்லை. இவைகளை எல்லாம் கவனித்து மிகுந்த ஜாக்ரதையாக அவர்களுடன் பழகவேண்டும்.

**வினா** 26.- இத்தன்மை வாய்ந்த பெண்களைக் காப்பது எப்படி?

**விடை.-** மனிதன் நேரிடத் தன் பெண்சாதியைக் காப்பது என்பது மிகக்கடினம். அவர்களை ஸந்தேஹிப்பது அழகல்ல. அவர்களுக்கு வேண்டிய காவல் முதலியன ஏற்படுத்தாதிருப்பதும் அழகல்ல. தன்னைச் சுற்றியுள்ளவர்களது ஸஹாயத்தாலே யே இந்தக் கஷ்டமான காரியம் ஆகவேண்டும். முன் ஒரு காலத்தில் **தேவசர்மர்** என்ற ஒரு ரிஷி இருந்தார். அவருக்கு **விபுலர்** என்ற ஒரு சிஷ்யரும், **ரிசி** என்ற ஒரு பெண்சாதியும் இருந்தார்கள். ஒரு நாள் யாக விஷயமாக அவர் பொருள் தேடப்போக வேண்டிவந்தது. சிஷ்யனை அழைத்து 'நான் வரும்வரை யில் என்பெண்சாதியை ஜாக்ரதையாகக் காப்பாற்றவேண்டும். இந்திரன் மஹாமாயாவி. அவன் எப்படியாவது அழகிய உருவுடன் வந்து என்பதிவிருதையான பெண்சாதி மனதைக் கலைக்கப்பார்ப்பான். நீ அவன் காரியம் பலிக்காதபடி ஜாக்கிரதையாகக் காப்பாற்றவேண்டும்' என்று கட்டளையிட்டார். குரு ஆக்ஞையை சிரமேல்கொண்டு தன் குருபத்னியண்டையிலேயே இருந்து சிஷ்யன் வெகு ஜாக்ரதையாகப் பார்த்து வந்தான். இப்படி இருக்கையில், 'இந்திரனை ஜயிப்பதற்கு நாம் வேறாக இருந்தால் முடியாது. நாம் எவ்வளவு சொல்வியும், சஞ்சல புத்தியால் குருபத்னி கெட்டுப் போய்விட்டால் என்ன செய்கிறது? இதையும் தடுக்கவேண்டும்' என்ற எண்ணத்துடன் விபுலன் தனது யோக சக்தியால் குருபத்னியுட்பிரவேசித்துத் தாமரையிலைத் தண்ணீர் போல தாக்கற்று நின்று விட்டான். இந்திரனும் அழகிய உருவுடன் ஆசிரமம் வந்துவிட்டான். பார்த்தான் சிஷ்யன் அசைவற்று உட்சர்ந்திருப்பதை! இதுதான் ஸமயம் என்று ரிசியைக் கலைக்க யத்தனித்தான். ரிசிமனம் கலைந்தது. அவள் இந்திரனை நல்ல வார்த்தைகள் சொல்லி மரியாதை செய்யப் பார்த்தாள். விபுலன் பலத்தால் அவளால் எழுந்திருக்கவும் முடியவில்லை, மரியாதை வார்த்தை சொல்லவும் முடியவில்லை. இந்திரன் அநேக விதமாக வாயால் பிதற்றிய பின்புகூட ரிசிமுடிவில் 'என்ன காரியமாக இங்கு வந்தாய்?' என்று கேட்டாளே ஒழிய வேறு எவ்விதமாகவும் அவளால் பேச முடியவில்லை. இந்திரன் நடுங்கிவிட்டான். இதற்குள் விபுலன், ரிசி தேஹத்தைவிட்டு வெளி வந்து, எழுந்து, இந்திரனை வாயில் வந்தபடி வைது அவமானப் படுத்தி ஓட்டிவிட்டான். குரு வந்ததும் நடந்த ஸங்கதிகளை எல்லாம் விபுலர் சொல்லித் தான் காப்பாற்றிய விதத்தை மாத்திரம் வெளியிடாதிருந்தான்.

**வினா 27.-** இந்த விஷயத்தில் விபுலனுக்கு என்ன கஷ்டம் நேரிட்டது? அது எவ்வாறு நீங்கிற்று?

**விடை.-** விபுலன் தபஸு செய்து மிகுந்த தபோதனனானான். கொஞ்சம் கர்வம் மாத்திரம் அவன் மனதில் புகுந்துவிட்டது. இப்படி இருக்கையில் ரிசியின் ஸஹோதரி வீட்டில் ஓர்விசேஷம் நடந்தது. ரிசியும் தேவசர்மரும் புறப்படுகையில் ஓர் அப்ஸரஸியிடமிருந்து விழுந்த தேவபுஷ்பங் கீழே கிடக்க அதை ரிசி எடுத்துக்கொண்டு போனாள். இதன் வாஸனை முதலியவற்றைக்கண்டு இவை போன்ற புஷ்பங்கள் தனக்கு வேண்டும் என்றுரிசியின் ஸஹோதரி கேட்க, இதை அறிந்த தேவசர்மர் தமது சிஷ்யனான விபுலனை இந்த வேலையாக அனுப்பினார். விபுலன் ஆசிரமத்தருகில் வர தபோமஹிமையால் அவனுக்கு அங்கேயே புஷ்பங்கள் கிடைத்துவிட்டன. கர்வம் அதிகரித்து விட்டது. வரும்வழியில் இரண்டு பெயர்கள் மத்து மாதிரி சுற்றிவந்தனர். ஒருவருக்கொருவர் வேக வித்யாஸத்தைப்

பற்றி தர்க்கிக்கலாயினர். அதில் ஒவ்வொருவரும் தாம் சொன்னதை ஸரி என்று கூறி' நம்முள் யார் அபிப்பிராயம் தப்பிதமோ அவன் விபுலன் அடையும் கதியை அடைவான்' என்று சபதம் செய்தனர். விபுலன் கர்வம் அடங்கியது. 'நான் என்ன பாபம் செய்து விட்டேன்?' என்று யோசிக்கலானான். இப்படி வருகையில் ஆறு பெயர்கள் சொக்கட்டானாடிக் கொண்டிருந்தனர். அவர்களுள் ஒருவன் 'யார் பிரட்டு ஆட்டம் ஆடுகிறார்களோ அவர்கள் விபுலன் கதியை அடைவார்கள்' என்றான். விபுலன் மனம் பதறியது. என்ன யோசித்தும் தான் எந்த பாபத்தையும் செய்ததாக ஏற்படவில்லை. முடிவில் தான் குரு பத்னி தேஹத்துள் புகுந்தது பாபமோ என்ற சங்கை உண்டாயிற்று. இப்படி எண்ணி வருகையில் தான் புகுந்ததுபாபம் அல்ல, அதை குருவோடு சொல்லாது ஒளித்ததே மிகுந்தபாபம் என்று பட்டது. விபுலன் குருவிடம் வந்து கடந்த ஸங்கதிகளைத் தெரிவித்து தான் ஒளித்ததையும் வெளியிட்டான். அப்பொழுது குரு 'நீ பார்த்த இருவர் இராப்பகல், ஆறு பெயர்கள் ஆறு ருதுக்கள். நீ மிகுந்த தர்மாத்மாவாகையால் உனக்கு இவைகள் ஸஹாயம் செய்தன. ஒருவன் எந்த பாபத்தொழிலை எவ்வளவு ரஹஸ்யமாகச் செய்தாலும் அதற்கு இராப்பகல்களும் ருதுக்களும் ஸாக்ஷியாக நிற்கும். நல்ல விஷயத்தில் ஒரு வேளை பாபம் செய்யும்படி நேரிடலாம். அதனால் மனிதனுக்குப் பாபமே வாராது. அதைச் சொல்லிவிட வேண்டிய இடத்தில் ஒளித்தால் தான்பாபம். பொதுவாக அவசியம் செய்யும்படி வந்த பாபத்தைச் சொல்ல வேண்டிய இடத்தில் கூசாது வெளியிடுவதே அதற்குப் பரிஹாரம்' என்று கூறித் தேற்றினார்.

**வினா** 28.- விவாஹங்கள் எத்தனை விதம்? அவைகளின் லக்ஷணம் என்ன?

**விடை.**- குலகோத்ரத்தை விசாரித்து பெண்ணைக் கொடுத்துக் கல்யாணம் செய்வது **பிராஹ்மண விவாஹம்**. தகுந்த பிள்ளையைப் பார்த்து அவனுக்குப் பணம் முதலியவைகளைக் கொடுத்து தன் பெண்ணை அவன் கல்யாணம் செய்து கொள்ளும்படி தூண்டுவது **க்ஷத்ரிய விவாஹம்**. தகப்பன் தன் இஷ்டம் முதலிய வைகளை நோக்காது தன் பெண்ணும் ஓர் தகுந்த புருஷனும் ஒருவரை ஒருவர் காதலிப்பதைக்கண்டு அவனுக்குத் தன் பெண்ணை விவாஹம் செய்துகொடுப்பதே **காந்தர்வ விவாஹம்**. அதிகப்பணங் கொடுத்துப் பெண்ணைக் கொள்வதே **அஸுர விவாஹம்**. உறவினர் முதலியவர்களை வெட்டிச் சாய்த்து பெண்ணை அவள் இஷ்டப்படி எடுத்துவந்து விவாஹம்செய்துகொள்வதே **ராக்ஷஸ விவாஹம்**. ஆக விவாஹங்கள் ஐந்து விதம். இவைகளில் முன்னது மூன்றுமே நியாயமான விவாஹங்கள்.

**வினா** 29.- விவாஹ விஷயமாக கவனிக்கவேண்டிய விஷயங்கள் யாவை?

**விடை.**- பிராஹ்மணன் முதல் மூன்று வர்ணத்திலிருந்து ஒவ்வொரு பெண்ணையும், க்ஷத்ரியன் இரண்டாவது மூன்றாவது வர்ணங்களிலிருந்து ஒவ்வொரு பெண்ணையும், வைச்யன் தன் வர்ணத்தில் ஓர் பெண்ணையும், சூத்ரன் தன் வர்ணத்தில் ஓர் பெண்ணையும் மாத்திரம் தான் விவாஹம் செய்து கொள்ளலாம். முதல் மூன்று வர்ணத்தாரும் சூத்ர ஸ்திரீயை விவாஹம் செய்து கொள்வது தர்மமன்று. அவளுக்குப் பிறக்கும் குழந்தைகளுக்கு தர்மப்படி தகப்பன் ஸொத்தில் பாகமில்லை. ஆயினும் ஓர் சிறு பாகம் தயையால் மற்றையப்

பிள்ளைகள் கொடுக்க வேண்டும். தகப்பனாவது ஸஹோதரனாவது இல்லாத பெண்ணை விவாஹம் செய்து கொள்வது தர்மம் அல்ல. கல்யாணத்திற்கு முன் பெரியவளாகும் பெண்கள் மூன்று வருஷம் காத்திருந்து நான்காம் வருஷம்தாமே தம் மனதிற்குப் பிடித்த ஒருவனை விவாஹம் செய்து கொள்ளலாம். தம் மனதிற்குப் பிடிக்காத ஒருவனை இவர்கள் விவாஹம் செய்து கொள்ள இணங்கவே கூடாது. ஒருவனிடம், சீர் முதலியவைகள் பெற்றுக்கொண்டபோதிலும் பெண்ணின் தகப்பன் அந்த விடத்திலேயே கல்யாணம் செய்தே தீரவேண்டும் என்பதில்லை. அதைவிட நல்ல விடம் கிடைத்தால் வாங்கிய சீர் முதலியவைகளை திருப்பிக் கொடுத்து விட்டு மாறலாம். மாறுவது தகப்பனுக்குக் கொஞ்சம் கௌரவக் குறைவே ஒழிய புதிய விவாஹத்திற்கு குறைவே இல்லை. பெண்ணின் நன்மையைத் தகப்பன் நோக்க வேண்டுமே ஒழிய தன் கௌரவத்தைப் பார்க்கவேகூடாது. சீர்கொடுத்தவன் கோபித்துக்கொண்டு போனாலாவது வேறு எவ்விதத்திலாவது கல்யாணம் நிற்க பெண்வீட்டுக்காரன் சீரைத் திருப்பிக்கொடுக்காமலிருந்தால், தன் பெண்ணை வேறு இடத்தில் விவாஹம் செய்து கொடுக்கக் கூடாது. நியாயமான விவாஹத்தில் பணவிஷயங் குருக்கிட்டு சச்சரவு உண்டாக்கக் கூடாது. ஒருவன் ஸமகுலத்தில் விவாஹம் செய்து கொள்ளும் விஷயத்தில் தன்னிடம் அப்ரியம் இல்லாத பெண்ணை, அவன் ஸஹோதரனால் கொடுக்கப்பட்டு அக்னி ஸாக்ஷியாக வேதவிதிப்படி விவாஹம் செய்து கொள்ள வேண்டும்.

**வினா** 30.- விவாஹம் செய்துகொண்ட பெண்ணை எவ்வாறு நடத்த வேண்டும்?

**விடை**.- அவளை அனாவசியமாகக் கடிந்து பேசாது, அவளுக்குத் தகுந்தபடி மரியாதையாக நடந்துகொள்ள வேண்டும். அவள் மனம் கோணவே இடங்கொடுக்க க்கூடாது. இவ்வாறு செய்துவரும் குடும்பத்தில் தேவதாராதனம் செய்த சிறப்பு உண்டாகும். பெண்கள் மனம் நோகச்செய்யுமிடம் ஒருநாளும் விளங்காது. அவர்களை மிகுந்த ஜாக்ரதை காத்துக்கொண்டு வந்தால் தர்மம் தவறாது. பெண்களே குடும்பச் சிறப்பிற்குக்காரணம். பெண்கள் எப்பொழுதும் புருஷர்களிடம் அடங்கி இருக்க வேண்டும். பால்யத்தில் தகப்பனிடத்தும், யௌவனத்தில் பர்த்தாவிடத்தும், விருத்தாப்யத்தில் பிள்ளையிடத்தும் பெண்கள் அடங்கியிருக்கவேண்டியதால் அவர்களை கஷ்டத்திற்கு ஆளாக்காது பாதுகாத்துவரவேண்டும்.

**வினா** 31.- முற்கூறிய விவாஹ பேதங்களால் உண்டாகும் பிள்ளைகளுள் வித்யாஸம் என்ன?

**விடை**.- எந்த வர்ணத்தான் செய்துகொள்ளும் விவாஹத்திலும் ஸமவர்ணப் பெண்ணிடம் உண்டாகும் பிள்ளையே மற்றையப் பிள்ளைகளைவிட மேலானவன். அதன்பின் முறையே அடுத்ததாழ்ந்த வர்ணத்தவர்களிடம் உண்டாகும் பிள்ளை அடுத்தபடி.

| வர்ணம் | பிள்ளைகள் | ஸொத்து |
|---|---|---|
| பிராஹ்மணன் | பிராஹ்மண ஸ்திரீயிடம் | 4/10 |
| | க்ஷத்ரிய ஸ்திரீயிடம் | 3/10 |
| | வைச்ய ஸ்திரீயிடம் | 2/10 |
| | சூத்ர ஸ்திரீயிடம் | 1/10 |
| க்ஷத்திரியன் | க்ஷத்ரிய ஸ்திரீயிடம் | 4/8 |
| | வைச்ய ஸ்திரீயிடம் | 3/8 |
| | சூத்ர ஸ்திரீயிடம் | 1/8 |
| வைச்யன் | வைச்ய ஸ்திரீயிடம் | 4/5 |
| | சூத்ர ஸ்திரீயிடம் | 1/5 |

ஸமவர்ண விவாஹத்தால் உண்டாகும் பிள்ளைகள் தம்முள்பொதுவாக தமக்கு வரும் ஸொத்தை பாகம் செய்துகொள்ளவேண்டியது. பிள்ளையில்லாது பெண் இருந்தால் அவளும் ஸொத்து விஷயத்தில் பிள்ளை போலவேதான். இவ்வாறு தகப்பன் தீர்மானம் செய்த பின்பு அவனுக்குப் பிள்ளைகள் பிறந்தால் பிள்ளைகளும் பெண்களும் தகப்பன் ஸொத்தை ஸமமாகப் பங்கிட்டுக் கொள்ளவேண்டியது.

**வினா** 32- தர்மம் இவ்வாறு இருக்க இது யாது காரணத்தால் எவ்வாறு நிலை குலையும்?

**விடை.**- அறியாமை, காமம் அல்லது பணத்தாசை இதனால் மனிதர்கள் மனம் கெட்டுப்போகத் தாழ்ந்த ஜாதியான் மேலான ஜாதிப் பெண்களை வசப்படுத்தி பெண் சாதி யாக்குவான். இம்மாதிரியான அசாஸ்திரீய வழியில் உண்டாகும் பிள்ளை களாலேயே வர்ணஸங்கரம் (ஜாதிக்கலப்பு) ஏற்பட்டு ஜாதிகள் அநேகமாக, அவர்களு க்காகத்தர்மங்கள் ஏற்படுத்தப்படும். இப்படி தர்மபேதம் அதிகரிக்க முற்கூறிய காரணங்களால் தர்மக்குழப்பம் உண்டாகி தர்மம் நிலைகுலையும்.

**வினா** 33.- கலப்பு ஜாதிகளின் விவரம் என்ன? இவைகளின் முடிவு என்ன?

விடை.- உண்டாகும் விதம் - ஜாதிப் பெயர் - தர்மம்.

| எண் | உண்டாகும் விதம் | ஜாதிப் பெயர் | தர்மம் |
|---|---|---|---|
| 1 | க்ஷத்ரியன் = பிராஹ்மண ஸ்திரீ | ஸூதன் | பெரியோரைத் துதித்தல். |
| 2 | வைச்யன் = பிரஹ்மண ஸ்திரீ | வைதேஹகன் | அந்தப்புறக் காவலாள் |
| * 3 | சூத்ரன் = பிராஹ்மண ஸ்திரீ | சண்டாளன் | கொலையாளி |
| 4 | வைச்யன் = க்ஷத்ரிய ஸ்திரீ | பந்தி | துதித்தல் |
| 5 | சூத்ரன் = க்ஷத்ரிய ஸ்திரீ | நிஷாதன் | மீன் பிடித்தல் |
| 6 | சூத்ரன் = வைச்ய ஸ்திரீ | அயோகவன் | தச்ச வேலை |

[* தக்ஷணத்தில் பறையர் இம்மாதிரி உண்டானவர்கள் அல்ல என்பதற்குத் தகுந்த முகாந்தரங்கள் இருக்கின்றன.]

இந்த ஜாதிகளுள்ளே மறுபடியும் மேல்ஜாதி புருஷர்கள் கீழ்ஜாதிப் பெண்களை விவாஹம் செய்து கொண்டால் இந்த ஜாதிகள் மாறா . அப்படியின்றி ஒழுங்குதப்பி கீழ் ஜாதிப் புருஷன் மேல்ஜாதி ஸ்திரீயை பெண்சாதியாகக் கொண்டால், ஜாதி குறைந்து மறுபடியும் கலப்புண்டாகும். இம்மாதிரி காலக்கிரமத்தில் ஜனங்கள் புத்தி அதர்மத்தில் பிரவேசிக்க ஜாதிக்கலப்பு குறைவு இவைகள் உண்டாகி தர்மம் நிலை குலையும்.

**வினா** 34.- கருணை என்பதன் ஸ்வரூபம் என்ன? அது எவ்வாறு உண்டாகி வளரும்?

**விடை.**- முன்காலத்தில் பிருகு வம்சத்தில் **ச்யவனர்** என்ற ஒரு ரிஷி இருந்தார். 12-வருஷம் **உதவாஸம்** என்ற தண்ணீருள் செய்யும் தபஸைக் செய்ய கங்கா யமுனா ஸங்கமத்தில் மூழ்கிவிட்டார். உள்ளே சென்று தண்ணீர் வேகத்தைத் தாங்கிக்கொண்டு கட்டை போல அசையாது நின்றுவிட்டார். அங்குள்ள மீன்கள் எல்லாம் அவரிடம் இருந்த பயம் நீங்கி அவரைச்சுற்றி நிர்பயமாக உலாவி வந்தன. இவ்வாறு வெகுகாலம் சென்றபின்பு சில செம்படவர்கள் வலை வீசி மீன்பிடிக்க, அன்று இழுத்த வலையில் ஏராளமாக மீன்களும் ரிஷியும் கறை யேற்றப்பட்டார்கள். ரிஷியைக்கண்டதும் பயந்தவராய் செம்படவர்கள் மன்னிக்கும்படி முறையிட்டனர். சியவனர் செம்படவரை நோக்கி, 'நான் இம்மீனோடு இறப்பேன். அவைகளோடு என்னை விற்றுவிடுங்கள். அவைகளைவிட எனக்கு மனம் வரவில்லை' என்றார். அப்பொழுது ராஜ்யம்ஆண்டு வந்த நகுஷ ராஜனிடம் நடந்த விஷயங்களை அவர்கள் தெரிவித்தனர். நகுஷன்வந்து ரிஷியை ஓர் விதமாகவாங்கிவிட மீன்கள், செம்படவர்கள் முதலியோருக்கு ஸ்வர்க்கம் கிடைக்கும்படி ரிஷிசெய்தார். இதனால், சேர்ந்து வாழும் பழக்கத்தால் கருணை உண்டாவது என்றும், ஆபத்காலத்தில் தான் அதன் சிறப்பு விளங்கும் என்றும் தெரிந்துக்கொள்ளவேண்டும்.

**வினா** 35.- நகுஷன் ரிஷியை வாங்கியவிதம் எப்படி? அதிலிருந்து வெளியா கும் விஷயம் யாது?

**விடை.**- நகுஷன் ஓடோடியும் வந்து எவ்வளவோ தனம் கொடுத்து அவரை வாங்கி விடுவதாகக் கூறினான். எந்த வஸ்துவும், எவ்வளவு பணமும் தமக்கு நிகரல்ல என்று ரிஷி கூறிவிட்டார். இன்னது செய்வது என்று விளங்காது நகுஷன் தத்தளிக்கையில் அங்கு தற்செயலாக வந்த **கவையஜாதர்** என்ற ரிஷி 'ஓர் பசுவைக் கொடுத்து ரிஷியைவாங்கும். பசுவே சிறந்த ப்ராஹ்மணர்களுக்கு நிகரான சிறப்பு வாய்ந்தது' என்றார். அவ்வாறு நகுஷன் செய்ய ச்வயனர் ஸந்தோஷத்தோடு எழுந்தார். பார்த்தார்கள் செம்படவர்கள், பசுவின் சிறப்பை உணர்ந்து அதை கனிந்த மனதுடன் தாங்கள் செய்த பாபத்தினின்று நீங்கி பரிசுத்தம் அடைய ச்யவனரிடம் ஸமர்ப்பித்தார்கள். ச்யவனர் அதை ஒப்புக்கொண்டு செம்படவருக்கும் ஸ்வர்க்கம்

அளித்தார். **இதனால் பசுவின் மேன்மையும், அதை தானம் செய்வதால் உண்டாகும் மேன்மையும் விளங்கும்**.

**வினா** 36.- இந்த ச்யவன ரிஷியின் சிறப்பு எவ்வாறு விளங்கியது?

**விடை**.- இவர் ஒருநாள் **குசிகராஜனிடம்** சென்று தாம் ஒரு விருதம் அனுஷ்டிக்கப் போகிற தாகவும் அதற்கு அரசனும் அவன் பெண்சாதியும் சிச்ரூஷை செய்ய வேண்டும் என்பதாகவும் கேட்டுக்கொண்டார். அரசன் அதற்கு இசைய ச்யவனர்' என்றாக்போஜனம் செய்துவிட்டுத் தன்னை நடுவில் எழுப்பி விடக்கூடாது என்று சொல்லி ஓர் அறையுள் சென்று கட்டிலில் ஓர் புறமாக சாய்ந்து படுத்துக் கொண்டு கண்ணை மூடிவிட்டார். அரசனும் அவன் மனைவியும் கால் பிடித்துக் கொண்டிருந்தனர். 21 நாள் கழித்து தாமே எழுந்து ஒன்றும் பேசாமல் போனார். அரசனும் அவன் பெண்சாதியும் 21-நாள் பட்டிணியால் சோர்ந்து அவர் பின்னேபோக ரிஷி திடீரென்று மறைந்தார். அரசன் எங்கு தேடிப்பார்த்தும் அவர் அகப்படவில்லை. 'ரிஷி கோபித்துக்கொண்டு போய்விட்டாரோ?' என்று பயந்துகொண்டு ராஜனும் அவன் ஸ்திரீயும் அவர் இருந்த அரைவர அங்கு அவர் தூங்கிக்கொண்டிருப்பதைக் கண்டு அருகே நின்றுவிட்டனர். மறுபக்கத்தில் 21-நாள் படுத்துத் தூங்கினர். பின்னர் எழுந்து நல்ல திவ்ய உணவுகளை எல்லாம் கொண்டுவரச் சொல்வி அவைகளைத் துணிகளால்மூடி நெருப்புவைத்து எரியும்படி செய்தனர். பின்னர் அரசனையும் அவன் ஸ்திரீபையும், தேரின் மேல் தன்னை வைத்து இழுத்து நகரத்தை வலம் வரச் சொல்லி வழி.யில் ஈவு இறக்கமின்றி அவர்களை அடித்தனர். பார்த்த ஜனங்கள் எவ்வளவுவருந்தியும் ராஜன் மனம் கோணவில்லை. அரசன் கஜானாப் பணத்தை எல்லாம் அப்பொழுது ச்யவனர் தாராளமாக எடுத்து தானம் செய்தார். அரண்மனை வந்து சேர, இறங்கி அவர் கங்கைக்கரைசென்றார். அரசனும் அவன் ஸ்திரீயும் கூடவே செல்ல அவர்கள் சாந்தநிலையை நோக்கி மகிழ்ந்து அவர்களை ரிஷி தொட்டார். மேலே இருந்தகாயம் முதலியன நீங்கி முன்போல அவர்கள் நல்ல நிலையை அடைந்தார்கள். உடனே ச்யவனர் அவர்களை நோக்கி "நீங்கள் இப்பொழுது நகரம் போங்கள். நான் இங்கேயே இன்று தபஸு செய்கிறேன். நாளை நீங்கள் இங்கு வந்தால், உங்களுக்கு சிறந்தவரன்கள் தருகிறேன்" என்றார். அரசன் அவ்வாறு செய்து மறுநாள் வர, ரிஷிஇருந்த விடத்தில் பெரிய பட்டணமும் அதற்குஏற்ற கோட்டை முதலியன எல்லாம் காணப்பட்டன. இவர்கள் வியந்து கொண்டிருக்கையில் தோற்றமாறிப் பட்டணம் மறைந்து ச்யவனர் கங்கைக் கறையில் வெளியானார். பின்னர் ச்யவனர் அரசன் வேண்டுகோளின்படி, தாம் அவர்களைச் சபிக்கவேண்டுமென்றே இவ்வளவும் செய்ததென்றும், இந்த சாபத்தால் அவன் குலத்திற்கு ப்ராஹ்மண்யம் வரவொட்டாது தடுக்கவேண்டும் என்ற நோக்கம் தமக்கு உண்டு என்றும் கூறி, அவனுக்கு ப்ராஹ்மணனுக்கு இருக்கவேண்டிய பொறுமை இருத்தலால் அவன் குலத்தில் ஒருவர் ப்ராஹ்மணனாகப், பின்னர் அவன் குலம் ப்ராஹ்மணகுலமாகவே இருக்கட்டும் என்று அனுக்கிரஹித்து மறைந்தார்.

**வினா** 37.- தான தர்மங்களுள் சிறந்தவைகள் எவை, அவைகளின் சிறப்பு எம்மாதிரியானது?

**விடை.-** தானங்களுள் ஸ்வர்ணதானம், கோதானம், பூதானம் இவைகளே மிகச் சிறந்தவை என்று கூறப்படும். இவைகளை தனக்கு வேண்டும் என்று கேட்டுத் தனது ஆவலைக் காட்டாத ப்ராஹ்மணனுக்குக் கொடுக்கவேண்டும். முக்கியமாக இவைகளைவாங்குபவர் குணத்தை அறிந்தே தகுந்த காலங்களில் கொடுக்க வேண்டும். இந்த தானங்களைவிட அன்னதாமே சிறந்தது. இதுதான் ஸகல கர்மங்களையும் சோபிக்கும்படி செய்கிறது. இதற்கு வாங்குபவர் குணத்தை உற்று நோக்க வேண்டியதே இல்லை. இது உடனே திருப்தியை உண்டாக்குவது. இவைகளால் ஸ்வர்க்க ஸுகம் ஒருவனுக்குக் கிடைப்பது நிச்சயம். தர்மம் அதாவது பொதுவாக ஜனங்களுக்கு உபகாரம் செய்தல், மரம் வைத்தல், குளம் வெட்டல், அன்ன ஸ்த்ரம் வைத்தல் ஆகிய இவைகள் மிகச்சிறந்தவைகள். இவைகளால் ஜனகளுக்கும் தேவதைகளுக்கும் ஸுகம் உண்டாவதால் இவைகளைச் செய்பவனுக்குச் சிறந்த பதம் உண்டு.

**வினா** 38.- தானம் யாகம் இவைகளின் வித்யாஸம் என்ன?

**விடை.-** க்ஷத்ரியன் விஷயத்தில் இவை இரண்டும் முக்கியம். ஒன்றைவிட்டு மற்றொன்றைப் பிரிக்கக்கூடாது. க்ஷத்ரியன் விருத்தி கோரவிருத்தி யாகையால் அவன் இவ்விரண்டையும் சேர்த்தே செய்யவேண்டும். ஆனால் இவைகள் இரண்டையும் உற்று நோக்கி விசாரிக்குங்கால் தானமே யாகத்தைவிடச் சிறந்தது. யாகத்தைச் சிறப்பிப்பது தானமே. தானம் ஜனங்களுக்கு இஹலோகஸுகத்தையும் கொடுப்பவனுக்கு சித்த சுத்தியையும் கொடுப்பது. தானங்களுள் முன்னர் கூறியதோடு எள்ளு, விளக்கு, செருப்பு, குடை, முதலிய உபயோக வஸ்துக்களைத் தானம் செய்வதும் சிறந்த பலன்களைக் கொடுக்கும்.

**வினா** 39.- தானம் கொடுக்குங்கால் எந்த விஷயத்தில் ஜாக்ரதையாக இருக்க வேண்டும்?

**விடை.-** ஒருதரம் ஒருவனுக்குத் தானம் செய்யப்படும் வஸ்துவையே மறுபடி வேறு ஒருவனுக்குத் தானம் செய்யாது ஜாக்ரதையாகப் பார்த்துக்கொள்ளவேண்டும். இதனால்தான் நிருகன் என்ற அரசன் ஒணானாகி வருந்தி முடிவில் கிருஷ்ண பரமாத்மாவின் ஸ்பர்சத்தால் கஷ்டம் நீங்கினான். (**ஸ்ரீமத் பாகவத வினா விடை இரண்டாம் பாகம் 10-ம் ஸ்கந்தம் பார்க்க**.)

1

**வினா** 40.- கோதானத்தின் சிறப்பு யாது? பசுவின் விஷயத்தில் நடந்துகொள்ள வேண்டிய விதம் யாது?

**விடை.- உத்தாலக** ரிஷியின் சாபத்தின்படி அவர் பிள்ளை நாசிகேதஸ் யமபுறம் சென்று அங்கு கோதானம் செய்தவர்கள் அனுபவிக்கும் ஸுதங்களைக் கண்டு களித்தான். கோதானம் எவ்வளவு செய்தாலும் ஸரி, எந்த ஜாதியான் செய்தாலும் சிரத்தையுடன் மாத்திரம் செய்தால் ஒரே விதமான கிறந்த பலனைக்

கொடுக்கும். பசுவை ரக்ஷிப்பதாலேயே ஒருவனுக்கு மேலான பதவி கிடைக்கும். பசுவைப் பணத்திற்கு விற்பவனாகட்டும், திருடுபவனாகட்டும், கொல்டவனாகட்டும் கொல்லும்படி செய்பவனாகட்டும், ஒருநாளும் விளங்கமாட்டான். அவன் நரகில் வருந்தவேண்டியது தான். பசுவின்பேர் சொன்னாலே பாபங்கள் போகும். பசு மிகுந்த ஸத்கர்மங்களுக்கு உபயோகசுரமானதாயும், பரி சுத்தம் செய்யக்கூடியதாயும் இருக்கின்றது. கோ தானம் செய்து அநேக ராஜாக்கள் பரமபதம் அடைந்திருக் கின்றனர். முன் காலத்தில் ஸ்ரீதேவியானவள் பசுவை அணுகி அதனுள் இருக்க இடம் வேண்டும் என்று கேட்டாள். அதற்குப் பசு 'நீயோ சஞ்சல ஸ்வபாவமுள்ளவள். எங்களுடன் நீ சேரவேகூடாது' என்றது. 'உனது தேகத்தில் எல்லா பாகமும் பரிசுத்த மானவை. எங்கேயாவது இடங்கொடுத்தாற் போதும், நான் அங்கேயே ஸ்திரமாக இருக்கிறேன்' என்று ஸ்ரீதேவிகூற, பசு தனது மூத்ரம்: சாணி, முதலியவைகளில் இருக்கும்படி இடங்கொடுத்தது. ஆதலால், அதன் சாணி மூத்ரங்கூட பரிசுத்த வஸ்துக்கள்.

**வினா** 41.- தானத்தைவிடச் சிறந்த தர்மம் எது?

**விடை**.- மனோ நிரோதமே சிறந்தது. இது இல்லாவிடில் தானமே பயனற்றுப் போய்விடும். தானத்தால் வாங்குபவன் ஸுகிக்கிறான். இதைக்கண்டு கொடுப்பவனுக் குக் கர்வம் வந்து அவன் அதோகதியை அடையலாம். தானம் செய்யுங்கால் ஏற்படக் கூடிய சச்சரவுகளைக் கண்டு ஒருவன் கோபம் அடையலாம். இதனால் தானத்தின் பலன் கெட்டுப்போகும். இந்தமாதிரியான குறைவுகளைத் தடுப்பது மனோநிரோதமே. இதைவிடச் சிறந்தது மனிதனுக்கு வேறொன்றில்லை.

**வினா** 42.- தானம் வாங்குபவன் கதி என்ன? இந்த விஷயத்தில் தர்மம் என்ன?

ஃ**விடை**.- தானம், கொடுப்பவனையும் வாங்குபவனையும் ஸுகப்படுத்துகிற தாயினும், வாங்குபவனுக்கு அவ்வளவு சிறப்பு இல்லை. நல்லவர்களிடமிருந்து வாங்குவது அதிக பாபமில்லை. கெட்டவர்களிடமிருந்து தானம் வாங்குவது மிகுந்த பாபம். முன்காலத்தில் ஓர் பெரிய பஞ்சம் ஏற்பட ஸ்ப்தரிஷிகளும் அருந்ததியும் சாப்பிட ஒன்றும் அகப்படாது தத்தளித்தனர். அப்பொழுது தங்களிடமிருந்த ஓர் ராஜபுத்திரன் இறந்துவிட அவன் மாம்ஸத்தின் மூலமாகப் பசி அடக்கலாம் என்று எண்ணி அவர்கள் அந்தப் பிணத்தைச் சூழ்ந்து கொண்டனர். இந்த ஸமயத்தில் ஓர் ராஜகுமாரன் அங்கு வந்து சிறந்த தானங்கள் செய்து அவர்களைத் திருப்திப் படுத்துவதாகக் கூறினான். 'நாங்கள் நிர்கதி.பாகப்போனால் யாகாதி ஸமயங்களில் தான் தானம்வாங்கலாமே ஒழிய இப்பொழுது வாங்க மாட்டோம் வாங்குவது சிறப்புடையதல்ல' என்று கூறி மறுத்துவிட்டனர். ராஜகுமாரன் எவ்வளவு தந்திரமாகப் பார்த்தும் அவர்களை தானம்வாங்கும்படி செய்ய முடியவில்லை. இவ்வாறு தனது தானத்தைவாங்காது தள்ளிவிட்டதைக் கேள்விப்பட்ட அரசன் கோபம்கொண்டு ஹோமம் செய்து அதிலிருந்து **யதூதனி** என்ற ராக்ஷஸியை உண்டாக்கி ரிஷிகளைக் கொன்றுவரும்படி அனுப்பினான். இதற்குள் ரிஷிகள் ஓர் குளத்தை நோக்கிப் போயினர். வழியில் **சுனசகர்** என்ற ரிஷிவந்து சேர்ந்தார். எல்லோரும் சேர்ந்து குளக்கரைபோயினர். அங்கு யதூதனி காத்திருந்தனள்.

அவளிடம் குளத்திலிறங்க அனுமதி கேட்க அவள் ஒவ்வொருவர் பெயரையும் கூறிவிட்டுப் போய் தாமரைத் தண்டுகளைப் பறிக்க உத்தரவு கொடுத்தாள். முடிவில் அவர்களைக் கொல்லவேண்டியது என்று எண்ணியிருந்தாள். ஆனால் புதிய ரிஷி பெயரைக்கூறி அவளுக்கு பிரமை உண்டாக்கி முடிவில் அவளைக் கொன்றார். பின்னர் தாமரைத் தண்டைப்பறித்து தின்ன நினைத்துக் குளத்துள் இறங்கி தண்டுக ளைப்பறித்து கறையிலிட்டனர். முடிவில் எல்லோரும் கறைவந்து பார்க்கையில் தண்டுகளைக் காணவில்லை. அப்பொழுது ஒவ்வொரு ரிஷியும் 'நான் எடுத்திருந் தால் எனக்கு பாவிகளுக்குவரும் முடிவு. வரட்டும்' என்று சபதம் செய்தனர். புதிய ரிஷி மாத்திரம் 'நான் அதை எடுத்திருந்தால் புண்யவானுக்கு வரும் நிலை வரட்டும்' என்று சபதம் செய்தார். ரிஷிகள் ஆச்சரியப்பட்டு நின்று இந்த புதியவன் தான் எடுத்தவன் என்று கூறினர். புதிய ரிஷி தன் உருவங்கொண்டு “நான் இந்திரன் உங்களுக்கு தானம் செய்யவந்த அரசனால் ஏவப்பட்ட இந்த யதூதனி என்ற ராக்ஷஸியிடமிருந்து உங்களைத் தப்புவிக்கவந்தேன். உங்களுக்கு தானம் வாங்கும் ஆசையே இல்லாததால் நான் இவ்வாறு செய்தேன். கூடியவரையில் தானம் வாங்காதிருப்பதே மேன்மை" என்றான்.

**வினா** 43.- இம்மாதிரி ஸ்த்துக்களான பிராஹ்மணர்கள் ஸொத்தை அபஹரிப் பவன் கதி என்ன?

**விடை.**- இந்த பாபத்தைச் செய்தவன் மிகுந்த கஷ்டத்தை அனுபவிக்கும்படி நேரிடும். இவன் அடுத்த ஜன்மத்தில் சண்டாளனாகப் பிறந்து வருந்த வேண்டும். இவன் பிராஹ்மணர்கள் நன்மைக்கு உழைத்து அவர்களுக்காக உயிர் விட்டால் தான் நற்கதி அடைவான்.

**வினா** 44.- புண்யவான்கள் அடையும் லோகங்களின் விவரம் என்ன?

| | |
|---|---|
| ஸாதாரண புண்யபாபங்கள் | யமலோகம் |
| விருதானுஷ்டானம் | குபேரலோகம் |
| ஸாத்விகவிருத்தி உடையவர்கள் | கின்னரலோகம் |
| தானமே வாங்காது கானரசத்தில் ஈடுபடுதல் | கந்தர்வலோகம் |
| அஹிம்ஸை, மாம்ஸபக்ஷணம் இல்லாமை, பற்றருக்கும் விருத்திகள் | உத்தரகுருலோகம் |
| தானம் வாங்காது, ஸதா லோகஹிதார்த்தம் பாடுபடுதல், கருணை | ஸோமலோகம் |
| வேதம் ஓதல், குருகுலவாஸம், அடக்கம், ஸத்யமுறைத்தல் | ஸூர்யலோகம் |
| யாகம் செய்தல், பெரியோர் நடத்தையைக் கடைப்பிடித்தல் | வருணலோகம் |
| தைர்யம், யாகம் செய்தல், ராஜஸூயம், அசுவமேதம் செய்தல் | பிரஜாபதிலோகம் |
| கோதானம், தீர்த்தயாத்திரை செய்தல் | கோலோகம் |

| | |
|---|---|
| யோகாப்யாஸம், துவந்த்வங்களில் பற்றற்றிருத்தல், ஸாத்விக விருத்திகள் | பிரஹ்மலோகம் |

**வினா 45.-** சிறந்த தபஸ்கள் எவை?

**விடை.-** இந்த விஷயத்தில் முன்னர் பிரஹ்மாவுக்கும் பகீரதனுக்கும் ஸம்வாதம் நடந்திருக்கிறது. அதில் பகீரதன் 'தான் செய்த யாகங்கள் அதில் கொடுத்த தக்ஷிணைகள் தானங்கள், அக்காலங்களில் பட்டிணியாக இருந்து செய்த த்யானங்கள் எல்லாவற்றையும் கூறி, யாகம் செய்தல், கொடை, பட்டிணி கிடந்து (சாப்பாடு உள்பட உள்ள விஷய ஸுதங்களை விட்டு) த்யானம் செய்தல் ஆகிய இவையே முக்கிய தபஸ்கள். இவைகளுள் கடைசிதபஸே மிகச் சிறந்தது' என்று முடிவு கட்டினான்.

**வினா 46.-** மனிதர்கள் அற்பாயுஸ்ஸாகப் போகக் காரணம் என்ன? அதற்கு பரிஹாரம் யாது?

**விடை.-** ஆசாரக்குறைவே அற்பாயுஸ்ஸுக்குக்காரணம். தகுந்த ஆசாரப்படி நடக்காவிட்டால் ஒருவன் ஆயுஸ் குறைந்துவிடும். ஆயுஸ்குறையாதிருக்க ஒருவன் கவனிக்கவேண்டிய ஆசாரங்கள் பின்வருவன. முன்கோபம் இல்லாதிருத்தல், ஸூர்யோதயத்தின் முன்பு எழுந்திருத்தல், பல்தேய்த்தல், ஸ்நாநம் முதலிய சௌசச்செயல்கள் நித்ய அனுஷ்டானம் செய்தல், பரஸ்திரீகளை இச்சிக்காதிருத்தல், அசுத்தவஸ்துக்களைப் பாராதிருத்தல், கால் மேல் கால்போடுதல், காலை அசைத்தல் முதலியவைகளைத் தடுத்தல், மாம்ஸம் தின்னாமை, பரநிந்தை மோசக் கருத்து இவைகள் இல்லாதிருத்தல், பரிஹாஸம் செய்யாமை, விருதங்கள் அனுஷ்டித்தல், சுத்த ஆஹாரத்தை மிதமாகத்தக்க ஸமயங்களில் உட்கொள்ளுதல், அதிதிகளை ஆராதித்தல், குலம், கோத்ரம், நடத்தை முதலியவைகளை விசாரித்துக் கல்யாணம் செய்துகொள்ளுதல், மிதமிஞ்சாது ஸுகங்கள் அனுபவித்தல் ஆகிய இவைகளே ஒருவன் முக்கியமாக கவனித்துப் பின்பற்றவேண்டிய ஆசாரங்கள்.

**வினா 47.-** முக்கிய தீர்த்தங்கள் யாவை?

**விடை.-** தீர்த்தம் என்ற பதத்திற்கு சுத்தம் செய்யும் திறனுடையது என்று பொருள். புத்திமான்கள் பின் வருபவைகளை தீர்த்தங்களாக மதிக்கின்றார்கள். ஸத்யத்தில் ஈடுபட்ட மனஸ், எனது என்ற எண்ணமில்லாத மனஸ், ஞானம், நிராசை, சாந்தம், நன்னடக்கை, பிரஹ்மஞானம், ஆகிய இவைகளே ஒவ்வொருவரிட த்திலும் இருக்கும் தீர்த்தங்கள். பூமியிலும் அநேக தீர்த்தங்கள் இருக்கின்றன. இவைகள் தேகத்தை சுத்தம் பண்ணும், முன்னர் கூறியவை மனதை சுத்தம் பண்ணும். இவை இரண்டும் அவசியம்தான்.

**வினா 48.-** மனிதனுக்கு முக்கிய ஸ்நேஹிதன் யார்? விரோதி யார்?

**விடை.**- தாய் தகப்பன் பந்துக்கள் முதலியோர்கள் மனிதனுக்கு ஸ்நேஹிதர்கள் அல்லர். அவன் செய்யும் புண்ணியங்களே ஸ்நேஹிதர்கள். அவனுக்குக் கெடுதி செய்பவர்கள் விரோதிகள் அல்லர். அவன் பாபங்களே அவனுக்கு விரோதிகள். ஒருவன் செய்த புண்ய பாபங்கள் இறந்த பின்னும் அவனைத் தொடர்ந்து செல்லும்.

.

**வினா** 49.- இந்தப் புண்ய பாபங்களால் விளையும் பலன் யாது?

**விடை.**- புண்ய பாபங்களுக்கு ஏற்ப மனிதனுக்கு ஜன்மங்கள் உண்டாகும். அவைகளில் புண்ய கர்மங்கள் செய்து வந்தால் கிராமமாக மேலான ஜன்மங்கள் உண்டாகும். இல்லாது பாபங்களே செய்துவந்தால் வரவரக் கீழான ஜன்மங்கள் உண்டாகும். கீழான ஜன்மங்களில் அனுபவிக்கும் துக்கங்களால் பாபம் நீங்கினால், காலக்ரமத்தில் மனித ஜன்மத்தை நோக்கி இவர்கள் விருத்தியடைவார்கள். இதுபோல புண்யங்களால் மேலான தேவதாஜன் மங் கிடைக்க அங்கு அனுபவிக்கும் ஸுகங்களால் புண்யம் க்ஷணித்ததும் மனித ஜன்மத்திற்கு ஜீவராசிகள் வர வேண்டியது தான். ஆதலால் புண்ய பாபங்கள் அவைகளுக்கேற்ற மேலான கீழான ஜன்மங்களைக் கொடுத்து முடிவில் மனிதஜன்மம் வரும்படி செய்கின்றன.

**வினா** 50.- பிராஹ்மணன் முக்கியமாக நடந்துகொள்ள வேண்டிய விதத்தைக் குறிப்பிக்கும் கோட்பாடுகளின் விவரம் என்ன?

**விடை.**- அஹிம்ஸை, வேதகர்மங்கள் செய்தல், தியானம், இந்திரிய நிரோதம், தபஸ், குருசிச்ரூஷை ஆகிய இவைகளே. இவைகளுள் அஹிம்ஸையே மிகச் சிறந்தது. வேத கர்மங்கள் செய்தலைத் தவிற மற்றவைகள் எல்லா வர்ணத்தாருக்கும் பொது. ஒருவன் ஹிம்ஸை செய்யும்படி நேரிட்டால் பின்னர் கருணையில் மனவாக்கு காயங்களால் பழகி அந்த பாபத்தை தீர்த்துக்கொள்ள வேண்டும். கொன்று தின்னாமையே மிகச் சிறந்த விருதம். இதனால் தேஹ ஸௌக்யமும், தீர்க்க ஆயுஸ்ஸும், சித்த ஸமாதானமும் உண்டாகும். பெரியோர்கள் மாம்ஸபக்ஷணத்தை விட்டே அமைதி பெற்றனர். உயிர் எல்லாப் பிராணிகளுக்கும் மிகுந்த இஷ்டமான பதார்த்தம். ஆதலால் அதை வாங்குவது கொடிய பாபம்.

**வினா** 51.- உயிர் மிகப்ரீதியான வஸ்துவாகிலும் அதை ஏன் மாய்த்துக் கொள்ளுகிறார்கள்?

**விடை.**- முன்னொருகாலத்தில் வியாஸர் தேச ஸஞ்சாரம் செய்து கொண்டு வருகையில் வண்டிகள் போகும் பாதையில் அவைகளின் சப்தத்தைக் கேட்டுப் பயந்தோடும் ஓர் புழுவைக்கண்டார். அந்தப் புழுவை நோக்கி 'உனக்கு என்ன இவ்வளவு பயம்,' என்று வியாஸர் கேட்க, 'மரணம் என்றால் எல்லோருக்கும் பயமல்லவா அதுபோல எனக்கும்' என்றது. 'உனக்கு இந்த ஜன்மத்தில் என்ன ஸுகமிருக்கும்? மரணமடைவதேமேல்' என்றார். அதற்குப் புழு, 'நான் முன்னர் மனிதனாக இருந்தேன். இப்பொழுது புழுவாக இருக்கிறேன். இங்கும் எனக்கு ஸுகங்கள் இருக்கின்றன. ஆதலால் தான் இறக்க எனக்கு மனம் வரவில்லை,'

என்றது. 'நீ முன் ஜன்மத்தில் கொடிய பாபங்கள் செய்தாய். ஆயினும் ஓர் ப்ராஹ்மணனை மாத்திரம் நீ ஸரியாக ஆராதித்தாய். நீ செய்தபாபம் க்ஷணமாக முடிவில் உனக்கு பிராஹ்மண ஜன்மமவரும்' என்று வியாஸர் அனுக்கிரஹித்து மறைந்தார். புழு அந்த வழியிலேயே கிடந்து ஓர் வண்டியால் நசுக்கப்பட்டு இறந்தது. கிரமமாக ஐந்துக்கள் ஜன்மம், சூத்ர, வைச்யஜன்மம் முதலியன அடைந்து முடிவில் மேலான பிராஹ்மணனாயிற்று. உயிர் வெல்லமாகிலும் மேலான பதவி வரும் என்ற நம்பிக்கையால் ஒருவன் உயிரைக்கூட விடத்தயராவான். இம்மாதிரியாகத் தான் க்ஷத்ரியர்கள் யுத்தத்தில் இறக்கத் தயாராவது, கஷ்டம் பொருக்கமாட்டாது கிணற்றில் விழுதல், விஷமுண்ணுதல் முதலியவைகளால் உயிரை மாய்ப்பதும்.

**வினா** 52.- பதிவ்ருதைகளின் லக்ஷணம் என்ன?

**விடை.**- கணவனிடம் கொடுஞ்சொல் சொல்லாமை,தேவதை, பிதிர்க்கள், பிராஹ்மணர்கள் இவர்களை வழிபடுதல், பெரியோரை ஆராதித்தல், மோசக்கருத்தில் லாதிருத்தல், ரஹஸ்பங்களை வெளியிடா திருத்தல், பிறரோடு அனாவசியமாகப் பேசாதிருத்தல், கணவனுக்கு தெரிவித்தே ஸகலகார்யங்களையும் செய்தல், உறவினர்களை சீராக நடத்துவது, கணவன் தொழில் ஓங்கவேண்டும் என்ற ஆவல், கணவனை விட்டுப்பிரிந்த காலத்தில் எவ்வித அலங்காரத்தையும் செய்து கொள்ளாது அவசியம் செய்ய வேண்டியவைகளை மாத்திரம் செய்வது, குடும்பரக்ஷணம், நகைபண்ணுவது, உறவினர்களைக்காப்பது, இவைகளுக்காக அதிகப்பொருள் ஸம்பாதிக்கவேண்டும் என்று கணவனைத் தூண்டாதிருத்தல், வீட்டை ஒழுங்காக வைத்துக்கொள்வது ஆகிய இவைகளே பதிவ்ருதையின் முக்ய லக்ஷணங்கள்.

**வினா** 53.- கொடை எத்தனை விதம்? இவைகளின் ஸ்வரூபம் என்ன?

**விடை.**- கொடை ஐந்துவிதம். கீர்த்திவேண்டுமென்று கொடுத்தல், லாபம் வேண்டுமென்று கொடுத்தல், பயத்தால் கொடுத்தல், தான், இஷ்டப் பட்டுக் கொடுத்தல், கருணையால் கொடுத்தல் ஆகிய இவைகளே.

முதல் விதம் - பிராஹ்மணர்களுக்குக் கொடுத்தல்.
2-வது - பின்வரும் ஸஹாயங்களை உத்தேசித்து முன்னர் கொடுத்தல்.
3-வது - திருடன், கொடியவர்கள் இவர்களுக்குக்கொடுத்தல்.
4-வது - ஸ்நேஹிதர்களுக்குக் கொடுத்தல்.

5-வது- ஏழைகள் நொண்டி முதலியவர்களுக்குக் கொடுத்தல்.

**வினா** 54.- மனஸ் சுத்தத்தின் ஸ்வரூபம் என்ன?

**விடை.**- பிறர் பொருள்களை ஒருவரும் இல்லாத காட்டில் கண்டபோதிலும், அவைகளின் மேல் மனம் செல்லாதிருத்தலும், விரோதிகளிடங்கூட வெறுப்பில்லா

திருத்தலும், திருப்தி, நேர்மை, கருணை, அறிவு முதலியன நிறைந்திருத்தலும், ஸத்ஸங்க ஆவலுடனிருத்தலும், மனஸ்சுத்தத்தின் ஸ்வரூபம்.

**வினா** 55.- இதன் பின்னர் பீஷ்மர் எந்த விஷயத்தை எடுத்து விஸ்தரித்தார்?

**விடை.**- இங்கு பரமசிவன் மஹாவிஷ்ணுவின் சிறப்பை எடுத்து கூறுவதாக பீஷ்மர் கூறி பின்னர் தாமே **விஷ்ணுஸஹஸ்ர நாமத்தைக்** கூறுகிறார். இது இந்தப்பர்வம் 149-ம் அத்தியாயத்தில் 14-ம் சுலோகம் முதல் 120-ம் சுலோகம் வரையில் காணப்படுகிறது. இதில் சிவன் என்பது 17-ம் சுலோகத்தில் விஷ்ணுவின் 27-ம் பெயராக வருகிறது.

**வினா** 56. - பிராஹ்மணர்கள் சிறப்பு எத்தன்மையை உடையது?

**விடை.**- பிராஹ்மணர்கள் தமது தபோசக்தியால் பஞ்ச பூதங்களையும் தேவதைகளையும் அடக்கும் சக்தி உடையவர்கள். முன்காலத்தில் **தத்தாத்ரேய** மஹாமுனிக்குச் செய்த ஆராதனையால் அவர் அநுக்கிரஹத்திற்குப் பாத்திரனாகி 1000 கரங்கள் பெற்ற கார்த்தவீர்யார்ச்சுனன் மிகுந்த கர்வத்தால் பிராஹ்மணர்களைக் கூட லக்ஷ்யம் செய்யாது இருக்க, அவனை நோக்கி வாயு பின்வருமாறு பிராஹ்மணர்கள் மஹிமையை எடுத்துக்கூறினார். முன்காலத்தில் பூமிதேவி அங்கதேசாதிபதியோடு போட்டியின்பேரில் தான் பூமியிலிருந்து பிரிந்துபோய் பூமியை பாழாகும்படி செய்ய அப்பொழுது **காச்யபர்** தமது யோக வல்லமையால் பூமிதேவி ஸ்தானத்திலிருந்து யாதொரு கெடுதிவராமல் காத்தார். உதத்யர் என்ற ரிஷி வருணனை தத்தளிக்கும்படி செய்து தமது பெண்சாதியை மீட்டிக் கொண்டார். **அகஸ்தியர்** தானவர்களைத் தமது தபோமஹிமையால் தகித்தார். **வஸிஷ்டர்** இந்திரனுக்கு விரோதியானவர்களைத் தமது தபோமஹிமையால் கொன்று கங்கையைக் கொண்டுவந்தார். **ச்யவனர்** தமது தபோமஹிமையால் தம்மை அடிக்க வந்த இந்திரன் கையை அசையாது நிறுத்தி அவனை அடக்கி அச்வனீ தேவதைகளுக்கு யாகங்களில் ஹவிர்பாகம் ஏற்பாடு செய்தார். ஆகையால் பிராஹ்மணர்கள் யோகஸித்திகளால் அத்புதகார்யங்களைச் செய்ய வல்லவர்கள். அவர்களை மரியாதை செய்யவேண்டும் என்று கார்த்தவீர்யார்ச்சுனனுக்கு வாயு பகவான் புத்திமதி கூறினார்.

**வினா** 57.- இந்த ஸமயத்தில் யார் ப்ராஹ்மணர்களின் சிறப்பை எவ்வாறு எடுத்துக் கூறியது?

**விடை.**- இந்த ஸமயத்தில் பீஷ்மர் வேண்டுகோளின்படி கிருஷ்ணபரமாத்மா, ப்ராஹ்மணர்கள் மிகச் சிறந்தவர்கள் அவர்களுக்கு எப்பொழுதும் க்ஷத்ரியன் அடங்கி நடக்கவேண்டும் என்பதைப் பின்வருமாறு வெளியிட்டார். 'நான் துவாரகையிலிருக்குங்கால் என்னிடம் துர்வாஸ் மஹரிஷி வந்தார். இவருக்கு கோபம் அதிகம். ஆதலால் இவரை ஒருவரும் ஆராதிக்காமல் போக நான் இவரை என்னுடன் இருக்கும்படி வேண்டினேன். இவர் ஓர் நியமம் இன்றி புஜிப்பதும் தூங்குவதுமாக இருக்கத் தலைப்பட்டார். ஒருநாள் இவர் படுக்கை அறையுட் சென்று படுக்கைகளை

எல்லாம் கொளுத்திவிட்டார். ஒருநாள் சில உணவு பதார்த்தங்களை, என்னையும் ருக்மிணியையும் மேலே எடுத்துப் பூசிக்கொள்ளும்படி கட்டளையிட்டார். அவ்வாறே செய்தோம். தேரில் ஏறி உட்கார்ந்துகொண்டு ருக்மிணியை இழுக்கச்சொல்லி தெருவழியே அவளை மாட்டை அடிப்பதுபோல அடித்துச் சென்றார் . ருக்மிணி சோர்ந்து விழுந்தாள். தூர்வாஸர் கோபித்துக்கொண்டு ஓடத் தலைப்பட்டார். நான் ருக்மிணியை எழுப்பிக் கொண்டு மனம் கோணாது ப்ராஹ்மண விசுவாஸத்துடன் அவரைப்பின் தொடர்து திருப்தி செய்தேன். தூர்வாஸர் திருப்தி அடைந்து எனக்கு ப்ராஹ்மணர்களிடம் இருக்கும் விசுவாஸம் மாறாதிருக்கட்டும் என்று அனுக்கிர ஹித்து, எனக்கு **சதருத்ரீய** மந்திரத்தை உபதேசித்தார். ஆதலால் ப்ராஹ்மணர்கள் மிகச் சிறந்தவர்கள். அவர்கள் எவ்வளவு கஷ்டப்படுத்தியபோதிலும் அவைகள் எல்லாம் ஒருவனுக்கு நன்மையாகவே முடியும்.' என்று பகவான் தமது ப்ராஹ்மண பக்தியை வெளியிட்டார்.

**வினா** 58.- தர்மத்தை உணரும் வழிகளும் அவைகளின் ஸ்வரூபமும் என்ன? முக்யதர்மங்கள் எவை?

**விடை.**- தர்மங்களை உணர பிரத்யக்ஷம், அனுமானம், வேதம், சிஷ்டாசாரம் ஆகிய இவைகளே முக்கிய வழிகள். இவைகளில் வேதமே மிகச்சிறந்தவழி. இதை ஆதாரமாக வைத்துக்கொண்டு தான் அனுமானாதிகள் செய்து பிரத்யக்ஷத்தோடு பொருத்தவேண்டும். வேதங்களைக் கூட நேரிட உணர்ந்து சில ஸம யங்களில் கஷ்டமாகி விடும். அப்பொழுது நம்மைவிட மிகச் சிறந்தவர்களாகிய மஹான்கள் வேதங்களை உணர்ந்து எவ்வாறு நடந்திருக்கின்றனறோ அவ்வாறே நாமும் நடக்க வேண்டும். ஆதலால் வேதமும், கஷ்டமான விடங்களில் பெரியோர் நடத்தையுமே தர்மங்களை உணர்த்தும் வழிகள். இவைகளால் அஹிம்ஸை, ஸத்யம், கோபம் இன்மை, கொடை ஆகிய இவைகளே முக்கிய தர்மங்கள் என்று தீர்மானிக்கப்பட்டி ருக்கின்றன.

**வினா** 59.- இவ்வளவை கூறி முடித்ததும் பீஷ்மர் என்ன செய்தார்?

**விடை.**- இவ்வளவையும் கூறி முடித்து, துர்யோதனனது பிடிவாதத்தையும் அதனால் விளைந்த பெறுங் கேட்டையும் பற்றிப்பேசிச் சற்று பிரமித்தவர்போல இருந்து கிருஷ்ண பரமாத்மாவைத் துதித்தார். பின்னர் கொஞ்சம் மௌனமாகி இருந்துவிட்டு எல்லோரிடமும் தமது தேஹத்தை த்யாகம்பண்ண அனுமதி வாங்கிக்கொண்டார். மறுபடி மௌனமாக இருக்கையில் பீஷ்மர் மரணத்திற்கு இடங்கொடுத்து, த்யானத்திலிருந்து யோகிகள் தமது தேஹத்திலிருந்து ஆத்மாவைப் பிரிப்பதுபோலப் பிரித்து வெளியேறி தமது பூர்வ நிலையை அடைந்தார். அம்புப் படுக்கையில் இருந்த தேஹம் பிணமாகிவிட்டது.

**வினா** 60.- பீஷ்மர் இவ்வாறு சிறந்த வழியில் தேஹத்யாகம் செய்ததும் பாண்டவர்கள் முதலியோர் என்ன செய்தனர்?

**விடை.-** மிகுந்த துக்கத்தை அடைந்து பீஷ்மருக்குச் செய்ய வேண்டிய கர்மங்களைச் செய்து அவர் தேஹத்தை ராஜ மர்யாதையுடன் தஹனம் செய்து, பாண்டவர் முதலியோர்கள் கங்கையில் இறங்கி பிதிர்களுக்கு தர்ப்பணம் செய்தனர். அப்பொழுது கங்காதேவி பீஷ்மருடைய சரித்திரத்தை எண்ணித் துக்கிக்க அவளை கிருஷ்ணபரமாத்மா தேற்றினார்.

**வினா 61.-** பீஷ்மர் சரித்திரச் சுருக்கம் என்ன?

**விடை.-**

1. பீஷ்மர் பூர்வநிலை - அவர் மானிடஜன்மம் எடுக்கக் காரணம் - எடுத்தவிதம்.
2. அவர் இளமைப்பருவம் - பராக்கிரமம் - பிதிர்வாக்யப்படி நடக்க பிரஹ்மசரியம் பூண்டது (ராமரோடு ஒப்பிடுக) - இதனால் கிடைத்த பெயர்கள் - இஷ்டப்படி மரணத்தைத் தடுக்கும் சக்தி.
3. பிரஹ்ம சரியத்தைக் கலைக்க ஏற்பட்ட விஷயங்கள்:- அம்பை - பரசுராமர் - பரதவம்சம் ஸந்ததியில்லாது நின்ற அவஸரம் - பீஷ்மரின் மனோதிடம்.
4. பீஷ்மர் ராஜாங்க ஸம்பந்தம் - சூதாட்டகாலத்தில் இவருக்கு உண்டான குழப்பம் - இவர் மனோ நிலை.
5. பீஷ்மருக்கு பாரத யுத்தகாலத்திலிருந்த மனோ நிலை (விபீஷணர், கர்ணன், விதுரர் இவர்களோடு ஒப்பிடுக) - கர்மயோகம் அப்பியஸித்தவிதம் - மரணோபாயம் கூறியது. இதைப்பற்றிய ஆக்ஷேப ஸமாதானங்கள்.
6. பீஷ்மர் அம்புப்படுக்கை - ஸ்வச்சந்த மரணசக்தியும் அதை உபயோகித்த விதம்.
7. பீஷ்மர் கல்வித்திறன் - பக்தி - ராஜதர்மம் - ஆபத்தர்மம் - மோக்ஷதர்மம் - தானதர்மம் - ஒழுங்கு - பரம்பொருள் துதி.
8. பீஷ்மர் பரமபதம் பெற்ற வைபவம்.

---

# 14. அசுவமேத பர்வம்

.

*எத்தனை விதங்கள் தான் கற்கினும் கேட்கினும் என்*
*இதயமும் ஒடுங்க வில்லை ;*

*யானெனும் அகந்தைதான் எள்ளளவு மாறவில்லை;*
*யாதினும் அபிமான மென்*
*சித்தமிசை குடிகொண்ட; தீகையோ டிரக்கமென*
*சென்மத்து நானறிகிலேன் ;*
*சீலமொடு தவவிரதம் ஒருகனவிலாயினுந்*
*தரிசனங் கண்டு மறியேன் ;*
*பொய்தமொழி யல்லாமல் மருந்துக்கு மெய்ம் .*
*மொழி புகன்றிடேன் ; பிறர்கேட்கவே*
*போதிப்பதல்லாது சும்மா விருந்தருள்*
*பொருந்திடாப் பேதை நானே!*
*யத்தனை குணக்கேடர் கண்டதாக் கேட்டதா*
*அவனிமிசை யுண்டோ ? சொலாய்!*
*அண்டபகி ரண்டமு மடங்கவொரு நிறைவாகி*
*யானந்தமான பரமே!*

:

**வினா** 1.- பீஷ்மருக்கு ஈமக்கடன்கள் செய்து முடிந்ததும் தர்மபுத்ரர் மனோநிலை எவ்வாறிருந்தது?

**விடை.**- பீஷ்மர் தேஹத்தைவிட்டதும் பழைய துக்கங்கள் எல்லாம் ஓங்கிக் கிளம்ப தர்மபுத்ரர் மனம் பதைக்கத் தொடங்கி விட்டது. பீஷ்மர் கூறிய உபதேச மொழிகள் எல்லாம் மறைந்துவிட்டன. தர்மபுத்ரர் பித்து பிடித்தவர் போலானார். தன் துக்கம் பெரிதாக இருந்தும் அதைக் கூடக் கவனிக்காது த்ருதிராஷ்டிரர் தர்மபுத்ரரை வெகுவாகத்தேற்றினார்.

**வினா** 2.- வேறு யார் இந்த ஸமயத்தில் தர்மபுத்ரரை எவ்வாறு தேற்றியது?

**விடை.**- வியாஸர் 'நடக்கவேண்டியது நடந்தது. இதற்கு அதிக துக்கப்படக் கூடாது. துக்கப்பட்டால் கஷ்டம் அதிகரிப்பதோடுங்கூட, நீர் செய்யவேண்டிய அவசியதர்மங்களை நடத்தாததால் உமக்குக் கேடுவரும். இறந்தவர்களுக்கு துக்கிப்பது தர்மமாயினும், அதிகமாகிவிட்டால் அதுவே கேடுவிளைக்கும். ஆதலால், தேறி உமது தம்பிகளை திருப்திபடுத்தும்' என்று தேற்றினார். கிருஷ்ண பரமாத்மா முன் வந்து பின்வருமாறு தர்மபுத்ரரைத் தேற்றினார். 'பீஷ்மர் சொன்னதெல்லாம் மறந்துபோய்விட்டதா? உமது புத்தி ஏதோ மழுங்கி இருக்கிறது போலக் காணப் படுகிறது. உம்மாலான மட்டும் ஜாக்ரதையாக நடக்குங்கால் வரும் கஷ்டங்களுக்கு பகவானே காரணம். ஆதலால் அதைப்பற்றித் துக்கிப்பதில் பயனில்லை. நீர் பாபம் செய்துவிட்டதாக உமக்கு மாறாமல் பட்டால் அதை தபஸ், யாகம், தானம் முதலிய வைகளால் தீர்க்கமுயல வேண்டுமே ஒழிய இவ்வாறு துக்கிப்பதில் என்ன பயன்? ஆதலால் துக்கத்தை விட்டு விட்டு அசுவமேதம் முதலிய மஹாயஞ்ஞுங்களைச் செய்யும்' என்றார்.

**வினா** 3.- தர்மபுத்திரர் இந்த விஷயமாக என்ன சொன்னார்? வியாஸர் அவருக்கு என்ன வழி காண்பிவித்தார்?

**விடை.-** தர்மபுத்ரர் மனம் தேறி அசுவமேதயாகம் செய்வதைப்பற்றி யோசித்து விட்டு வியாஸரை நோக்கி "இப்பொழுது யாகம் செய்வது மிகக் கஷ்டமாக இருக்கும் போலத் தோற்றுகிறது. துர்யோதனன் இப்பொழுது நடந்த யுத்தத்தில் கஜானாவை ஒழித்துவிட்டானே! யாகம் செய்யப் பணத்திற்கு எங்கு போவது?" என்று தமது ஆக்ஷேபனைகளைத் தெரிவித்தார். அதற்கு வியாஸர், 'முன்காலத்தில் **மருத்தர்** என்ற அரசன் ஓர் பெரிய யாகம் செய்தார். அந்த யாகத்தில் கொடுக்கப்பட்ட தங்கக் கட்டிகளை தூக்க முடியாது ஹிமாலயத்தின் அருகில் ப்ராஹ்மணர்கள் போட்டுவிட்டு வந்தார்கள். அந்தக் கட்டிகளைச் சென்று எடுத்துவந்து சேர்த்து யாகத்தைத் தொடங்கும்' என்று வழிகாட்டினார்.

**வி னா 4.-** மருத்தர் யார்? இவர் யாக விஷயமாக என்ன தடை நேர்ந்தது?

**விடை.-** இவர் இக்ஷவாகு வம்சத்தில் பிறந்த ஓர் அரசர். மஹமேருபர்வதம் சென்று யாக பாத்திரங்களை எல்லாம் பொன்னால் செய்து முடித்தார். பின்னர் யாகத்திற்கு புரோஹிதராக இருந்து நடத்திவைக்க பிரஹஸ்பதியைச் சென்று அழைப்பதாகத் தீர்மானித்தார். இதற்குள் இந்திரனுக்கு மருத்தரின் பேரில் பொறாமை உண்டாக தனது புரோஹிதராகிய பிரஹஸ்பதியிடம்வந்து எப்படியாவது மருத்தருக்குப் புரோஹிதராகாதிருக்கவேண்டும் என்று வேண்டிக்கொண்டான். மருத்தர் வந்து கேட்டகாலத்தில் 'தேவர்களுக்குப் புரோஹிதராக இருக்கும் நான் கேவலம் மனிதனுக்குப்புரோஹிதராகமாட்டேன்' என்று மறுத்து விட்டார்.

**வினா 5.-** இந்தக்கஷ்டத்தை யார் எவ்வாறு நிவர்த்தித்தது?

**விடை.-** மருத்தர் மிகுந்த துக்கத்துடன் பூமியை நோக்கி வருகையில் வழியில் நாரதரைக்கண்டு அவரிடம் தமது கஷ்டத்தை இவர் சொல்லிக்கொண்டார். அப்பொழுது நாரதர் அரசனைத் தேற்றி 'காசி தேசத்தில் பிரஹஸ்பதியின் தம்பி **ஸம்வர்த்தர்** என்பவர் பரமசிவனைத் தர்சிக்க வேண்டும் என்ற ஆவலுடன் பித்தர் போலத் திரிகிறார். அவரைச்சென்று அடைந்து வழிபட்டால் அவர் உமது இஷ்டப்படி யாகத்தைப் பூர்த்தி செய்துவைப்பார்,' என்று கூறி அவரைக் கண்டுபிடிக்கும் வழி, வழிபடும் வழி எல்லாவற்றையும் எடுத்துக்காட்டி மருத்தரின் கஷ்டத்தை நிவர்த்தித்தார்.

**வினா 6.-** மருத்தர் எவ்வாறு ஸம்வர்த்தரைக் கண்டு பிடித்து அவரை இசையும்படி செய்தார்?

**விடை.-** நாரதர் கூறியதை மறவாது மருத்தர் காசி பட்டணம் சென்று நகரவாயிற்படியில் ஓர் பிணத்தைப் போட்டுக் கொண்டு உட்கார்ந்தார். ஒருவர் அதைக் கண்டதும் திடீரென்று தலையைத் திருப்பிக்கொண்டு போக அவர் தான் ஸம்வர்த்தர் என்று உணர்ந்து மருத்தர் பின் தொடர்ந்தார். தனிமையான இடம் சென்றதும் அரசன் அடிபணிய ஸம்வர்த்தர் அவர்மேல் துப்பி ஆபாஸம் செய்து அவரைப் பழித்தார். அரசன் மனம் கோணாதது கண்டு 'என்னை எப்படி உனக்குத்

தெரிந்தது' என்று கேட்க அரசன் நாரதர் கூறியதாகச் சொன்னான். அப்பொழுது அவர் "நாரதர் எங்கே இருக்கிறார்? என்று கேட்க, நாரதர் சொல்லியிருந்தபடி 'நாரதர் எனக்கு வழி காட்டிவிட்டு அக்னிப்பிரவேசம் செய்தார்' என்று சொல்லிவிட்டான். ஸம்வர்த்தருக்கு ஸந்தோஷம்வர, அவர் அரசன் காரியத்தை அறிந்து, தம்மைவிட்டு வேறு எவரையும் புரோஹிதராக்கிக் கொள்ளக்கூடாது என்று அரசனிடம் வாக்குப்பெற்று அவனுக்குப் புரோஹிதராக இசைந்தார்.

**வினா** 7.- மருத்தருக்கு ஏராளமாக தங்கம் எவ்வாறு கிடைத்தது?

**விடை.**- ஸம்வர்த்தர் புரோஹிதரானதும் மருத்தரைநோக்கி 'ஹிமாலயத்தில் பார்வதீ பரமேச்வராள் இருக்கும் ஸ்தானமாகிய (**கௌரீசங்கர்** என்ற) கொடு முடியில் முஞ்சவனம் என்ற பாகம் ஒன்று உண்டு. அங்கு சென்று பரமசிவத்தை அவர் திவ்ய நாமங்களால் துதி செய்தால் உனக்கு ஏராளமாகத் தங்கம் கிடைக்கும்' என்று சொன்னார். மருத்தர் அவ்வாறே செய்து யாகத்திற்காக ஏராளமாகத் தங்கக்கட்டிகளைக் கொண்டுவந்து குவித்துவிட்டார்.

**வினா** 8.- யாகம் தொடங்கிய காலத்தில் மருத்தருக்கு என்னென்ன கஷ்டங்கள் வந்து எவ்வாறு நீங்கின?

**விடை.**- மருத்தரின் யாகத்தைக் கெடுப்பதற்காக இந்திரன் அக்னியோடு பிரஹஸ்பதியை அனுப்பி அவரை புரோஹிதராக ஏற்படுத்திவிட்டு வரும்படியாக அக்னிக்குக் கட்டளையிட்டான். மருத்தர் இதற்கு இசையவில்லை. ஸம்வர்த்தர் தமது கோபத்தைக்காட்டி வந்த இருவர்களையும் துறத்திவிட்டார். பின்னர் இந்திரன் த்ருதிராஷ்டிரன் என்ற கந்தர்வனை அனுப்பி, 'பிரஹஸ்பதியை நீ புரோஹிதராக ஒப்புக்கொள்ளாவிடில் நீ இந்திரன் வஜ்ஜிராயுதத்திற்கு இறையாவாய்' என்று சொல்லும்படி ஏவினான். மருத்தர். இதையும் லக்ஷ்யம் செய்யவில்லை. உடனே மழை மேகங்களை ஏவி மருத்தர் யாகத்தை அழிக்கும்படி உத்தரவு செய்தான். மருத்தர் கொஞ்சம் பயந்து 'வீண் கஷ்டம் எதற்கு? உமது தபோமஹிமையால் இந்திரனை இந்த யாகத்திற்கு இழுத்துவிடும்' என்று வேண்டிக் கொள்ள அவ்வாறே ஸம்வர்த்தர் செய்து தபோமஹிமையால் இந்த யாகத்தை தவறாது முடித்து வைத்தார். இதில் செலவான தங்கக்கட்டிகளுக்குக் கணக்கே இல்லை.

**வினா** 9.- இவ்வாறு வியாஸர் தேற்றியதும் பகவான் எவ்வாறு தர்மபுத்ரர் மனம் நன்றாகத் தேறும்படி செய்தார்? மேல் என்ன நடந்தது?

**விடை.**- பகவான் தர்மபுத்ரரை நோக்கி, 'மனிதனுக்கு **ஆதி** (மனதைப் பற்றியது) **வியாதி** (வேஹத்தைப் பற்றியது) என்ற இருவிதக் கஷ்டங்கள் உண்டு. வியாதி வெளிப்படையானது. ஆகையால் அதை ஒருவாறு தடுக்கலாம். ஆதி உள் விஷயம். இதை மிகுந்த சாதுரியமாகத் தடுக்க வேண்டும். ஸுகம் ஸம்பாதிப்பதற்கு முன் அதற்காகப் பட்ட கஷ்டங்களை எண்ணி, ஸுககாலங்களில் அனாவசியமாக ஏற்படும் துக்கங்களிலிருந்து தெளியவேண்டும். இந்த ராஜ்யம் அடைவதற்கு முன் நீங்கள், பட்டகஷ்டங்கள் கொஞ்சமா? உமது வெளி விரோதிகளான

துரியோதனாதியரை யுத்தத்தில் நீக்கியாகிவிட்டது. இப்பொழுது இனி ஒரு யுத்தம் வந்திருக்கிறது. இது உமது மனதில் நடக்கவேண்டியது. ஆயுதங்களின் ஸஹாயமே இதற்கு வேண்டியதில்லை. உமது தம்பிமார்களின் ஸஹாயம் இதற்குப் பிரயோஜனமே இல்லை. நீரேதான் விஷயங்களை யோசனை செய்து இதில் ஜயம் பெறவேண்டும். இதில் தோற்றுப்போனால் பாரதயுத்தத்தில் ஜயம் பெற்றதுகூட பிரயோசனமில்லாமல் போகும். உலகைத் துறந்து மனதில் விஷயங்களை நாடுவதைவிட உலகிலிருந்துகொண்டே ஸந்மார்க்கத்தில் பழகலாம். விஷய ஆசை என்ற காமம் எப்பொழுதும் காணப்படும். அது உருமாறிக்கொண்டே இருக்கும். எவ்வளவு சுத்த மனதுடையவனுக்கும் இந்த ஆசைமறைவாக இருக்கும். மனது சுத்தமாக ஆக, உலக விஷய ஆசையும் அதிஸூக்ஷ்மமாகி விட, அது இருப்பதே தெரியாது. ஆகையால் இது மிகுந்த அபாயகரமானது. இந்தக் காமம் பெரியோர்களுக்கும் நான் பெருந்தன்மை உடையவன்' என்ற எண்ண ரூபமாக மறைந்து கிடக்கும். இதை நன்றாகக் கவனித்தால் இந்த ஸமயத்தில் நீர் ராஜ்யம் ஒப்புக்கொள்ளுவதே நலம், என்று எனக்குத் தோற்றுகிறது' என்றார். இதன்பின்பு ரிஷிகளும் ஸந்யாஸிகளும் தர்மபுத்ரரை யாக விஷயமாக முயற்சிக்கும்படி தூண்டினர்.

**வினா** 10.- இவ்வாறு தர்ம புத்ரர் தேறி வருகையில் பகவானும் அர்ச்சுனனும் என்ன செய்தார்கள்?

**விடை.**- யாகவிஷய ஏற்பாடுகள் தொடங்கி வருகையில் ஒரு நாள் பகவானும் அர்ச்சுனனும் மயஸபையில் புகுந்து ஸுகமாக ஏகாந்தத்தில் இருக்க, அர்ச்சுனன் பகவானை நோக்கி, 'யுத்த ஸமயத்தில் செய்த உபதேசங்கள் (கீதா சாஸ்திரம்) எனக்கு மறந்து போய் விட்டன. அவைகளை எனக்கு மறுபடி எடுத்துக் கூறும்' என்று கேட்டான். அர்ச்சுனன் அஜாக்ரதைக்காக பகவான் அவனைக் கடிந்து கொண்டு, தம்மால் முன் கூறியதுபோல விஸ்தாரமாகக் கூற முடியாது என்று கூறி அந்த உபதேசஸாரத்தை **அனுகீதா** ரூபமாகச் சொல்லத் தொடங்கினார்.

# அனு கீதை

**வினா** 11.- அனுகீதையின் ஸ்வரூபம் என்ன?

**விடை.**- பகவத் கீதையின் ஸாரமாகிய அனுகீதை 36 அத்யாயங்களை உடையது. (அசுவமேதபர்வம் 10-ம் அத்யாயம் முதல் 51-ம் முடிய உள்ளது.) இது இரண்டு ப்ராஹ்மணர்கள் ஸம்வாதம், ப்ராஹ்மண ஸ்திரீ புருஷ ஸம்வாதம், குரு சிஷ்ய ஸம்வாதம் ஆகிய மூன்று ஸம்வாதரூபமாக உள்ளது. புருஷன், குரு இவர்கள் பகவானே; ஸ்திரீ, சிஷ்யன் ஆகிய இவர்கள் பகவான் மனதே ஆகவே பகவான் தமது ஆத்மாவுக்கும் மனதுக்கும் நடந்த 'ஸம்வாதமாக வேதாந்த ரஹஸ்யத்தை இந்த அனுகீதையில் வெளியிட்டுத்தாம் முன்னர் சொல்லிய கீதையின் நோக்கம் இன்னது என்பதை வெளியிடுகிறார்.

**வினா** 12.- (1) அனுகீதையின் முதல் பாகமாகிய இரண்டு ப்ராஹ்மணர்களின் ஸம்வாதத்தின் சுருக்கம் என்ன?

**விடை.**- முதல் ப்ராஹ்மணர் தமக்கு உலக வாழ்க்கையில் ஏற்பட்ட ஸுக துக்காதிகளை எடுத்துரைத்துப் பின் வைராக்யம் உண்டாகத் தாம் நிர்குணப் பிரஹம் உபாஸனம் செய்த விதத்தை எடுத்து விஸ்தரித்தார். பின்னர் கொடியவர்கள் தமது பாப கர்மங்களுக்கேற்ப கீழான ஜன்மம் நரகம் முதலிய விடங்களில் கஷ்டப்பட்டு பாபம் க்ஷீணித்ததும் கிரமமாக மனிதஜன்மம் நோக்கிவருகிறார்கள். அதேமாதிரி நல்லவர்கள் தமது புண்யத்திற்கேற்ப மேலான ஜன்மம் ஸ்வர்க்கம் முதலிய இடங்களில் ஸுகப்பட்டுப் புண்யம் க்ஷீணித்ததும் மனித ஜன்மத்திற்கே கிரமமாக வந்து சேருகிறார்கள் என்றும் ஜீவாத்மா பாபபுண்ய கர்மங்களால் பொதியப்பட்டு கருவுட்புகுந்து ஜன்மங்கள் எடுக்கிறதென்றும், இவ்வாறு எடுத்துவர ஏற்கனவே கொடிய செயல்களால் பாபமும் அதனால் கஷ்டமும் வருதலால் அதை விட்டுவிட்ட ஆத்மா அனேக ஜன்மப் பழக்கத்தால் ஸந்மார்க்கத்தில் நிலைபெற்று அதனால் உண்டாகும் ஸுகங்களின் நிலையாமையைக்கண்டு அவைகளிலும் ஆசை நீங்கி, நல்ல விஷயங்களுக்கும் அப்பாற்படுங்கால் உலக விஷயங்களிலிருந்து முற்றிலும் விடுபட்டு பிரஹ்மமாகி உண்மைப் பொருளில் நிலைபெறுவன். இவனுக்கு உலகத்தில்காணப்படும் ஸகலவித துவந்துவங்களும் மனதில் படா. இவனே எல்லாவற்றையும் அடக்கி யாளும் திறனை அடைவான். இந்நிலையை அடைவதற்கு தேஹத்திற்கும் அப்பாற்பட்ட ஸ்குண ப்ரஹ்மத்தை நிஷ்டையில் ஆராதித்தறிந்து, பின்னர் நிர்குணப் ப்ரஹ்மத்தைக் காணவேண்டும். வெளியில் ஓடியாடும் மனதை அடக்கி தந்திரமாய் ஆத்ம முகமாகத் திருப்புவதே நிஷ்டை. இதில் சிரத்தையுடன் பழகினால் பரமபதம் ஒருவனுக்கு ஸித்திப்பது நிச்சியம்' என்பவைகளை விவரித்தார்.

**வினா** 13.- (2) ப்ராஹ்மண ஸ்திரீ புருஷஸம்வாதத்தின் சுருக்கம் என்ன?

**விடை.**- இதில் ப்ராஹ்மம் தேஹதத்வ விஷயங்கள் ஆகிய இவைகளை அநேக விதமாக எடுத்துக்கூறப்பட்டு அதற்கு ஸாதனமாகிய இந்திரிய நிரோதம் முதலியவற்றின் ஸ்வரூபம், அதை அடைந்தவனது மனோநிலை, அதை அடையும் விதம் எல்லாவற்றையும் விஸ்தாரமாகச் சொல்லப்பட்டிருக்கிறது.

**வினா** 14.- ப்ராஹ்மம் எவ்வாறு வர்ணிக்கப்பட்டிருக்கிறது?

**விடை.**- கர்ம மார்க்கங்களுக்கு அப்பாற்பட்டு மனோநிரோதம் முதலியவை களால் நோக்க ஒன்றோடும் ஸம்பந்தப்படாது ஒவ்வொருவர் தேஹத்துள்ளும் வெளியாவதே **பிரஹ்மம்**. இது எல்லா இந்திரியங்களுக்கும் அப்பாற்பட்டது. ஆயினும் இதிலிருந்தே ஸகல பிரபஞ்சங்களும் உண்டாகி, இதிலே தான் தரித்து நின்று, இதிலேதான் ஒடுங்குவது.

**வினா** 15.- தேஹ தத்வாதிகள் எவ்வாறு வர்ணிக்கப்பட்டன?

**விடை.**- தேஹ தத்வாதிகள் யாகரூபமாக வர்ணிக்கப்பட்டன.

10. **ஹோதாக்கள் யக்ஞம்**:-10. இந்திரியங்கள் ஹோதாக்கள். 10. விஷயங்கள் ஆஹூதிகள். 10. தேவதைகள் (திக்கு, வாயு, ஸூர்யன், பூமி, விஷ்ணு, இந்திரன், பிரஜாபதி, மித்ரன், இந்திரியாபி மானி தேவதைகள் அக்னிகள்).

இதனாலே விஷயானுபவ யாகம் நடக்கிறது.

7. **ஹோதாக்கள் யக்ஞம் :- ஞானேந்திரியம்** (5)

மனம்புத்தி ஹோதாக்கள் இவைகளுள் ஒன்றன் தொழிலை மற்றெவை களாலும் செய்ய முடியாது. இவைகளுக்கு மனதே ராஜன் எனத்தோற்றலாம். ஆனால் இந்திரியங்கள் அவைகளின் விஷயங்கள் ஆகிய இவைகளின் ஸஹாயமின்றி மனம் தொழிற் படாது.

5. **ஹோதாக்கள் யக்ஞம்**:- வாயுக்களே, ஹோதாக்கள், இவைகளும் முன்னவைகள்போல ஒன்று, மற்றவைகளை அடக்கியுள்ளதல்ல.

4. **ஹோதாக்கள் யக்ஞம்**:- கருவி, தொழில், கர்த்தா முக்தி ஆகிய நான்கும் ஹோதாக்கள். எல்லா இந்திரிய வியாபாரங்களை மனதால் அடக்கி ஆத்மா என்ற அக்னியில் ஆஹூதிசெய்தலே யோகாப்பியாஸம். இம்மாதிரி யாகாதிகள் ஒழுங்காகச் செய்யப்பட்டால் முடிவிலிருக்கும் முக்தி கைகூடும்.

**வினா** 16.- யாகங்களில் சிறந்த யாகம் யாது?

**விடை.**- அஹிம்ஸையே சிறந்த யாகம். உலகில் ஓர்வித ஹிம்ஸையு மில்லாது உயிர் வாழ்தலரிதாயினும் நம்மால் கூடிய வரையில் ஹிம்ஸையில் பழகாதிருக்க வேண்டும். வேத நம்பிக்கையாலோ அல்லது வேறு எவ்வித தர்மானுஷ்டானத்தாலோ ஹிம்ஸை அவசியம் செய்யும்படி நேரிட்டுவிட்டால் அப்பொழுதான் 'உலக வாழ்க்கையில் ஹிம்ஸையே இல்லாது நிலைக்க முடியாது' என்று எண்ணித் தேறுதல் அடைந்து மேல் அதிக ஹிம்ஸையில் பழகாது காலத்தைக் கழிக்க வேண்டும்.

**வினா** 17.- இந்திரிய நிரோதத்தின் ஸ்வரூபம் யாது?

**விடை.**- முன்காலத்தில் **அலர்க்கன்** என்ற ஒரு அரசனிருந்தான். அவன் உலகை எல்லாம் தனது புஜவலியால் ஜயித்துவிட்டு ஓர் மரத்தடியில் வந்து உட்கார்ந்தான். மனம் அடங்கிநிற்காதது கண்டு 'இந்த மனதின் சஞ்சலத்தால் அல்லவா நாம் இவ்வளவு கொடிய தொழில்களைச் செய்தோம். இதுவே நமக்கு முக்கிய விரோதி இதை அம்பால் குத்தி விடுகிறேன்' என்று கூறித் தன் அம்பை எடுத்தான். அதற்கு மனது என்னை உன்னால் குத்தவே முடியாது. வீணாக காயப்பட்டு வருந்துவாய். ஆதலால் உன் அம்புக்கு அகப்படுபவைகளைப்

பார்த்துக்கொள்' என்றது. உடனே அரசன் தன் கண்ணால் தான் ஸகலவித சஞ்சலங்களும் மனதிற்கு உண்டாகிறது. ஆதலால் கண்ணைக் குத்திவிட்டால் நலமாக இருக்கும் என்று எண்ணி அம்பைக் கையில் எடுத்தான். அப்பொழுது கண் என்னைக் குத்தினால் உனக்கு நோய் அதிகப்பட்டு கஷ்டம் உண்டாகுமே ஒழிய அதனால் மனம் அடங்காது ஜாக்ரதை' என்று எச்சரிக்கை செய்தது. இவ்வாறு ஒவ்வொரு இந்திரியங்களையும் குத்த அலர்க்கன் யத்தனிக்க அவைகளும் இவ்வாறே எச்சரிக்கை செய்தன. உடனே குத்துவதை நிறுத்திவிட்டு தபஸ் நிஷ்டை முதலியவைகளால் மனதை அடக்கி பரமபதம்பெற்றான். இதனால் இந்திரியவலி குறைந்தாலாவது கெட்டுவிட்டாலாவது அல்லது விஷயங்களோடு ஸம்பந்தப் படாமலிருந்தாலாவது மாத்திரம் நிரோதம் உண்டாகாது மனச்சஞ்சலமே அதிகரிக்கும் என்பதும், இந்திரியங்கள், விஷயங்கள் எவ்வாறிறுப்பினும் நல்லொழுக்கம் நிஷ்டை இவைகளால்தான் மனம் ஒடுங்கும் என்பதும் வெளியாகும்.

**வினா** 18.- மோக்ஷத்திற்கு விரோதிகள் எவை? இவைகளின் ஸ்வரூபம் என்ன?

**விடை.**- ஸந்தோஷம், காமம், மோஹம், ஆகிய இவைகளே மோக்ஷ விரோதிகள். இவைகள் ஒவ்வொன்றும் வேறு, இவ்விரண்டு ரூபமாகவும் காணப்படும். ஸந்தோஷம், திருப்தி, ஆனந்தக்களிப்பாகவும் ; காமம், கோபம், துவே ஷமாகவும் ; மோஹம், சோம்பல், தாம்ஸமாகவும்; காணப்படும். இவைகளுள் எல்லாவற்றையும் எளிதில் அடக்கிவிடலாம். காமத்தை (விஷய இச்சையை) அடக்குவது தான் மிகக்கஷ்டம். இது மனது எவ்வளவு சுத்தமாயும் உருமாறி ஒட்டிக் கொண்டிருக்கும். ஆதலால் எந்த ஸ்மயத்திலும் ஏமாந்து இதற்கு புத்திமான் இடம் கொடுத்துவிடவே கூடாது.

**வினா** 19.- முக்தி நிலையை அடைந்தவன் மனோவிருத்தி எவ்வாறிருக்கும்?

**விடை.**- முன்காலத்தில் ஜனகராஜன் ஸபையில் ஒரு பிராஹ்மணக் குற்றவாளி தண்டனைக்காக கொண்டுவரப்பட்டான். முடிவில் ஜனகர் அவனை நோக்கி, 'என் ராஜ்யத்துள் நீர் இருக்கக்கூடாது, சீக்கிரம் என் ராஜ்யம் கடந்துபோம்' என்று தண்டனைவிதித்தார். 'உமது ராஜ்யத்தின் எல்லை எது? சொன்னால் அதைத்தாண்டிப் போய் விடுகிறேன்' என்றான் பிராஹ்மணன். திடீரென்று யோசனையில் ஆழ்ந்து விட்டார் ஜனகர். கொஞ்சநாழிகை கழித்து விழித்துக் கொண்டு 'அநேகப் பிரஜைகள் நிறைந்த ராஜ்யம் என் கீழ் இருந்தும் இதில் என்னுடையது என்று ஒன்றுமில்லை. இப்படி இருப்பினும் இதன் முடிவில் பிரபஞ்சம் முழுவதும் எனதென்றே எனக்கு தோற்றுகின்றது. ஆகையால் நீர் உமது இஷ்டப்படி எங்கே வேண்டுமானாலும் இரும்' என்றார் ஜனகர்., 'உமக்கு இவ்வாறு படக்காரணம் யாது?' என்று பிராஹ்மணர் கேட்க, ஜனகர், 'என் ராஜ்யத்தில் எல்லாம் அழிக்கக்கூடிய வஸ்துக்களே என்னுடன் விடாது ஒட்டியிருப்பது ஒன்றும் இல்லை. இங்கு எனது என்பது ஒன்றும் கிடையாது. இவ்வாறு நான் விஷயங்களிலிருந்து பிரிந்ததும் பஞ்சபூதரூபமான பிரபஞ்சத்தால் என்னை அண்டித்தாக்க முடியாமற் போக அது என்னால் அடக்கப்பட்டது. ஆகவே பிரபஞ்சம் முழுவதும் எனதாகத்

தோற்றியது' என்றார். ஆதலால் எத்தொழிலைச் செய்தாலும் முக்தர்மனம் பரம் பொருளிலேயே ஊறிக்கொண்டிருக்கும். வெளிவிஷயங்களால் தாக்கப்படுங்கால் அவர்கள் மனம் உள்முகமாகி பரம் பொருளிலேயே தாங்கி நிற்கும்.

**வினா** 20.- பிரஹ்மஞானத்தின் ஸ்வரூபம் என்ன?

**விடை**.- முன்னர் ஜனகர் அனுபவம்போல பரம்பொருளை 'ஒன்றும் நீயல்லை, (உன்னை) அன்றி ஒன்றில்லை' என்று உள்ளபடி உணர்ந்து அதுவாக நிற்றலே பிரஹ்மஞானம்.

**வினா** 21.- -இந்தமாதிரி பிரஹ்மத்தை உணருவது எவ்வாறு?

**விடை**.- பிரஹ்ம ஸ்வரூபம் இத்தன்மையது என்ற அறிவே கீழ் அரணிக்கட்டை. ஆசார்யனே மேல் அரணிக்கட்டை, தபஸு செய்தல் ஞான சாஸ்திரத்தில் பழகுதலே கடைதல். இதிலிருந்து பிரஹ்ம உணர்ச்சி என்ற நெருப்பு உண்டாகும். [இம்மாதிரி பிராஹ்மண ஸ்திரீ உபதேசம் பெற்று தான் ஜீவாத்மா (க்ஷேத்ரஞ்ஞன்) என்ற பாவம் இழந்து, பிரபஞ்சத்தின் (க்ஷேத்ரத்தின்) உண்மை நிலையை உணர்ந்து க்ஷேத்ரஞ்ஞனுக்கு அப்பாற்பட்ட பொருளானாள்.]

**வினா** 22.-(3) குருசிஷ்ய ஸம்வாதத்தின் சுருக்கம் யாது?

**விடை**- முக்குணங்களின் ஸ்வரூபம், ஸ்ருஷ்டி தத்வங்கள், ஜனனமரண சக்ரம், வர்ணாசிரம தர்மம், முக்திநிலை முதலியவைகளை குரு சிஷ்யனுக்கு எடுத்து விஸ்தரிக்கிறார்.

**வினா** 23.- முக்குணங்களின் ஸ்வரூபமும் மாறுபாடுகளும் என்ன?

**விடை**.- ஸாத்விகம், ராஜஸம், தாமஸம் எனக்குணங்கள் மூன்று. இவைகளுக்கு முறையே வெள்ளை, சிவப்பு, கருப்பு வர்ணங்களாகும். சிரத்தை, தேஜஸ், பரிசுத்தம் ஆகிய இவைகளே ஸத்தவத்தின் லக்ஷணம், பரபரப்பு கர்மங்களை ஸரிவர நடத்தல், வ்யவஹாரத்தில் மூழ்கல் இவைகளே ராஜஸத்தின் லக்ஷணம், அக்ஞானம் தாமஸத்தின் லக்ஷணம். இது ஸகல பாபச்செயல்களிலும் காணப்படும். தாமஸத்திற்கு ஆளாவோர் தாழ்ந்த ஜன்மங்களில் உழன்று வருந்திப் பரிசுத்தமாவார். ராஜஸ குணத்திற்கு ஆளாவோர் அடிக்கடி மானிடராகி விஷய இன்பங்களையே தேடித்திரிந்து வருந்திவிருத்தியாவார்கள் . ஸாத்விகத்திற்கு ஆளாவோர் உள் நாட்டமுடைய மனம் உடையவர்களாகி, ஸ்வர்க்கம் அடைந்து ஸகலவித ஸுகங்களையும் அனுபவித்துத் தெளிவர். உலகில் ஸகல விஷயங்க ளிலும் இம்மூன்று குணங்களும் கலந்தேயிருப்பினும், இவைகளுள் ஒவ்வொரு காலத்தில் ஒவ்வொன்று ஓங்கிநிற்க மற்றவை அடங்கி நிற்கும். இம்மூன்று குணங்க ளுமே முறையே சூத்திரன், வைச்ய க்ஷத்ரியர்கள், பிராஹ்மணர்கள் இவர்களிடம் இருப்பதால் தான் இவர்கள் பாகு பாட்டிற்கு நான்கு வர்ணங்கள் (குணங்கள்.) என்று

பெயர். தர்மார்த்தகாமம், செயல் முதலிய எல்லா பிரபஞ்ச விஷயங்களும் இக்குணங்களால் மும்மூன்று பாகமாகப் பிரிந்து காணப்படும்.

**வினா** 24.- ஜனன மரண சக்கிரத்தின் விவரம் என்ன?

**விடை**.- புத்தியே இந்த சக்ரத்தின் பலம், மனமே இருசு, இந்திரியங்களே தாங்கு கழிகள், பஞ்ச பூதங்களே இதன் குடம், கிரஹமே இதன் சுற்றளவு, இராப்பகலே இதன் சுற்று, துவந்துவங்களே இதன் பட்டை, ஆணி, முதலிய பூட்டு பாகங்கள், இது மோஹ ஜலத்துள், சுற்றுவது. தபஸ் விருதம் இவைகளே இதிலிருந்து சிதறும் மண்கட்டிகள், மனக்கொதிப்பே சுற்றும் சக்தி, மனதின் வேகமே இதன் வேகம்.

**வினா** 25.- முக்தி விஷயத்தின் விவரம் என்ன?

**விடை**.- பரம்பொருள் இப்பிரபஞ்சத்தில் தாமரை இலைத் தண்ணீர்போல் தாக்கற்று இருக்கிறது; புத்திமான்கள் தமது ஞானத்தின் ஸஹாயத்தால் இதை அறிந்து பரமஸுகம் பெறுவர்; **எனது** என்ற எண்ணம் உண்டாவதே மரணம் முதலிய பந்தங்களுக்குக் காரணம். **எனதல்ல** என்ற எண்ணம் உண்டாவதே மோக்ஷத்திற்குக் காரணம்; என்று இம்மாதிரி ஆராய்ச்சியால் மனதை சுத்தப்படுத்தி ஸாத்வீகத்தைப் பின்பற்றி, அடையும்படியான ப்ரஹ்ம ஞானத்தால், மனது எதை ஊன்றி நிலைக்கிறதோ அதுவாகவே ஆகிவிடும், என்ற விதிப்படி, ஒருவன் ப்ரஹ்மமே ஆகிறான். இம்மாதிரி நிலையை அடைந்தவனுக்கு மேல் அடைய வேண்டியது ஒன்றுமில்லை.

**வினா** 26.- இம்மாதிரி அனுகீதை கூறி முடிந்ததும் பகவான் என்ன செய்தார்?

**விடை**.- அர்ச்சுனன், தர்மபுத்ரர் முதலியோரிடம் உத்தரவு பெற்றுக்கொண்டு ஸுபத்ரையையும் அழைத்துக் கொண்டு துவாரகை நோக்கிப் புறப்பட்டார்.

**வினா** 27.- போகும் வழியில் பகவான் யாருக்கு யாது காரணத்தால் எவ்வாறு அனுக்கிரஹிக்கும்படி நேர்ந்தது?

**விடை**.- போகும் வழியில் **உத்தங்கர்** என்ற ரிஷியை பகவான் ஸந்தித்தார். அவர் மிகுந்த ஆவலுடன், 'பாண்டவர்களுக்கும் துரியோதனாதியர்களுக்கும் ஸமாதானம் செய்து வைத்தாய் விட்டதா'? என்று கேட்டார். பகவான் நடந்ததைக் கூற உத்தங்கருக்கு மிகுந்த கோபம் வந்துவிட்டது. பகவானைச் சபிக்க யத்தனித்தார். அப்பொழுது பகவான் விநயமாக 'நடக்கவேண்டியதை யாரால் தடுக்க முடியும்' என்று கூறித் தமது உண்மை உருவை அவருக்கு வர்ணித்தார். உத்தங்கருக்குக் கோபம் தணிந்ததும், அவர் வேண்டுகோளின்படி பகவான் அவருக்கு விச்வரூப தர்சனங் கொடுத்து அனுக்ரஹித்தார்.

**வினா** 28.- உத்தங்கருக்கு ஏன் இவ்வளவு சிறப்பு ஏற்பட்டது?

.

**விடை.-** இவர் ஓர் பெரிய மஹான். ஆதியில் குருகுலவாஸம் செய்யுங்கால் இவர் அக்னியை மிகுந்த சிரத்தையோடு ஆராதித்து வந்தார். இவர் குரு மற்றவர்களை எல்லாம் எளிதில் விடைகொடுத்து காலம் வந்ததும் அனுப்பிவிட்டார். இவர் மேலிருந்த ப்ரீதியால் இவருக்கு மாத்திரம் உத்தரவு கொடுக்கவில்லை. குருகுலத்திலேயே வயது முதிருகிறவரையில் நாள் போவது தெரியாது இவர் குரு சிச்ரூஷை செய்துவந்தார். ஒருநாள் விரகு சுமந்து வந்து போடுகையில் இவர் தலை மயிர் விரகுகட்டையில் சிக்கி வேறோடு பெயர்ந்தது. இவர் தேஹம் தளர்ந்து போயிருக்தமையால் இந்த நோய் பொருக்கமாட்டது இவர் கண்ணீர் வடித்தார். இதை இவர் குருவின் பெண் தனது கையால் ஏந்த, சூடு பொருக்கமாட்டாது கீழேவிட்டு விட்டாள். இதைக்கண்ட குரு சிஷ்யன்மனோநிலையை அறிந்து கிருஹஸ்தனாக உத்தரவளித்து அவனுக்கு யௌனம் வரும்படி செய்து தன் பெண்ணயும் விவாஹம் செய்து கொடுத்தார். இந்த குருசிச்ரூஷா மஹவத்வமே இவருக்கு விச்வரூப தர்சனம் கிடைக்கும்படி செய்தது.

**வினா** 29.- இவருக்கு விவாஹம் ஆனதும் யாது காரணத்தால் என்ன ஆபத்துவந்து எவ்வாறு நீங்கிற்று?

**விடை-** விவாஹமானதும், உத்தங்கர் குருவுக்கு தக்ஷணை கொடுக்க யத்தனித்தார். இதை குரு எவ்வளவோ தடுத்தும் முடியாமறபோக தன் பெண் சாதிக்கு வேண்டியதைக் கொடுத்துவிடும்படி அவர் ஏற்பாடு செய்தார். குருபத்னி ஸௌதாஸராஜன் பெண்சாதி காதில் அணிந்திருக்கும் நாகரத்ன ஓலை தனக்கு வேண்டுமென்று கேட்க, அதற்கு இசைந்து உத்தங்கர் காட்டில் வஸிஷ்ட சாபத்தால் மனிதனைக் கொன்று தின்னும் ஸௌதாஸரிடம் வந்து தன் காரியத்தைச் சொன் னார். அவர் உத்தங்கரை கொல்லயத்தனித்தார். குரு தக்ஷனை கொடுத்துவிட்டு வருவதாகக்கூற ஸௌதாஸரிடம் ஓர் அடையாளம் பெற்று அவர் மனைவி யிடமிருந்து உத்தங்கர் ஓலையைப் பெற்றுக்கொண்டார். அவள் அதைக்கீழே வைக்க வேகூடாது என்று எச்சரிக்கை செய்தாள். இதை வாங்கிக்கொண்டு அரசனிடம் வர அதற்குள் ராக்ஷஸ அவஸரம்மாறிய அரசன் தன்னிடம் வரவேண்டியதில்லை என்றார். போகும் வழியில் பசிதீர்க்க வில்வக்காய்பறிக்க உத்தங்கர் மரம் ஏறிய ஸமயத்தில் ஓலை கீழேவிழ ஓர் பாம்பு அதை எடுத்துக் கொண்டு புற்றுள் மறைந்தது. உத்தங்கர் புற்றை மூன்று நாள் வெட்ட ஒன்றும் அதில் காணப் படவில்லை. பின்னர் இந்திரன் ஸஹாயத்தால் பாதாளலோகம் சென்று அங்கு ஒன்றும் செய்ய முடியாமல் தத்தளித்தார். அப்பொழுது இவர் ஆராதித்த அக்னி குதிரை ரூபமாக வந்து தன் காதில் ஊதும்படி வேண்ட உத்தங்கர் அவ்வாறே செய்தார். உடனே நாகலோகம் எல்லாம் புகைசூழ்ந்து கொள்ள பொருக்கமாட்டாது நாகர்கள் உத்தங்கருக்கு ஓலைகளைக் கொண்டுவந்து கொடுத்தனர். அவர் தமது குருபத்னியிடம் அதைக்கொண்டு வந்து சேர்த்தார். **பெரியோர் மனப்பூர்வமாக வேண்டாம் என்பதை வலிய செய்யப் புகுந்தால் அது நல்ல தாயினும் மிகுந்த கஷ்டத்தை உண்டாக்கும் என்பது** இக்கதையால் விளங்கும்.

**வினா** 30.- துவாரகையை அடைந்ததும் பகவான் என்ன செய்தார்? மேல் என்ன நடந்தது?

**விடை**.- பகவான் துவாரகை சென்றதும் அங்கிருந்தவர்களுக்கு குருக்ஷேத்ர யுத்தத்தை சுருக்கமாகவும் ஸங்கதிகள் ஒன்றையும் விடாமலும் எடுத்துக்கூறி, அபிமன்யூவின் வதத்தைமாத்திரம் கூறாதுவிட்டார், இதைக்கண்ட ஸுபத்ரை மிகுந்த துக்கத்துடன் அதையும் சொல்லும்படி பகவானை வேண்ட, பகவான் அதைமாத்திரம் விஸ்தாரமாக எடுத்துறைத்தார். அதைக்கேட்டு மிகுந்த துக்கமடைந்து பகவான் உறவினர்கள் எல்லோரும் ஸ்நானம் செய்து அபிமன்யூவுக்கு ஈமக்கடன்களை செய்து முடித்தார்கள்.

**வினா** 31.- இங்கு இப்படி இருக்கையில் ஹஸ்த்தினாபுரியில் யாக விஷயமாக என்ன ஏற்பாடுகள் நடந்தன?

**விடை**.- பாண்டவர்கள் ஐவரும் வியாஸர் சொல்லியபடி மருத்தரது யாகத்தில் மிஞ்சி நின்றபொன்னை எடுத்துவர யத்தனம் செய்தனர். திருதிராஷ்டிரனிடமிருந்து அனுமதி பெற்று யுயுத்ஸுவை ராஜ்யத்தைப் பார்த்து வரும்படி ஏற்பாடு செய்துவிட்டு நல்லவேளை பார்த்து ப்ராஹ்மணர்களால் ஆசீர்வதிக்கப்பட்டு ஹிமய மலை நோக்கிப் பாண்டவர்கள் புறப்பட்டார்கள். அங்கு சென்று பரமசிவத்தை ஆராதித்து அங்கிருந்த பொன்னை வெட்டிப் பெட்டிகளில் வைத்து எடுத்துக்கொண்டு மெதுவாக ஊர் நோக்கி அவர்கள் புறப்பட்டார்கள்.

**வினா** 32.- இவர்கள் வெளியே போயிருக்கும் ஸமயத்தில் ஹஸ்தினாபுரியில் என்ன அற்புதம் நடந்தது?

**விடை**.- இவர் வேளியே போன ஸமயத்தில் பகவான் துவாரகையிலிருந்து ஹஸ்தினாபுரி வந்து சேர்ந்தார். அந்த ஸமயத்தில் உத்தரை பிள்ளை பெற்றாள். அசுவத்தாமனது பாண்டவப் பூண்டருக்கும் பிரஹ்மாஸ்திரம் தாக்கக் குழந்தை செயலற்றுக் கிடந்தது. இதைக்கண்டு குந்தி, ஸுபத்ரை, உத்தரை எல்லோரும் துக்கித்து பகவானிடம் கூற அவர் பிள்ளை அருகில் வந்து தமது குண விசேடங்களை முன்னிட்டுச் சபதம் செய்து முடிவில் 'நான் நித்யப்ரஹ்மசாரியாக இருப்பது உண்மையாகில் இக்குழந்தை உடனே உயிர் பெற்று எழட்டும்', என்று குழந்தையைத்தொட அது உயிர்பெற்றது. வம்சம் முற்றிலும் அற்றுப்போன ஸமயத்தில் மருந்து போல அபூர்வமாகப் பிறந்த இப்பிள்ளைக்கு பகவான் **பரீக்ஷித்து** என்று பெயரிட்டு அழைத்தார்.

**வினா** 33.- இங்கு இப்படியானதும் யாகம் எவ்வாறு தொடங்கப்பட்டது?

**விடை**.- பாண்டவர்கள் வருவதைக் கேள்விப்பட்டு பகவான் எதிர்கொண்டு போய் அவர்களை ஹஸ்தினாபுரிக்கு அழைத்து வந்தார். வியாஸர் யாகத்திரவ்யங்களை சேர்த்து ஒழுங்குப்படுத்த அனுமதி கொடுக்க பகவான் உத்தரவின் பேரில்

யாகக் குதிரையை அலங்காராதிகள் செய்து லோக ஸஞ்சாரம் செய்து வரவிட்டு அர்ச்சுனனை அதைக் காப்பாற்ற விடுத்தார். பீமனையும் நகுலனையும் ராஜ்யத்தைப் பார்த்து வரும்படியாகவும், ஸஹாதேவனை யாகத்திற்கு வருபவர்களை ஆராதிக்கும் படியாகவும் ஏற்பாடு செய்து தர்மபுத்ரர் யாகதீக்ஷிதராக உட்கார்ந்தார்.

**வினா** 34.- போகும் வழியில் அர்ச்சுனன் செய்த யுத்தங்களின் விவரம் என்ன?

**விடை.**- வழியில் அநேக சிற்றரசர்களை ஜயித்துக்கொண்டு திரிகர்த்ததேசம் வர அங்கு விளைந்த பெரும் போரில் அவன் திரிகர்த்தர்களை ஜயித்தான். பின்னர் நரகாஸுரன் பேரனாகிய வச்ரதத்தனை மிகுந்த கஷ்டத்தின் பேரில் ஜயித்தான். பின்பு ஸிந்துதேசம் வந்து அங்கு நடந்த யுத்தத்தில் மிகுந்த சிரமம் அடைந்து கோபாவேசத்தால் யுத்தம் செய்து வருகையில், அவன் தங்கையாகிய துச்சலை அவள் பேரனை எடுத்துவந்து, அரச்சுனன் வரவைக் கேள்விப்பட்டுத் தன் பிள்ளை இறந்து விட்டான் என்றும் அவன் பிள்ளையே அந்தக் குழந்தை என்றும் தன் நாயகன் செய்த பெரும் பிழைகளை மறந்து இந்தப்பேரனை ஆதரிக்கவேண்டும் என்றும் கூறி யுத்தத்தை நிறுத்தும்படி வேண்டினாள். இவ்வாறு யுத்தங்கள் செய்து வருகையில் 'எவர்களையும் கொல்லாது வசப்படுத்தி யாகத்திற்கு அழைத்து விட்டுவா, குருக்ஷேத்ரயுத்தத்தில் செய்த கொலைத் தொழிலே போதும்' என்று தர்மபுத்ரர் கொடுத்த உத்தரவை மறவாதவனாய் அர்ச்சுனன் நடந்துவந்தான்.

**வினா** 35.- இப்படி ஜயம் பெற்றுவந்த அர்ச்சுனனுக்கு வழியில் யாரால் என்ன ஆபத்து வந்தது? எவ்வாறு நீங்கிற்று?

**விடை.**- இவ்வாறு யுத்தம் நடத்திக்கொண்டு அர்ச்சுனன் மணிபுரி வந்தான். அங்கு தனக்கும் பாண்டியராஜன் பெண் சித்திராங்கதைக்கும் பிறந்த **பப்ருவாஹ னன்** அரசாண்டு கொண்டிருந்தான். அவன் தன் தகப்பனாரை மரியாதையாக எதிர் கொண்டு அழைக்க அவன் யுத்தம் செய்தபின்னர் ஆகட்டும் என, அங்கு அர்ச்சுனன் பெண்சாதியான நாககன்னிகை உலுபிவந்து இவர்களைச் சண்டையிடும்படி தூண்டி விட்டனள். நடந்த சண்டையில் முடிவில் அர்ச்சுனன் பப்ருவாஹனன் பாணத்தால் அடிபட்டு மூர்ச்சைபோய் செயலற்று விழுந்து விட்டான். இதைக் கேள்விப்பட்டு சித்ராங்கதை ஓடோடியும் வந்து புருஷன் தேகத்தின் மேல் விழுந்து அழ பப்ருவாஹனனும் மிகுந்த துக்கம் அடைந்து இறக்கத் தயாரானான். அந்த ஸமயத்தில் உலுபி ஓர் நாகரத்ன மூலமாக அரச்சுனனை எழுப்பி எல்லோருக்கும் ஆனந்தத்தை உண்டாக்கினாள்.

**வினா** 36.- உலுபிதன் நாயகனுக்கு இந்த ஆபத்தை உண்டாக்கிப் பின்னர் தீர்ப்பானேன்?

**விடை.**- சிகண்டியை முன்னே வைத்துக்கொண்டு பின்னே இருந்து அர்ச்சுனன் பீஷ்மரை அடித்துத் தள்ளினதும், வஸுக்கள் கங்கையில் ஸ்நானம் செய்யவர, அர்ச்சுனன் செய்த அதர்மயுத்தத்தைப் பற்றிக் கூறி அவனைச் சபிக்கயத் தனித்தனர். கங்கையும் இதற்கு இசைந்தாள். இதை நான் அறிந்து என் தகப்பனுக்குக் கூற அவர் வஸுக்களை அடுத்து அவர்களுக்கு ஸந்தோஷம் வரும்படி செய்தார்.

அப்பொழுது வஸுக்கள் 'நாங்கள் கொடுக்க எண்ணிய சாபத்தைக் கொடுக்க வில்லை. ஆயினும், மணிபுரி அரசனும் அர்ச்சுனன் பிள்ளையு மான பப்ருவாஹனனால் அர்ச்சுனன் அடிபட்டு விழுந்தால் நாங்கள் கொடுக்க எண்ணிய சாபத்தின் கொடுமை நீங்கும்' என்றார்கள். இதை அறிந்து உலுபி இவ்வாறு சண்டை மூட்டி அர்ச்சுனனைப் பிழைப்பித்தாள்.

**வினா** 37.- இதன்பின்பு குதிரை எங்கெங்கு சென்றது?

**விடை.**- தெற்கேபோன குதிரை மேற்கு ஓரமாகத் திரும்பி விட்டது. வழியில் அநேக காட்டு அரசர்களை வென்று துவாரகை வர யாதவர்கள் அர்ச்சுனனுக்குத் தகுந்த மரியாதைகள் செய்தனர். பின்னர் அர்ச்சுனன் காந்தாரம் தேசம்போக அங்கு சகுனியின் பேரன் எதிர்த்து யுத்தம் செய்தான். மிகுந்த கஷ்டத்தின் பேரில் அவனை அர்ச்சுனன் தோற்கடித்தான். இவ்வாறு எல்லோரையும் தர்மபுத்திரர் உத்தரவுப்படி யாகத்திற்கு விநயமாக அழைத்து விட்டு ஹஸ்த்தினாபுரிவந்து சேர்ந்தான் அர்ச்சுனன்.

**வினா** 38.- யாக வைபவத்தின் விவரம் என்ன?

**விடை.**- இந்த யாகத்தில் எல்லாவித தானங்களும் சிறப்பாக நடந்தேறின. அநேக யூபஸ்தம்பங்கள் நடப்பட்டன. பொன்னால் செய்த செங்கற்களால் கருடசயனம் (கருடன் போன்றவேதி) உண்டாக்கப்பட்டது. யாகக்குதிரை உள்பட 300 பிராணிகள் யூபஸ்தம்பங்களில் கட்டப்பபட்டன. சாஸ்திரத்தில் கூறிய தைப்போல மூன்று மடங்கு தக்ஷிணை தர்மபுத்திரர் கொடுத்தார். கந்தர்வர்கள் தமது கானசக்தியையும், வித்வான்கள் தமதுவித்வத்தையும் காட்டி வைதிக கர்மங்களில் லாத ஸமயத்தில் ஸபையோர்களை திருப்திப் படுத்தினர். இதில் தருமபுத்திரர் ப்ராஹ்மணர்களுக்குத் தமது ராஜ்யம் முழுவதையும் தானம் கொடுத்துப் பின்னர் வியாஸர் கூறியபடி ஏராளமாகப் பொன் கொடுத்து அதை விலைக்கு வாங்கினார். இவ்வாறு சிறந்த தானங்களுடன் யாகம் முடிவு பெற வந்தவர்களெல்லோரும் தமது இருப்பிடம் சென்றனர்.

**வினா** 39.- இந்த யாக முடிவில் என்ன அதிசயம் நடந்தது?

**விடை.**- யாகம் முடிந்ததும் ஓர் கீரிப்பிள்ளை யாகசாலைக்கு வந்தது. அதின் பாதிதேஹம் பொன்னிறமாக இருந்தது. அதுவந்ததும் அந்த சாலை முழுவதும் புரண்டு எழுந்து பிராஹ்மணர்களை நோக்கி 'இந்தயாகம் மிகச்சிறந்ததல்ல. ஓர் சிறந்தயாகம் நடக்க, அந்த தேஷத்தின் மேல் நான் புரண்ட ஸமயத்தில் என் தேஹத்தின் ஒருபாதி பொன் நிறமானது. அது முதல் நடந்த பாகங்களுக்கு எல்லாம் சென்று இவ்வாறு புரண்டு வருகிறேன். மறுபாதி பொன் நிறமாகவில்லை. ஆதலால் இது சிறந்த தல்ல' என்றது.

**வினா** 40.- கீரிப்பிள்ளை எங்கு புறண்டதால் அதன் ஓர் பாதி பொன் நிறமானது?

**விடை.**- குருக்ஷேத்திரத்தில் ஓர் பிராஹ்மணர் உஞ்ச விருத்தியை பின்பற்றி னவராக இருந்தார். ஓர் மாஸம் சில நாள் வரையில் அவருக்கு ஒன்றும் அகப்படாமல் போக இவரும் இவர் குடும்பமும் பட்டினிகிடக்கும்படி நேர்ந்தது. கொஞ்ச நாள் பசியால் வருந்துகையில் ஒருநாள் கொஞ்சம் தான்யம் அகப்பட அதை அவர் கொண்டு வந்தார். அவர் பெண்சாதி அதை மாவாக்கி நான்கு பங்காகப் பிரித்து ஒன்று தன் புருஷனுக்கும் ஒன்று தன் பிள்ளைக்கும், ஒன்று தன் நாட்டுப் பெண்ணுக்கும். ஒன்று தனக்குமாக வைக்க, நால்வரும் புஜிக்க உட்கார்ந்தனர். இந்த ஸமயத்தில் ஓர் அதிதி மிகப்பசியோடுவர அவருக்கு பிராஹ்மணர் தமது பாகத்தைக்கொடுத்தார். அவர் தனக்கு அது போதாது என்றும், கொஞ்சம் உண்டதால் பசி அதிகரித்து விட்ட தென்றும் கூற, எவ்வளவு தடுத்தும் கேட்காது, 'கிரஹஸ்தாசிரமத்தில் யஜமானன் செய்யும் தர்மத்தை அவனைச் சேர்ந்தவர்கள் எல்லோரும் ஸஹாயம் செய்து பூர்த்தி செய்ய வேண்டும்' என்று நியாயம் கூறி முறையே மற்றவர்கள் தமது பாகங்களை அதிதிக்குக் கொடுத்து விட்டனர். அதிதி உண்டு திருப்தியாகி அவர்கள் கொடையைப் புகழ்ந்து அவர்களை ஸ்வர்க்கம் சேர்த்தனர். அப்பொழுது கீழேவிழுந்த மிச்ச மாவில் புரள கீரியின் தேஹம் பாதி பொன் நிறமானது.

**வினா** 41.- இந்த கதையின் கருத்து என்ன?

**விடை.**- 'யாகமே மிகச்சிறந்த காமம் என்று எண்ணி விடக்கூடாது. கொடை முதலிய தபஸுகளால் அநேகமஹான்ஸ்வர்க்கம் அடைந்திருக்கின்றனர். ஆதலால், அஹிம்ஸை, திருப்தி, நன்னடக்கை, கபடமின்மை, விருதங்கள், மனோநிரோதம், ள த்யம், கொடை ஆகிய இவைகள் யாகத்தைப் போன்ற சிறந்தவைகள்,' என்பதே இக்கதையால் நாம் தெரிந்து கொள்ள வேண்டும்.

**வினா** 42.- இதன் பின்னர் வைசம்பா.பனர் எந்த விஷயத்தை எடுத்து விஸ்தரித்தார்?

**விடை.**- அஹிம்ஸாயாகம் (உபரிசரவஸு கதையை பார்க்க) தபஸின் சிறப்பு இவைகளை முதலில் கூறினார். பின்னர் அகஸ்தியர் தான் யவித்துக்களை வைத்துக் கொண்டு அஹிம்ஸாயாகம் செய்து மழை முதலியவைகளை வர வழைத்து உலகம் செழிக்கப் பண்ணினதைக் கூறி, யுதிஷ்டிரர் அசுவமேத யாகத்தில் வந்த கீரிப்பிள்ளை ஜமதக்னி சாபத்தால் கஷ்டப்பட்ட **கோபன்** என்ற அஸுரன் என்றும், அவனுக்கு தர்மபுத்ரர் யாகத்தை தூஷிக்குங்கால் சாபம் நீங்கும் என்றும் அவர் அனுக்கிரஹித்தார் என்றும், அதனால் கீரிப்பிள்ளை அவ்வாறு செய்தது என்றும் எடுத்துக்கூறினார்.

# 15. ஆசிரமவாஸிக பர்வம்

***இ**னியே தெனக்குனருள் வருமோ வெனக்கருதி*

*யேங்குதே நெஞ்ச மையோ!*
*இன்றைக் கிருந்தாரை நாளைக் கிருப்பரென்*
*றெண்ணவோ திடமில் லையே;*
*அநியாய மாயிந்த வுடலைநா னென்றுவரு*
*மந்தகற் காளாக வோ?*
*வாடித் திருந்துநான் கற்றதும் கேட்டது*
*மவலமாய்ப் போத னன்றோ?*
*கனியேனும் வறியசெங் காயேனு முதிர்சருகு*
*கந்தமூ லங்க ளேனுங்*
*கனல்வாதை வந்தெய்தி னள்ளிப் புசித்துநான்*
*கண்மூடி மௌனி யாகித்*
*தனியே யிருப்பதற் கேண்ணினே னெண்ணமிது*
*ஸாமிநீ யறியாத தோ!*
*சர்வபரி பூரண வகண்டதத் துவமான*
*சச்சிதா னந்த சிவமே!*

**வினா** 1.- அசுவமேத யாகம் முடிந்ததும் பாண்டவர்கள் எவ்வாறு நடந்து கொண்டார்கள்?

**விடை.**- அசுவமேதயாகம் முடிந்ததும் எல்லா விஷயங்களிலும் திருதிராஷ்டி ரரோடு முதலில் கலந்து யோசித்தே தருமபுத்திரர் ராஜ்யகார்யத்தை நடத்திவந்தார். பீமனைத் தவிர மற்றைய பாண்டவர்கள் திருதிராஷ்டிரர் மனங்கோணாது நடந்து வந்தனர். ஆனால் பீமனுக்கு மாத்திரம் திருதிராஷ்டிரனால் ஒப்புக்கொள்ளப்பட்டு துரியோதனன் செய்த அநீதிகள் ஞாபகம் அடிக்கடிவர, அவன் மனம் வருந்தியது. திருதிராஷ்டிரனிடம் இவன் மாத்திரம் தான் ஸரிவர நடந்து கொள்ளவில்லை.

**வினா** 2.- இது எவ்வாறு திருதிராஷ்டிரருக்கு தெரியவந்தது?

**விடை.**- ஒருநாள் பீமன் திருதிராஷ்டிரரைக் கண்டதும் பழைய கொடுமைகளை எண்ணிக்கொண்டு மனக்கொதிப்புடன் தான் பாரதயுத்தத்தில் கொடிய துரியோதனாதி யரைக் கொன்று சாய்த்ததை எடுத்து விஸ்தரித்துப் பாராட்டினான். இதைக் கேட்டதும் திருதிராஷ்டிரர் மிக வருத்தப்பட்டார். காந்தாரியோ தனது ஞானத்தால் கால கதியை உணர்ந்தவளாய் அவ்வளவு வருந்தவில்லை.

**வினா** 3.- இவ்வாறிருக்கையில் திருதிராஷ்டிரர் தமது விஷயத்தில் என்ன தீர்மானம் செய்தார்? இது எவ்வாறு முடிவு பெற்றது?

**விடை.**- இவ்வாறு பீமன்மேல் கோபங்கொள்ளாது 15-வருஷம் இருந்தபின்பு, துரியோ தனனால் வந்த கேட்டை எண்ணத்துக்கித்து, தமக்கு வயஸு வந்து விட்டபடியால் காட்டில் சென்றுவிதிப்படி தபஸு தேஹத்தை விடுவதே நலம் என்று தீர்மானித்து இதை தர்மபுத்திரரிடம் தொவித்தார். தருமபுத்திரருக்கு இது மிகுந்த

துக்கத்தை விளைவிக்க வியாஸர் தருமபுத்திரரைத் தேற்றி திருதிராஷ்டிரருக்கு அனுமதி கொடுக்கும்படி செய்தார்.

**வினா** 4.- தருமபுத்திரரிடம் அனுமதி பெற்றதும் திருதிராஷ்டிரர் என்ன செய்தார்?

**விடை.**- அனுமதி பெற்றதும் தருமபுத்திரரை அழைத்து ராஜ்ய தந்திரங்களை எல்லாம் அவருக்கு எடுத்துரைத்து அநேகவிதத்தில் அவருக்கு புத்திமதிகள் கூறினார். பின்னர் ஹஸ்தினாபுரவாஸிகளை ஸபை சேர்த்து அவர்கள் முன்னிலையில் தன்னாலும் தன் பிள்ளைகளாலும் ராஜ்யத்திற்கு உண்டான கேட்டை எடுத்துக்கூறி தன்னை மன்னித்து ஸந்தோஷமாய் வானப்பிரஸ்தனாகிக் காடு செல்லத் தனக்கு அனுமதி கொடுக்கவேண்டுமென்று கேட்டார். அப்பொழுது ஜனங்களுடைய அபிப்பிராயங்களை அறிந்த பிராஹ்மணர் ஒருவர் எழுந்து 'துரியோதனன் ஆண்டகாலத்திலும் எங்களுக்கு ஓர் கேடும்வரவில்லை. ராஜ்யம் என்றும் செழிப்பாகவே இருந்தது. துரியோதனன் பாண்டவர்களோடு இருந்து ஸுகமாக வாழக் கொடுத்து வைக்கவில்லை. எல்லாம் காலபலம். இதனால் தான் நீரும் துரியோதனாதியரை அடக்கியாளச் சக்தியற்றவரானீர். இந்த விஷயத்தில் உம்மிடம் எங்களுக்கு யாதொரு மனஸ்தாபமும் இல்லை. எங்களுக்கு ராஜனாக நீர் விட்டுப்போகும் தருமபுத்திரர் சிறப்பை நாங்கள் எடுத்துக்கூறுவது அனாவசியம். ஆதலால் நீர் செய்ய வேண்டியவை எல்லாம் செய்து முடித்தவரானீர். இப்பொழுது நீர் வனம்சென்று வானப்பிரஸ்தராகி பரலோக ஸாதனங்களை ஸம்பாதிக்கலாம்' என்று சொல்லி ஜனங்களது அனுமதியை வெளிப்படுத்தினார்.

**வினா** 5.- ஜனங்களிடம் அனுமதி பெற்றதும் திருதிராஷ்டிரர் வனம் போவதற்கு முன் என்ன செய்தார்? அவர் உலகப் பற்றை ஒழிக்கும்படி என்ன நடந்தது?

**விடை.**- வனம் போவதற்கு முன் குருக்ஷேத்ரயுத்தத்தில் இறந்த பீஷ்மர் துரோணர் முதலியோருக்கும் தன் பிள்ளைகள் முதலியோருக்கும் சிராத்தங்கள் செய்துவிட வேண்டும் என்று தோன்ற திருதிராஷ்டிரர் இந்த விஷயத்தில் தரும புத்திரரிடம் அனுமதி பெற்றுவரும்படி விதுரரை அனுப்பினார். விதுரர் பாண்டவர்களிடம் அனுமதி கேட்க பீமனைத்தவிற எல்லாப் பாண்டவர்களும் தயங்காது அனுமதி கொடுத்தனர். பீமன் மாத்திரம் 'கொடிய துரியோதனாதியருக்கு சிராத்தமே வேண்டாம். பீஷ்மாதிகளுக்குநாமே சிராத்தம் செய்துவிடுவோம். இவரென்னவேறே சிராத்தம் செய்யவேண்டியிருக்கின்றது' என்றுகூறி முதலில் அனுமதி கொடுக்கவில்லை. பின்னர் அர்ச்சுனன் காலத்தின் கொடுமையை எடுத்துக்கூறி 'நாம் அவரிடம் நயந்துபோக, அவர் இப்பொழுது நம்மிடம் நயந்து வருகிறார். இப்பொழுது உத்தரவளிக்காதிருப்பது மிகக்கொடுமையாகும்' என்று சொல்லி பீமனை ஸமாதானப்படுத்தினான். விதுரர் பாண்டவர்கள் அனுமதி பெற்று திருதிராஷ்டிரரிடம் சென்று நடந்தவைகளை ஒளிக்காது கூறி பீமனுக்கு அடிக்கடி பழைய கஷ்டங்கள் ஞாபகம் வருவதால் அவன் வேற கொண்டவன்போல நடக்கிறான். அவன் வார்த்தையைக் கவனிக்கவே கூடாதென்று திருதிராஷ்டியனைத்

தேற்றிசிராத்தம் நடத்த ஏற்பாடு செய்தார். திருதிராஷ்டிர கோபங்கொள்ளாது சிரார்தத்தை நடத்தி ராஜ்ய விஷயங்களில் பறறொழிந்து வனம் செல்லத் தயாரானார்.

**வினா** 6.- திருதிராஷ்டிரர் வனம் சென்ற தெவ்வாறு? அப்பொழுது நடந்த விஷயங்கள் என்ன?

**விடை**.- குறிப்பிட்டிருந்தகாலம் வந்ததும் திருதிராஷ்டிரர், தமது அக்னிகளை ப்ராஹ்மணர்கள் கொண்டு முன்னே போக கண்ணில் பட்டங்கட்டி மறைத்துக் கொண்டிருந்த காந்தாரி குந்தியால் நடத்தப்பட்டுப் பின்வரவனத்திற்குப் புறப்பட்டாள். பின்னர் விதுரரும் ஸஞ்ஜயரும் புறப்பட்டார்கள். அவர்களுக்கு வழியனுப்ப மிகுந்த துக்கத்துடன் பாண்டவர்கள் முதலியோரும் புறப்பட்டனர். ஹஸ்தினாபுர வாஸிகள் மிகுந்த துக்கத்தை அடைந்தனர். ஊருக்கு வெளியில் வந்ததும் திருதிராஷ்டிரர், பாண்டவர்கள் முதலியோரை போகும்படி உத்தரவு கொடுக்க அவர்கள் பின்னடைந்தனர். குந்தி மாத்திரம் திரும்பாது முன்னே போகத் தலைப்பட்டாள். பாண்டவர்களும், திருதிராஷ்டிரரும் எவ்வளவு சொல்லியும் துக்கப்பட்டும் மாறாது திடமாக இருந்து, காடு சென்று திருதிராஷ்டிர காந்தாரிகளுக்கு சிச்ரூஷை செய்து நற்கதி அடைய முயலுவதாகக் கூறிக் குந்தி திரும்பாமலே போகத்தலைப்பட்டாள். பாண்டவர்கள் தம்மால் இயன்றமட்டும் பார்த்து குந்தியைத் திருப்ப முடியாமற்போக மிகுந்த துக்கத்துடன் பட்டணம் நோக்கித் திரும்பினர்.

**வினா** 7.- இவர்கள் வனம் சென்று எங்கு எவ்வாறு அமர்ந்தனர்?

**விடை**.- முதல் நாள் இரவு இவர்கள் பட்டணத்திற்கு கொஞ்ச தூரத்தில் தங்கினர். திருதிராஷ்டிரருக்குக் கஷ்டமாகத்தான் இருந்தது. அதை ஸஹித்துக் கொண்டு மெதுவாக கங்கைக்கறை அடைந்து இவர்கள் **சதயூபர்** என்ற ராஜரிஷியின் பர்ணசாலைக்கு வந்து சேர்ந்தார்கள். சதயூபரும் திருதிராஷ்டிரர் முதலியோரும் சேர்ந்து வியாஸர் ஆசிரமம் போனார்கள். பின்னர் சதயூபர் இவர்களை வானப்பிரஸ் தாசிரமத்தின் ஒழுங்குகளில் நிலை நிறுத்தினர். விதுரர் ஸஞ்ஜயர் முதலியவர்கள் ஸஹாயத்தால் இவர் இந்த தர்மத்தை காந்தாரி யோடு ஒழுங்காக அனுஷ்டிக்கத் தொடங்கினர். குந்தி காந்தாரிக்கு ஸஹாயம் செய்து தானும் விருதாதிகளை அனுஷ்டித்து வந்தாள். இவ்வாறு இவர்கள் சதயூபர் ஆசிரமத்தருகிலேயே அமர்ந்தனர்.

**வினா** 8.- இந்த ஸமயத்தில் இவர்களையார் எவ்வாறு வானப்பிரஸ்தத்தில் திடப்படுத்தியது?

**விடை**.- வியாஸர் நாரதர் முதலியோர் இவர்களை வந்து பார்த்து தர்மவிஷயமாகப் பேசினார்கள். முடிவில் நாரதர் முன்காலத்தில் இந்த வானப்பிரஸ்த தர்மத்தை அனுஷ்டித்து கடைத்தேறிய பெரியோர்களது சரித்திரங்க ளைக் கூறி முடிவில் மூன்று வருஷத்திற்குள் திருதிராஷ்டிரன் முதலியோர் தேகம்

நீங்கி ஸ்வர்க்க ஸுகம்பெறப் போகிறதாகக்கூறி அதுவரையில் மிகுந்த சிரத்தை யுடன் வானப்பிரஸ்த தர்மத்தை அனுஷ்டித்துவரும்படி அவர்களைத் தூண்டினார்.

.

**வினா** 9.- இவ்வாறு திருதிராஷ்டிரன் முதலியோர் வனம் சென்றமர்ந்ததும் பாண்டவர்கள் நிலை எவ்வாறிருந்தது? அவர்கள் என்ன செய்தார்கள்?

**விடை**.- தமது தாய் முதலியோரைப் பிரிந்து நின்றதால் மிகுந்த துக்கத்திற்கு ஆளாகி விடாது அவர்களைப் பற்றி எண்ணிக்கொண்டே, உத்தரை குமாரனான பரீக்ஷித்தைக் கண்டு சற்றுத் தெளிந்து ஸுமரர் இரண்டொரு வருஷம் காலம் கழித்தனர். இதன் முடிவில் ஸஹாதேவன் தன் தயாரைப் பார்க்க வேண்டும் என்று கூற திரெளபதியும் அவ்வாறே கூறினாள். எல்லோரும் இதற்கு இசைந்து காட்டிற்கு பிரயாணப்படுவதாகப் பரிவாரங்களோடு புறப்பட்டு திருதிராஷ்டிரர் முதலியோர் இருந்தவிடம் வந்து சேர்ந்தனர்.

**வினா** 10.- அப்பொழுது காட்டில் என்ன நடந்தது?

**விடை**.- திருதிராஷ்டிரர் முதலியோரைக் கண்டதும் எல்லோரும் தேர்களை விட்டிறங்கி நமஸ்காராதிகள் செய்ய ஒருவரை ஒருவர் க்ஷேமம் விசாரித்துக் கொண்டனர். இந்த ஸமயத்தில் விதுரரைக் காணாமல் போக தர்மபுத்திரர் அவரைப் பற்றி விசாரித்தார். அவர் ஸௌக்கியமாக இருக்கிறார் என்றும், அவர் காற்றை மாத்திரம் புஜித்துக்கொண்டு சிறந்த தபஸு செய்கிறார் என்றும், அவர் ஓர் வேளை கண்ணில் பட்டுக்கொண்டும் மற்றை வேளைகளில் மறைந்து கொண்டும் அந்தக் காட்டில் உலாவி வருகிறார் என்றும் திருதிராஷ்டிரர் கூறினார்.

**வினா** 11.- விதுரரை தருமபுத்திரர் எந்நிலையில் பார்த்தார்? அவர் அப்பொழுது என்ன செய்தார்? மேல் என்ன அற்புதம் நடந்தது?

**விடை**.- முற்கூறியவாறு திருதிராஷ்டிரர். கூறிக்கொண்டிருக்கையில் தூரத்தில் விதுரர் காட்டில் தென்பட்டார். பார்த்தார் தர்மபுத்திரர்! மஹா தர்மாத்மாவான விதுரரிடம் இருந்த அன்பால் அவரிடம் போய்ப் பேசி ஆனந்திக்க வேண்டும் என்ற எண்ணத்துடன் அவர் இருக்குமிடம் நோக்கி ஓடினார். விதுரரும் காட்டுள் ஓடத் தலைப்பட்டார். தருமபுத்திரர் காட்டுள் துறத்திக்கொண்டோட, விதுரர் சற்று கண்ணுக்குப் புலப்பட்டும் மறைந்தும் அவரைத் தந்திரமாக அடர்ந்த காட்டுள் இழுத்துப் போய், அங்கோர் மரத்திற் சாய்ந்துகொண்டு நின்றார். தருமபுத்திரர் அருகிற்சென்று எவ்வளவோ நயமாகப் பேசிப்பார்த்தார். விதுரர் அவரை கண் கொட்டாது விழித்துப் பார்த்துக்கொண்டு இருந்தாரே ஒழிய பதில் ஒன்றும் பேசவில்லை! இப்படி இருந்து, யோகாப்யாஸத்தால் அவர் தருமபுத்திரருள் புகுந்து தமது தேஹத்தை விட்டார். கொஞ்ச நாழிகைக்கு எல்லாம் விதுரர் தேஹத்யாகம் செய்துவிட்டதாகவும் தமக்கு ஏதோ பல விருத்தியாகி இருப்பதாகவும் தருமபுத்திர ருக்கு தெரிய வந்தது.

**வினா** 12.- இந்த ஸமயத்தில் தர்மபுத்திரர் மனோநிலை எவ்வாறிருந்தது? அது எதனால் எவ்வாறு மாற்றப்பட்டது?

**விடை.-** தரும புத்திரருக்கு ஆச்சரியமும் துக்கமும் உண்டாயிற்று. மஹாத்மாவான விதுரர் உயிர்பிரித்த மாதரியைக் கண்டு வியந்தார். விதுரரை விட்டுப் பிரிந்து இவ்வுலகில் வாழும் காலம் வந்துவிட்டதே என்று பின்னர் துக்கித்தார். இந்த துக்கத்தால் விதுரருக்கு ஈமக்கடன்கள் செய்து முடிக்க வேண்டும் என்ற அன்பு தர்மபுத்திரர் மனதில் உதித்தது. இந்தஸமயத்தில் 'விதுரர் தர்மாத்மா. அவருக்கு ஈமக்கடனால் பிரயோசனமில்லை. அவருக்கு **ஸந்தானிக லோகம்** கிடைத்து விட்டது. அவர்யதிகள் தர்மத்தை அனுஷ்டித்து உயிர் விட்டார். துக்கிக்க வேண்டாம்' என்று அசரீரி வாணி உண்டாகி தர்மபுத்திரரை மேல் கர்மங்கள் செய்ய வொட்டாது தடுத்தது.

**வினா** 13.- விதுரர் தருமபுத்திரருள் பிரவேசித்தார் என்றும், அவர் ஸந்தானிக லோகம் பெற்றார் என்றும் கூறப்பட்டதே, எவ்வாறு இவை இரண்டும் நடந்திருக்கக்கூடும்?

**விடை.-** விதுரர் ஓர் தர்மாத்மா. அவரிடம் மாண்டவ்ய ரிஷி சாபத்தால் (**ஆதிபர்வம் வினாக்களைப் பார்க்க**) யமதர்மனது அம்சம் கலந்திருந்தது. தேஹம் நழுவும் ஸமயம் வந்தகாலத்தில் யமன் அம்சமும் பிரியுங்காலமும் கூடவே வந்தால், யமன் அம்சம் யமன் அவதாரமாகிய தருமபுத்திரரிடம் சேர, விதுரர் ஆத்மா ஸந்தானிகலோகம் அடைந்தது. தேஹம் ஆத்மாவைவிட்டுப் பிரியும் முன்னரே, பரசுராமரிடம் பிரிந்தது போல, பகவத் அம்சம் ஒருவனிடமிருந்து பிரியலாம். இப்படி நடந்து விட்டால் அவன் முன் இருந்த சக்தி இழந்து தர்மாத்மாவான ஸாதாரண மனிதன்போல மரணகாலம் வரையில் உலகில் வாழ்ந்து வருவான். இம்மாதிரி ஓர் ஆத்மாவோடு தேவதாசக்தி ஸம்மந்தப்பட்டுவரும் அவதாரங்களுக்கு **அம்சாவ தாரங்கள்** அல்லது **கலாவதாரங்கள்** என்று பெயர்.

**வினா** 14.- இங்கு பரமபதம் பெற்ற மஹானான விதுரர் சரித்திரச் சுருக்கம் என்ன?

**விடை.-**

1. விதுரர் பிறப்பு விநயம் அறிவு முதலியன.
2. விதுரர் தர்மஞானத்தால் பாண்டவ தூரயோதனாதிகளிடம் நடந்து கொண்ட மாதிரி.
3. விதுரர் குணங்கள் தீரம் (சூதாட்ட காலத்தில் தர்மம் கூறியது) தர்மஞானம். - பரஜாகரம் - (இரவில் திருதிராஷ்டிரனுக்கு தர்மம் உபதேசித்தது) ஆத்ம ஞானம். - (ஸனத்குமாரைக் கொண்டு இரவில் மோக்ஷ தர்மம் உபதேசிக்கும்படி செய்தது) மனஸ்சுத்தம் (பகவான் அவர் வீட்டில் தங்கியது) பற்றில்லாமை (துர்யோதனனைவிட்டு நீங்கியது.)
4. விதுரர் ஸந்யாஸம் - தீர்த்தயாத்திரை - பகவான் வைகுண்டம் போகும் முன் விதுரர் நிலையைப் பற்றிக் கூறியது. (**பாகவத வினா விடை**

**இரண்டாம் பாகம் 11-ம் ஸ்கந்தம் வனாக்களைப் பார்க்க**) திருதிராஷ்டிரருக்கு வானப் பிரஸ்த விஷயமாகச் செய்தஸஹாயம்.

5. விதுரர் யதிதர்மம் - உலகை முற்றிலும் துறந்து அவதூதராய்க் காட்டில் அலைந்து தர்மபுத்திரருள் பிரவேசித்தல்.

6. கருத்து - துஷ்டரைக் கண்டால் முடிவில் தூர விலகவேண்டும். சேர்ந்து நிற்றல் வெகுகாள் நிலைக்காது. மோக்ஷம் பாடுபட்டாலன்றி ஸித்திக்காது.

**வினா** 15.- தரும புத்திரர் காட்டிலிருந்த காலத்தில் மேல் என்ன அற்புதங்கள் நடந்தன?

**விடை**.- வியாஸர் திருதிராஷ்டிரர் ஆசிரமம் வந்து விதுரர் சரித்திரத்தைக் கூறி அவர் முடிவையும் எடுத்து விஸ்தரித்தார். அதன்பின்பு எல்லோரையும் வியாஸர் கங்கைக் கரை அழைத்துப்போனார். அங்கு திருதிராஷ்டிரன் முதலியோர் அவரவர்களுக்கு வேண்டியவர்களாயும் பாரத யுத்தத்தில் இறந்தவர்களாயும் உள்ள உறவினர்களைப் பார்க்கவேண்டும் என்று வேண்ட, வியாஸர் அவர்களை கங்கை யில் ஸ்நாநம் செய்து அன்று பகல் அங்கிருக்கும்படி செய்து, இரவில் தமது யோக மஹிமையால் யுத்தத்தில் மாண்ட க்ஷத்ரியர்கள் தாம் இருந்த ஸ்வர்க ஸஹிதமாக கங்கையிலிருந்து கிளம்பி இவர்கள் கண்முன் தோன்றும்படி செய்ய எல்லோரும் ஆச்சரியம் அடைந்தனர். இறந்தவர்கள் பெண்சாதிகள் அப்பொழுதே சாந்த மனதுடன் கங்கையில் விழுந்து தேஹம் நீங்கி தமது புருஷர்களோடு போய்ச் சேர்ந்து கொண்டனர்.

**வினா** 16.- இதன்பின்பு பாண்டவர்கள் என்ன செய்தார்கள்?

**விடை**.- யுதிஷ்டிரர் திருதிராஷ்டிரரிடமிருந்து விடைபெற்று ஊருக்குப்போக மனம் வாராது மிகுந்த அதிருப்தியுடன் ஹஸ்தினாபுரி நோக்கிப் புறப்பட்டார். அப்பொழுது காந்தாரி முதலியவர்களால் தேற்றப்பட்டு பகவான் வம்சமாகிய யாதவர்களாவது இருக்கிறார்களே என்ற திருப்தியுடன் பாண்டவர்கள் தமது பட்டணம் வந்து சேர்ந்தார்கள்.

**வினா** 17.- திருதிராஷ்டிரர் முதலியோர் எவ்வாறு பரமபதம் பெற்றனர்?

**விடை**.- ஹஸ்தினாபுரத்திற்கு அருகாமையிலிருந்தால் அடிக்கடி உறவினர் கள் வந்து தமது தபஸைக் கலைப்பார்கள் என்று திருதிராஷ்டிரர் கங்காத்வார தீர்த்தம் சென்று அங்கு ஆஹாராதிகளை நிறுத்தி தமது அக்னிகளுக்கு பூர்ண ஆஹுதிகள் கொடுத்து அவைகளை தியாகம் செய்யும்படி ப்ராஹ்மணர்களுக்குச் சொல்லிவிட்டு அங்குள்ள வனத்துள் புகுந்து யதி தர்மத்தை அனுஷ்டித்துக்கொண்டு அசைவற்று இருந்துவிட்டார். இதுபோலவே குந்தியும் காந்தாரியும் இருந்து விட்டார் கள். ஸஞ்ஜயர் இவர்களுக்கு சிச்ரூஷை செய்துவந்தார். இப்படி இருக்கப் ப்ராஹ்ம ணரால் நீக்கப்பட்ட திருதிராஷ்டிரரது அக்னி அணைந்து போவதற்கு முன் காட்டு சருகில் பற்றிப் பெருங் காட்டுத் தீயாகி இவர்களைச் சுற்றிவர திருதிராஷ்டிராதிகள் திடமாக அதற்கு இறையாகி தேஹம் நீங்கினர். ஸஞ்ஜயர் மாத்திரம் அவர்கள்

உத்தரவின் பேரில் தப்பிப் பிழைத்து ஹிமாலயம் போய் தபஸு செய்யத் தொடங்கினார். 'நாய் வேஷம் போட்டால் குலைத்தே தீரவேண்டும்' என்ற இம்மாதிரியான எண்ணங்களால் தாக்கப்பட்டு அரை மனதோடு முன்னிருந்த பற்றுக்கள் அற்று ராஜ்யத்தை மாத்திரம் காலத்தை எதிர்ப்பார்த்துக் கொண்டு பாண்டவர்கள் ஆண்டுவந்தனர்.

**வினா** 18.- இந்த ஸங்கதிகள் பாண்டவர்களுக்கு எவ்வாறு தெரிய வந்தது? அவர்கள் மேல் என்ன செய்தார்கள்?

**விடை**.- விடாது லோக ஸஞ்சாரம் செய்துவந்த நாரதர் பாண்டவர்களுக்கு இதைத் தெரிவித்து அவர்களைத் தேற்றினார். பாண்டவர்கள் துக்கம் அதிகரிக்க அன்று முதல் அவர்கள் மனம் மிகுந்த கவலைகஷ்ட முதலியவைகளால் சின்னா பின்னமாகத்தொடங்கி விட்டது. தம் தாய் முதலியோருக்குச் செய்யவேண்டிய கடன்களைச் செய்து முடித்து என்னமோ நமது காலம் முடியும் வரையில் நாமும் நமது கடன்களைச் செய்து கொண்டு வாழ்ந்து னே தீரவேண்டும். உலகில் வாழ வரம் வாங்கி வந்த பிறகு உலகவாழ்க்கை கஷ்டமா யிருக்கிறதென்றால் யார் விடுவார்கள்' என்று ஏக்கத்துடன் பாண்டவர்கள் நாட்களைக் கழித்து வந்தார்கள்.

---

# 16. மௌஸல பர்வம்

*ஆக்குமாறயனாம், முதலாக்கிய உலகம்*
*காக்குமாறு செங்கண்ணிறை கருணையங் கடலாம்,*
*வீக்குமாறானாம், அவைவீந்த நாள் மீளப்*
*பூக்குமாமுதல் எவன், அவன் பொன்னடி போற்றி.*

**வினா** 1.- பாண்டவர்கள் தமது உறவினர்களை இவ்வாறு இழக்கும்படி நேர்ந்த பின்பு அவர்களுக்கு வேறு என்ன கஷ்டம் வந்தது?

**விடை.**- குருக்ஷேத்ர யுத்தம் நடந்த 36-ம் வருஷத்தில் பாண்டவர்கள் தமக்கு முக்கிய பலமாக விருந்த யாதவர்கள் முதலியோரை இழக்கும்படி நேர்ந்தது. இவர்கள் பிராஹ்மண சாபத்தால் தம்மைத்தாமே அடித்துக் கொண்டு இறந்தனர்.

**வினா** 2.- யாதவர்களுக்கு பிராஹ்மணசாபம் வருவானேன்?

**விடை.**- சிலரிஷிகள் துவாரகைக்கு வர அவர்களைப்பரிஹாஸம் செய்ய வேண்டும் என்று சில யாதவகுமாரர்கள் தொடங்கினர். காலபலத்தால் இவ்வாறு புத்தி கெட்ட சிறுவர்கள் சேர்ந்து **ஸாம்பனுக்குக்** கர்ப்பவதியான பெண் வேஷம் போட்டு ரிஷிகளின் முன் கொண்டு நிறுத்திச் சிரிக்காது மிகுந்த ஆவலுடன் கேட்பவர்கள் போல 'இந்தப்பெண் **பப்ரு** என்ற யாதவன் பெண்சாதி. கர்ப்பமாக இருக்கிறாள். இவளுக்கு என்ன பிள்ளை பிறக்கும்?" என்று கேட்டார்கள். இவர்கள் கெட்ட எண்ணத்தை ஞானதிருஷ்டியால் அறிந்த ரிஷிகள் 'உங்கள் குலத்தைக் கெடுக்கும், உலக்கை (முஸ்லம்) ஒன்று பிறக்கும்' என்று கோபத்துடன் கூறினர். வீட்டிற்கு வந்து பார்க்கிறார்கள்! ஸாம்பன் வயிற்றில் வைத்திருந்த கந்தைகள் எல்லாம் ஓர் எஃகு உலக்கையாக மாறி இருந்தன.

**வினா** 3.- இந்த சாப விஷயம் தெரிய வந்ததும் யாதவ குலத்தவர்கள் என்ன செய்தனர்?

**விடை.**- இந்த ஸங்கதி பகவானுக்குத் தெரிந்ததும் எல்லோரையும் அழைத்து, 'இந்த மாதிரியான முடிவு நமக்கு முன்னரே ஏற்பட்டிருக்கிறது. வீணாகபயந்து பயனில்லை' (**ஸ்தீரீபர்வம் பார்க்க**) என்று கூறி மௌனமானார். உக்கிரஸேனன் முதலியோர் மிகுந்த பயத்துடன் அந்த உலக்கையை பொடியாக ராவி ஸமுத்திரத் தில் எறிந்து விடும்படி ஏற்பாடு செய்தனர். அந்த உலக்கையை அவ்வாறே செய்ய முடிவான பாகமாகிய ஓர் சிறு ஆண மாத்திரம் ராவ முடியாமற்போய்ற்று. அதையும் சேர்த்து ஸமுத்திரத்தில் எறிந்து விட்டனர். இதன்பின்பு அன்று முதல் துவாரகையில் யாவரும் மது ஸுரை முதலிய சாராய வஸ்துக்கள் செய்யவே கூடாது என்று பலராமர் உத்தரவு செய்தார். இவ்வாறு பிராஹ்மண சாபத்தைத் தடுக்க ஏற்பாடுகள் செய்யப்பட்டன.

**வினா** 4.- இப்படி இவர் ஏற்பாடு செய்ததும் பிராஹ்மண சாபத்தின் வலிமை எவ்வாறு வெளியாகிக்கொண்டு வந்தது? இதற்கு என்ன பரிகாரம் செய்யப்பட்டது?

**விடை.-** அநேகவித அபசகுனங்கள் அன்று முதல் துவாரகையில் காணப் பட்டன. யமனே ஓர் கோரபுருஷன் உருக்கொண்டு துவாரகையில் உலாவி வந்தான். அவனை அடித்துத் தள்ளயாதவர்கள் எவ்வளவு முயன்றும் முடியாமல் போயிற்று. இந்தக் கஷ்டங்களைக் கண்டு பகவான் காந்தாரி வாக்கு ரிஷிசாபம் இவைகளின்படி 'வருவனவற்றை தடுக்க முடியாதாயினும் இறக்குங்கால் நல்ல கர்மங்கள் செய்துகொண்டே இறந்தால் நலம்' என்று எண்ணி, 'எல்லோரும் பிரபாஸ் தீர்த்தம் போய் இந்தக் கொடிய காலத்தில் தர்மங்கள் செய்தல் அவசியம்' என்று பறை யறைந்து எல்லோரையும் ஸமுத்திரக் கரைகொண்டு சேர்த்தார். இந்த ஸமயத்தில் பகவானது சக்கரம் முதலிய ஆயுதங்கள் குடை முதலியன எல்லாம் ஆகாயத்தில் பறந்தோடிப் போயின.

**வினா** 5.- பிரபாஸத்திலிருந்த யாதவர்களுள் சண்டை எவ்வாறு பிறந்தது?

**விடை.-** சிறந்த தர்மங்கள் செய்துவிட்டு, ஒரு நாள் பாக்கி இருந்த மாம்ஸம் ஸுரை முதல்யவைகளை பகவான் உட்கொண்டதைக்கண்டு எல்லோரும் நன்றாக உட்கொண்டு மதம் பிடித்து இரண்டு வரிசையாக உட்கார்ந்தனர். அப்பொழுது அவர்கள் உத்ஸாஹமாக அநேக விஷயங்களைப்பற்றிப் பேசிவந்தனர். இப்படி இருக்கையில் குடிவெறியில் ஸாத்யகி கிருதவர்மனைநோக்கி, 'நீ ஓர் க்ஷத்திரியனா? தூங்கிக்கொண்டிருந்தவர்களைக் கொன்ற பாபியல்லவா (**ஸௌப்திக பர்வம் பார்க்க**) உனக்கு இங்கு இடம் எப்படி கிடைத்தது' என்று பரிஹாஸம் செய்தான். பிரத்யும்னன சிரித்தான். கிருதவர்மா மெதுவாக ஸாத்யகியை இடதுகையால சுட்டிக் காட்டி, 'யோகத்திலிருந்து மரணத்திற்குத் தயாரான கை யறுபட்ட பூரிச்ரவஸ்ஸை, செத்த பாம்பை அடிப்பது போல் அடித்த (**துரோணபர்வம் பார்க்க**) மஹானுக்கு இங்கு இடமிருக்கும் பொழுது எனக்குத் தானா இங்கு இடமில்லை,' என்றான். இதைக்கேட்டு ஸாத்யகி சீறி எழுந்து 'உன் திருட்டு ஸ்வடாவத்தைக் காட்டுகிறாயே! ஸ்யமந்தமணி விருத்தாந்தத்தில் நீ தானே ஸத்ரஜித்தை ரஹஸ்யமாகக் கொன்றவன்! (**பாகவத வினா விடை இரண்டாம் பாகம் 10-ம் ஸ்கந்தம் பராக்க**) உனக்கும் பதில்கூறவும் வாய் யிருக்கிறதா?' என்று பழங் கதையைக் களரினான். இதைக்கேட்டு ஸத்யபாமை துக்கித்தாள். ஸாத்யகிக்கு கோபம்வர அவன் கிருதவர்மாவை வைது கொண்டு அவன் தலையை வெட்டிவிட்டான். இதிலிருந்து சண்டை பலத்துவிட்டது.

**வினா** 6.- இந்த பரஸ்பரயுத்தம் எவ்வாறு நடந்து முடிவு பெற்றது?

**விடை.-** ஸாத்யகி இவ்வாறு செய்ததும் எல்லோரும் அவனை வளைத்துக் கொண்டு அவன் தலையை அறுத்துவிட்டனர். இதைக்கண்ட பகவான் அருகே இருந்த கோரைப்புற்களைப் பிடுங்கி ஸாத்யகியைக் கொன்றவர்களை அடிக்கத் தொடங்க எல்லோரும் அவ்வாறே செய்து குடிவெறியில் ஒருவரை ஒருவர் பேதா பேதமின்றி அடிக்கத் தொடங்கி விட்டனர். பகவான் வழி காட்டிவிட்டு ஒதுங்கி பலராமரிருக்குமிடம் சென்றனர். ஸமுத்திரக்கரையில் உலக்கைப் பொடியின் ஸம்பந்தத்தால் முளைத்த கோரைப்புல் ஒவ்வொன்றும் கோபமாகப் பிடுங்கிய

யாதவர்கள் கையில் எஃகு உலக்கையின் வயிரம் உடையதாகி அவர்கள் எல்லோரையும் 1½ மணி நேரத்திற்குள் கொன்று சாய்த்து விட்டது.

**வினா** 7.- இவ்வாறு பூபாரம் நீங்கியதும் பகவான் என்னசெய்தார்?

**விடை.**- முதலில் பலராமர் தபஸு செய்து தேஹம் விடத் தயார் செய்த இடம் சென்று அங்கு தாருகனிடம் யாதவர்கள் அழிந்தவிவரத்தைக் கூறி அர்ச்சுனனை அழைத்து வரும்படி ஏவினார். அரண்மனைப் பெண்களைக் காக்கும் படி பப்ருவை அனுப்ப, அவன் போகும் வழியில் ஓர் கோரைப் புல்லால் அடிபட்டு இறந்தான். இதைக் கண்டு பகவானே அரண்மனை சென்று, 'நான் உலகை விடும் காலம், வந்து விட்டது. அர்ச்சுனன் வந்து தகுந்த ஏற்பாடுகள் செய்வான். நான் தபஸுக்குப் போகிறேன்' என்று வஸுதேவர் முதலி யோரிடம் கூறிவிட்டு அதிகமாக நிற்காமல் பலராமர் இருந்த காடு வந்தார். அங்கு பல ராமர் தேஹத்தி விருந்து சேஷன் வெள்ளை பாம்பு உருவாக ஆகாயத்தில் கிளம்பு வதைப் பசுவான் கண்டார்.

**வினா** 8.- பகவான் எவ்வாறு உலகம் நீங்கினார்?

**விடை.**- இவ்வாறு ஸகல கார்யங்களையும் முடித்து விட்டு பகவான் காட்டில் வந்து தூர்வாளாவிற்குச் செய்த பாயஸம்படாதகாலை (**அனுஸாசன பர்வம் பார்க்க**.) மற்றக் கால்மேல் பாதம் தெரியும்படி வைத்துக்கொண்டு யோகாப்யாஸத்தில் ஓர் மரத்தடியில் உட்கார்ந்தார். இந்த ஸமயத்தில் இருப்புலக் கையில் ராவமுடியாது ஸமுத்திரத்தில் போடப்பட்ட ஆணியை அம்பு நுனியில் வைத்துக் கொண்டிருந்த **ஜரன்** என்ற வேடன் தூரத்தில் வர பகவான் சிவந்தபாதம் ஓர் மானின் நாக்குப் போல அவனுக்குத் தோன்றிற்று. அவன் எஃகு நுனியுள்ள அம்பை எய்து விட்டு மானைப் பிடிக்க ஓடிவந்து பார்த்தான்| பகவான் சதுர்புஜத் தோடு இருப்பதைக்கண்டு பதைத்து காலில் விழுந்து துக்கித்தான். அவனைப் பகவான் தேற்றிவிட்டு இதை வ்யாஜமாகக் கொண்டு உலகை நீங்கி எங்கும் நிறைந்த ஜ்யோதியாக இருப்பிடம் எய்தினர்.

**வினா** 9. - அர்ச்சுனன் வந்து என்ன ஏற்பாடுகள் செய்தான்?

**விடை.**- அர்ச்சுனன் வந்ததும் அரண்மனை ஸ்திரீகள் எல்லோரும் மிகவும் துக்கித்தனர். வஸுதேவரும் தேவகியும் பகவானைப் பிரிந்த துக்கம் பொறுக்க மாட்டாது இறந்தனர். அவர்களையும் பிரித்தெடுக்கக்கூடிய யாதவர்களையும் தகனம் செய்யவிதைவைகளான அநேக ஸ்திரீகள் அப்பொழுது தமது பிராணனை விட்டனர். பின்னர் பகவானிடமிருந்து தனக்கு தெரிய வந்த சிலவார்த்தைகளை அர்ச்சுனன் மிகுதி இருந்தவர்களுக்குக் கூறினான். 'ஜனங்களே! சீக்கிரம் ஸமுத்திரம் பொங்கி துவாரகையை முழுத்தப்போகிறது! ஆதலால் தான் மிகுதியிருக்கும் எல்லோரை அக்கரைகொண்டு போய் தகுந்த இடங்களில் சேர்க்கிறேன். வாருங்கள். இப்பொழுது பிழைத்திருக்கும் **வச்சிரன்** என்ற பிள்ளையை இந்திரப் பிரஸ்தத்தில் பட்டாபிஷேகம் செய்து விடுகிறேன்' என்றான்.

**வினா** 10.- அரச்சுனன் துவாரகா வாஸிகளைக் கூட்டிக் கொண்டு போகையில் என்ன கஷ்டங்கள் தேர்ந்தன?

**விடை.**- துவாரகா வாஸிகளைக் கூட்டிக்கொண்டு அர்ச்சுனன் அக்கரை சென்றதும் ஸமுத்திரம் பொங்கி துவாரகையை முழுத்தியது. மிகுந்த துக்கத்துடன் அர்ச்சுனன் ஸ்திரீகள் பாலர்கள் கிழவர்கள் இவர்களை அழைத்துப் போகும் வழியில், அநேக மிலேச்சத் திருடர்கள் வந்து இவர்-களைத் தாக்கி பணப்பெண்கள் இவைகளை கொள்ளை கொண்டனர். அர்ச்சுனன் காண்டீவத்தை மிகுந்த கஷ்டத்தின் பேரில் நாண் பூட்டி சிலரைத்தான் காப்பாற்ற முடிந்தது. பகவானோடு தன் சக்தியும் போய்விட்டதாக அப்பொழுது அவனுக்குத் தெரிய வந்தது. மிகுந்த கஷ்டத்தின் பேரில் அர்ச்சுனன் இந்திரப் பிரஸ்தம் வந்து தன் கூடவந்தவர்களை எல்லாம் வச்சிரன் வசம் ஒப்புவித்து அவனை அங்கு அரசனாக்கினான்.

**வினா** 11.- இதன் பின்பு அர்ச்சுனன் என்ன செய்தான்? அவனையார் எவ்வாறு தேற்றினர்?

**விடை.**- நடந்தவைகளால் மிக்க மனம் நொந்தவனாய் அர்ச்சுனன் வியாஸர் ஆசிரமம் புகுந்து பகவான் உலகம் நீங்கியதையும், தனக்குப் பின்னர் உண்டான கஷ்டங்களையும், தன்வலிமை குறைந்ததையும் எடுத்துக் கூறித் துக்கித்தான். அதற்கு வியாஸர், 'உங்கள் சக்திகள் எல்லாம் உலக நன்மைக் காகவே உங்களிடம் இருந்தன. அவைகளால் ஆகவேண்டிய கார்யம் முடிந்து விட்ட படியால் அவைகள் உங்களைவிட்டு நீங்கின. சக்தி முதலியன கல விஷயங்களும் உலகஸம்பந்தமாத லால் காலகதிக்கு உட்பட்டவைகளே. அவைகள் வருவதையும் போவதையும் ஒரு பொருட்டாக எண்ணுவது மனிதனுக்கு அழகல்ல. இனி உங்களால் உலகம் ஸுகப்பட வேண்டிய காலம் வந்தால் தர்மாத்மாவான உங்களுக்கு அந்த சக்தி திரும்பவும் வரும். இப்பொழுதே இவ்வுலகம் நீங்கிப் பரமபதம் போகவேண்டிய காலம் உங்களுக்கு வந்துவிட்டது. பகவானும் காலத்தை அனுஸரித்து தர்மத்தின்படி உலகம் நீங்கி இருக்கிறார். நீங்களும் உலகப்பற்றொழிந்து மேல் நடக்க வேண்டிய வைகளை கவனிக்கவேண்டும். உலகவாழ்க்கையின் ஸ்வபாவமே இதுதான். இதைலக்ஷ்யம் செய்யாது இதற்கு அப்பாற்பட்டதாகிய பரம்பொருளை நோக்கினால் தான் உலகத்தில் சாந்தமனதுடன் வாழமுடியும்' என்று புத்திமதி கூறித் தேற்றினார். இவ்வாறு தேறுதலடைந்த அர்ச்சுனன் நடந்தவைகளை தர்மபுத்ரரிடம் வந்து தெரிவித்தான்.

# 17. மஹாப்பிரஸ்தான பர்வம்

*பொன்னை மாதரைப் பூமியை நாடிடேன்*
*என்னை நாடிய வென்னுயிர் நாதனே!*
*யுன்னை நாடுவ, னுன்னருட்ெவெளி*
*தன்னை நாடுவன், றன்னந் தனியனே!*

**வினா** 1.- யாதவர்கள் அழிந்த விவரத்தையும், வியாஸர் உபதேசத்தையும் கேட்ட உடன் பாண்டவர்கள் என்ன செய்தார்கள்?

**விடை.**- தாம் உலகை விட்டு நீங்கக் காலம் வந்து விட்டது என்று உணர்ந்து தரும் புத்திரர் ராஜ்யத்தை யுயுத்ஸுவிடம் ஒப்புவித்து விட்டு பரீக்ஷித்திற்கு ராஜ்ய பட்டாபிஷேகம் செய்தனர். பின்னர் தபஸு செய்து உலகம் நீங்கக் காடு செல்ல வேண்டும் என்று பிரஜைகளிடம் இவர்கள் அனுமதி கேட்டனர். பிரிவாற்றாமையால் வரும் வருத்தம் அப்பொழுதே பிரஜைகளுக்கு உண்டாக அதையும் கவனியாது தருமபுத்திரர் உலகை வெறுத்து மஹாப்பிரஸ்தான யாத்திரையாகப் புறப்பட்டு விட்டார். கிருபாசாரியர் பரீக்ஷித்திற்குப் புரோஹிதராகி எல்லோரையும் தேற்றினர்.

**வினா** 2.- மஹாப்பிரஸ்தான யாத்திரை எவ்வாறு நடந்தது?

**விடை.**- தருமபுத்திரர் உலகை வெறுத்துப் புறப்பட்டதும் பின்னே முறையே பீமன், அர்ச்சுனன், நகுலன், ஸஹாதேவன் திரௌபதி ஆகிய இவர்களும் புறப்பட்டனர். இவர்கள் பின்னே ஒருநாயும் தொடர்ந்து புறப்பட்டது. இவர்கள் முதலில் பாதகண்டத்தை யாத்திரையில் வலம் வடக்கே திரும்பி ஹிமயமலை நோக்கிப் போகத் தலைப்பட்டனர். ஹிமாலயம் தாண்டி மேருவை நோக்கிப் போகையில் தான் தர்மபுத்திரர் தமது தம்பிமார்களை விட்டுப் பிரியும்படி நேரிட்டது.

**வினா** 3.- தர்மபுத்திரர் யாது காரணத்தால் எவ்வாறு தம்பிமார் முதலி யோரிட மிருந்து பிரிந்தது?

**விடை.**- அர்ச்சுனனிடம் இருந்த சிறு பக்ஷபாதத்தால் முதலில் திரௌபதி வழிகடக்க மாட்டாது சோர்ந்து விழுந்திறந்தாள். ஸஹாதேவன் தனக்கு நிகர் ஒருவரும் இல்லை என்று கொண்ட கர்வத்தின் பாபத்தால் இதற்குப்பின் சோர்ந்து விழுந்திறந்தான். பின்னர் தன்னைப்போன்ற அழகுடையவர் இல்லை என்று எண்ணிய பாபத்தால் நகுலன் உயிர் நீங்கிவிழுந்தான். கௌரவ ஸேனையை ஒரு நாளில் அழித்துவிடுவேன் என்று வீண்பெருமை பேசிய பாபத்திற்காக அர்ச்சுனன் இதன்பின்பு இறந்தான். பெருந் தீனிக்காரனாக சாப்பிடுங்கால் மற்றவர்களைக் கவனியாததாலும், தனக்கு பலத்தில் நிகர் ஒருவரும் இல்லை என்ற எண்ணத்தா லும், உணடானபாபத்திற்கு இறையாகி பீமன் இறந்தான். முடிவில் தர்மபுத்ரரோடு நாய் மாத்திரம் தான் விடாது போகத்தலைப்பட்டது.

**வினா** 4.- இந்த ஸமயத்தில் தர்மபுத்ரர் மனோபாவம் எவ்வாறு வெளியாயி ற்று?

**விடை.-** இந்த ஸமயத்தில் இந்திரன் விமானம் ஒன்றைத்திடீரென்று இறக்கி ஸ்வர்க்கம் போக தர்மபுத்ரரை அதில் ஏறும்படி வேண்டினான். நாயும் ஏறினால் தான் தானும் ஏறுவேன் என்று தர்மபுத்ரர் கூறி அவரை நோக்கி இந்திரன் 'ஸ்வர்கத்தில் நாயிக்குஇடமேது? நாய் அசுத்தியான பிராணி, நாய் அங்குபோனால் கஷ்டப்பட வேண்யது தான், தம்பிமார்களை விட்டுப் பிரிந்த உமக்கு இந்த நாயைக்கட்டிக் கொண்டு அழும்படியான துர்புத்தி ஏன் வந்தது?' என்று பலவாறாகக் கூறி தர்மபுத்ரர் மனதை மாற்றப் பார்த்தான். அதற்கு அவர், 'என்னோடு இவ்வளவு தூரம் விடாது வந்த நாய்க்கு இடம் கொடுக்காத ஸ்வர்க்கம் எனக்கு வேண்டாம்; ஸ்வர்க்க ஸுகத்திற்கு ஆசைப்பட்டு இந்த நாயை விடுவது பெரும்பாபம். இவ்வளவு தூரம் வந்த நாய்க்கு ஸ்வர்க்கத்தில் கஷ்டமே உண்டாகாது. என் தம்பி முதலியோர்களை இறந்தபின் துறந்தேனே ஒழிய வேறல்ல. அதனால் இந்த நாயை உயிரோடிருக்கும் பொழுதே நான் துறக்க எண்ணக் கூடாது' என்று தகுந்த பதில் கொடுத்து ஸ்வர்க்கத்திற்கு வருவதில்லை என்று அசைவற்று நின்று விட்டார்.

**வினா** 5.- இவ்வாறு தர்ம புத்திரர் தமது தர்மசிந்தையைக் காட்டியதும் என்ன அற்புதம் நடந்தது? மேல் என்ன நடந்தது?

**விடை.-** இந்த ஸமயத்தில் நாய் தன் ஸவந்தரூபமாகிய தர்மராஜன் ரூபத்தை தரித்து, தர்மபுத்திரரது தர்ம சிந்தையை எடுத்துப் புகழ்ந்து பேசி , அவரை விமானத் தில் ஏறும்படி வேண்டியது. அப்பொழுது இந்திரன் 'எந்த விடத்திற்குப் போக வேண்டும்' என்று கேட்க அவர் 'எனது தம்பிகள் முதலியோர் எங்கு சென்றனரோ அங்கேதான் போகவேண்டும்' என, இந்திரன் 'இன்னும் உமக்கு உறவுவாஞ்சை: விடவில்லையா?' என்று பரிஹாஸம் செய்தான். தர்மபுத்திரர் மனம் பின்னும் மாறாதது கண்டு அவ்வாறே ஸ்வர்க்கம் நோக்கி அவரைக்கூட்டிக் கொண்டு போனான்.

---

# 18. ஸ்வர்காரோஹண பர்வம்

*ஆழித்துரும்பெனவே யங்குமிங்கு முன்னடிமை*
*பாழிற்றிரிவதென்ன பாவம் பராபரமே.*
*ஓயாதோவென்கவலையுள்ளேயானந்தவெள்ளம்*
*பாயாதோவையா பகராய் பராபரமே.*
*எப்பொருளு நீயெனவே யெண்ணிநான் னோன்றாத*
*வைப்பையழி யாநிலையா வையாய் பராபரமே.*

**வினா** 1.- ஸ்வர்க்கம் சென்றதும் அங்கு தர்மபுத்ரர் முதலில் எதைக் கண்டு என்ன நிலையை அடைந்தார்?

**விடை.**- ஸ்வர்க்கம் போனதும் அங்கு துர்யோதனாதியர் ஸுகிப்பதைக் கண்டார் தரும் புத்திரர். தனக்கு நன்மை செய்த ஸத்துக்களான உறவினர்கள் ஒருவரையும் அங்கு காணோம். அவர் மிகுந்த துக்கத்தை அடைந்து யார் என்ன யென்ன சொல்லியும் தூர்யோதனாதியரைக் கண்ணெடுத்துக் கூடப்பார்க்காது தமது தம்பிமார்களிருக்கும் இடம் கொண்டு தம்மை விடும்படி அவர் ஓயாது வேண்டினார்.

**வினா** 2.- தமது தம்பிமார்களை எந்நிலையில் எவ்விடத்தில் தர்மபுத்திரர் கண்டார்?

**விடை.**- தேவதைகள் ஓர் தூதனை அனுப்பி அருகாமையிலுள்ள நரகத்திற்கு அவரை அழைத்துப்போகும்படி செய்தார்கள். போம்வழி எல்லாம் நாற்றமாயும் கொடூரமாயும் இருக்க அவைகளைக் கவனியாது தர்மபுத்திரர் அங்கு சென்றார். அங்கு சொல்ல வாய்கூசும்படியான கொரேமாயும், அஸங்கியமாயும் உள்ள, நரகங்களில் நெருப்பில் அகப்பட்ட புழுபோலப் பாபிகள் துடிப்பதைக் கண்டார். கண்காது முதலிய இந்திரியங்களை உபயோகப்படுத்துவதற்குத் தகாத விஷயங்கள் அங்கு ஏராளமாக இருந்தன. இம்மாதிரி காட்சி இவர் இதுவரையில் கண்டதே இல்லை. அங்கு ஒரு இருட்டும் மூடிக்கொண்டிருக்க அதனுள் வருந்துபவர் இன்னாரென்று மாத்திரம் கண்டு பிடிக்க அவரால் முடியவில்லை.

**வினா** 3.- இவ்வாறு நரகத்தை தர்மபுத்திரர் தர்சித்தும் அவர் மனம் கலங்கும் படியான விஷயம் அங்கு என்ன நடந்தது? அவர்மேல் என்ன செய்தார்?

**விடை.**- இவரைத் திரும்பும்படி தேவதூதன் வேண்ட அந்த ஸமயத்தில் 'நான் தான் பீமன், நான்தான் அர்ச்சுனன்' என்ற இவைபோன்ற கூக்குரல் உண்டாக தர்ம புத்திரர் திகைத்து நின்றார். அப்பொழுது அந்த சப்தங்கள், 'நாங்கள் படும்கஷ்டம் சொல்லி முடியாது! பொருக்க முடியவில்லை! நீங்கள் வந்ததும் எங்களுக்குக் கொஞ்சம் கஷ்டம் குறைந்திருக்கிறது. கொஞ்ச நாழிகை இங்கு இருக்க வேண்டும், போய்விடக்கூடாது!' என்று கூறின. கேட்டார் தருமபுத்திரர்! 'இதென்ன அநியாயம்! பாபிக்கு ஸ்வர்க்கஸும்! நிரபராதிகளான ஸத்துக்களுக்கு நரகம்! நான் இங்கேயே இருக்கிறேன். இதுதான் எனக்கும் தகுந்த இடம் வரமாட்டேன்! போ!' என்று கோபத்துடன் கூற, நடு நடுங்கினான் தேவதூதன்.

**வினா** 4.- தேவதூதன் பின்னர் என்ன செய்தான்? அங்கு என்ன அற்புதம் நடந்தது?

**விடை.**- தேவதூதன் ஓடோடியும் போய் தருமபுத்திரர் மனஉறுதியை தர்மராஜனிடம் தெரிவிக்க அவர் தேவதைகளோடு அங்கு வந்துவிட்டார். உடனே அந்த இடம் ஸ்வர்க்கமாக மாறியது!

.

**வினா** 5- தர்மபுத்திரர் மனதை யமதர்மராஜன் எவ்வாறு திருப்திப் படுத்தினார்?

**விடை.**- 'சிறு பாபங்கள் செய்த நல்லவர்கள் முதலில் பாப பலனை அனுபவித்து விட்டு பின்னர் ஸ்வர்க்கம் போவார்கள். கொடிய பாபிகள் அவர்கள் செய்த புண்ய பலனை முதலில் ஸ்வர்க்கத்தில் அனுபவித்துவிட்டு பின்னர் நரகத்தில் தள்ளப்படுவர். நீர்கண்ட அநியாயம் இந்த ஒழுங்குப்படி நடந்தது. இப்பொழுது எல்லாம் மாறிவிட்டது. உமது நல்ல உறவினர்கள் ஸ்வர்க்கத்திற்கும், கொடிய உறவினர்கள் நரகத்திற்கும் போய்விட்டனர். நீர் இந்த நரகத்தைப் பார்க்கவேண்டி வந்ததும் இம்மாதிரி மனங்கலங்க வேண்டி வந்ததும் துரோணரைக் கொல்லும் விஷயத்தில் நீர் சொன்ன பொய்க்காகத்தான். இனிமேல் உமக்கு எங்கிருந்த போதிலும் உமது மனம் கலங்கவே மாட்டாது' என்று கூறித்தேற்றனார் யமதர்மராஜன்.

**வினா** 6.- இம்மாதிரி தர்மபுத்திரர் மனம் தெளிந்ததும் அவர் எங்கு சென்று எவ்வாறானார்?

**விடை.**- மனம் தெளிந்ததும் தர்ம புத்திரர் ஆகாய கங்கையில் ஸ்நாநம் செய்து தேஹம் நீங்கி, உலகப் பற்றுக்களிலிருந்து விடுபட்டு பரமபதத்தில் தமது உறவினர்கள் மத்தியில் பரமானந்த ஸுகத்தை அனுபவித்துக்கொண்டு பகவத் ஸந்நிதியில் பரவசமாயினர்.

**வினா** 7.- தர்ம புத்திரர் சரித்திரச் சுருக்கம் என்ன?

**விடை.**-

1. தர்ம புத்திரரும் அவர் தம்பிமார்களும் பிறத்தல் - பால்யம், பிதிர்வியோகம் - ஹஸ்தினாபுரி வாஸம்.
2. வாரணா வதம் போதல் - அரக்குமாளிகை; தப்புவித்தல் - ஏகசக்கிரபுரம் வாஸம், பகன் வதை.
3. திரௌபதீ ஸ்வயம்வரயாத்திரை - விவாஹம்.
4. இந்திரப்ரஸ்த வாஸம் - திரௌபதி விஷயமான ஏற்பாடு, அதன்பயன்.
5. மயஸபையில் அரசு செலுத்தல் - இராஜஸூய யாகம்; முன் ஏற்பாடுகள் - யாகம் நடத்தல் - முடிவு.

6. யாகத்தால் விளைந்த பிரமாதம் - மாயச்சூது - தர்மபுத்திரர் பொறுமை, வனவாஸம் போதல்.
7. வனவாஸம் - ருஷிகளின் உபதேசம் - தீர்த்த யாத்திரை-துர்யோதனனிடம் நடந்து கொண்டமாதிரி - வந்த ஆபத்துக்களும் நடந்துகொண்டமாதிரியும்.
8. அக்ஞாதவாஸம் - கஷ்டகாலங்களில் நடந்து கொண்டவிதம்.
9. துர்யோதனனோடு ஸமாதானம் செய்ய முயற்சித்தவிதம், யுத்தம்,
10. யுத்தத்தில் இவர் நடந்துகொண்டவிதம் - பராக்ரமம் - தோல்வி அடைந்தவிதங்கள் - கோபம் கிளம்பி வந்து வருந்தியவிதம் - பொய்சொல்ல நேர்ந்த அவஸரம்.
11. யுத்த ஜயத்தோடுவந்த தீரா மனக்குறைவு - காரணங்கள் - ராஜனானது - மனக்குறை தீர உபதேசம் பெற்றது - பெற்றும் மனம் அழிந்திருந்த விதம்.
12. அச்வமேத யாகம்.
13. உறவினர்களை இழந்தது, காரணங்கள் - துக்கம் - யாதவர்கள் மாண்டது.
14. மஹாப்பிரஸ்தான யாத்ரை - தைர்யம், திடம், அன்பு (நாயின் மீது காட்டியது.)
15. ஸ்வர்க்கம் போயும் துக்கம் தீராமை - பரமபதம் பெற்றது.

---

# அனுபந்தம் 1.

## மஹாபாரதக் கருத்து.

இது பாண்டவ கௌரவர்கள் சரித்திரம். இதன் சுருக்கம் ஸ்வர்க்காரோஹண பர்வக் கடைசில் தர்ம புத்ரர் சரித்திரமாகக் கூறப்பட்டது. இந்தச் சரித்திரமானது தர்மபுத்திரர்காட்டில் வனவாஸம் செய்தகாலத்திலும், யுத்தத்தின் பின்னர் பீஷ்மரால் துக்கம் தீரப்பெற்ற காலத்திலும், வெளியிடப்பட்ட உபதேச மொழிகளாலும், இடையிடையே ஏற்படும் தர்மாதர்ம விசாரணைகளாலும், கிளைக்கதைகளாலும் இவ்வளவு பெரிதாக விரிந்து கிடக்கின்றது. இதில் அடங்காத தர்ம விஷயங்களே இல்லை என்று பெரியோர் கூறுவர்.

மஹாபாரதத்திற்கு **'தர்மமே ஜயம்'** என்பது கருத்து, என்பது எல்லோருக்கும் தெரிந்தவிஷயம். இதில் ஜயம் என்பதற்கு உலகில் ஸுகமாக இருத்தல் என்றே எல்லோரும் பொருள் கொள்வர். இவ்வாறு பொருள்கொள்ளுவது பொருந்தாது என்பதை ஸ்ரீமான் ராஜம் ஐயர் அவர்கள் பின்வருமாறு திருஷ்டாந்த பூர்வமாக விளக்குகின்றார். 'உலகில் கொடியவர்கள் பணத்தில் புரண்டுகொண்டு விடாது ஸுகங்களில் மூழ்கிக் கிடக்கின்றனர். சுத்தாத்மாக்களோ சாப்பிடச் சோரின்றி இலவம பஞ்சுபோல ஆலாகப்பறந்து தீராத்துயரத்திற்கு ஆளாக விருக்கின்றனர். இதுதான் உலகில் பொதுவாகக்காணப்படுகின்றது. துர்குணாவதாரமாகிய துர்யோதனன் உற்றாரை எல்லாம் உடன்கொண்டு அரசாண்டு அனுபவித்த ஸுகத்தைப் போன்ற இஹலோக ஸுகம்பாவம்! தர்மாத்மாவான தர்மபுத்திரருக்கு கிடைத்ததா? எல்லோரும் நல்லவர்கள், அக்ஞானத்தால் கொடியவர்களாக காணப் படுகின்றனர், என்ற தயாரஸம் ஊரிக்கொண்டிருந்த தர்மபுத்ரர் கதி என்ன? அநேக காலம் காட்டில் பட்ட பாடுகளுக்கெல்லாம் முடிவில் அவருக்கு வந்த நிலையில் என்ன இஹலோக ஸுகம்கிடைத்து விட்டது! உற்றாரை எல்லாம் உடன் கொன்று அரசாளப்பெற்றதால் மனமழிந்து தீராத்துயரத்திற்கு ஆளாகி முடிவுகாலம் வரையில் துக்கத்தில் தானே ஆழ்ந்திருந்தார் (அவர் சூதாட்டத்திற்கு முன்பு இந்திரப்ரஸ்தத்தில் கொஞ்ச நாள் அனுபவித்த ஸுகத்திற்கு ஈடோ இது!) இம்மாதிரியே கற்புமுதலிய ஸ்திரீ தர்மமே உருவாக வந்த ஸீதையின் விஷயமோ கேட்கவேண்டியதே இல்லை! வேற்று தேசத்தில் கொடிய பாவியான ராவணன் கையில் அகப்பட்டுக் கொண்டு படாதபாடெல்லாம்பட்டு ஒரு குற்றமுமின்றி மீட்கப்பட்டும் அவளுக்கு வந்த வாழ்வுதான் என்ன! திடீரென்று கணவனால் தள்ளப்பட்டு துக்காதிகத்தால் பூப்பிரவேசம் செய்து மறையத்தானே வேண்டிவந்தது! ஆதலால் ஆழ்ந்து யோசிக் குங்கால் இங்கு நல்லவர்கள் நீடித்தும் ஸுகித்தும் வாழ்வது என்பதே இல்லை?'

இந்த விஷயங்கள் மூலமாகப் பார்க்கில் கிருஷ்ண பகவானைபாண்டவ ஸஹாயர் என்று கூறவே முடியாது. அவர் யுத்தத்தில் இருதிரத்தாரையும் பக்ஷடாதமின்றி அழியும்படி செய்து, தாங்கள் வனவாஸத்திற்கு முன்னர் அடைந்தது அல்லது துர்யோதனன் அடைந்தது ஆகிய இவை போன்ற யாதொரு ஸுகமும் அணுகவொட்டாமலே அடித்துவிட்டார். இவர் எப்படி பாண்டவ ஸஹாயராவார், என்ற சங்கைபிறக்கும். ஆதலால் ஜயம் இஹலோக ஜயம் அல்ல. வேறுயாது? ஜயம் என்பது உலகவிஷயங்களால் மாறிமாறி வரும் ஸுகங்களில் ஈடுபட்டு

அழுந்தாமலும், துக்கங்களில் மனமழியாமலும், மாறாதுநிற்கும் நிலையைத்தந்து அதன்மூலமாக உலகையும் அதன் விஷயங்களையும் அலக்ஷ்யம் செய்து தாக்கற்று நிற்பதே ஜயம் என்னப்படும். ஆதலால் **தர்மமே ஜயம்** என்ற வாக்கியத்திற்கு தர்மமானது (யாதுவரினும் வரட்டும் நம்மை என்ன செய்ய முடியும் என்று சாந்தமாய் அசைவற்றிருக்கும் உண்மையான தைர்யத்தை) மனோபலத்தைக் கொடுக்கும் என்பதே பொருள்.

இந்தத் தைர்யம் கொடியவர்களுக்கு வரும் வீண் அஹங்காரம் என்று எண்ணி விடக்கூடாது. இம்மாதிரியானவர்கள் தைர்யம், அவர்கள் நிலை நன்றா இருக்கும் வரையில் நின்று, அவர்களுக்கு உள்ளவிஷய ஆசையை அதிகப்படுத்தும். கஷ்டகாலங்கள் வந்துவிட்டால் அவர்கள் தைர்யம் 'நம்மால் ஒன்றும் செய்ய முடியவில்லையே!' என்ற துக்கரூபமாகவும் கோப ரூபமாவும் மாறி, அவர்களை ஓயாது வருத்திக்கொண்டிருக்கும். ஆகவே இம்மாதிரிதைர்யம் எப்பொழுதும் துக்கம் அக்ஞானம் முதலியவைகளையே அதிகப்படுத்தும். தர்மத்தால் உண்டாகும் மனோ தைர்யம் இத்தன்மையது அல்ல. அது உலகத்தின் நிலையாமை, தர்மத்தால் கஷ்டகாலத்தில் உண்டாகும் ஒருவித சாந்தம், ஸுக்காலத்தில் மனதைப் பறிகொடுத்து அதில் ஆழ்ந்து விடாமை ஆகிய இவைகளை அங்கமாக உடையது. தர்மத்தால் வரும் தைர்யம் ஸதா ஒருவித சோகத்தோடு ஸம்பந்தப்பட்டிருக்கும். இது 'விஷ்ய ஸம்பந்தம் துக்கஹேது இதன்மத்தியில் ஜாக்கிரதையாகக் காலம் கழிக்கவேண்டுமே!' என்ற எண்ணத்தால் ஏற்படுவதே ஒழிய, 'நமக்கு விஷய ஸுகம் வரவில்லையே!' என்ற பொறாமையால் வருவதல்ல. இந்த தர்மத்தால் வரும் தைர்யத்தால் காக்கப்பட்டு உலகத்தில் உயிர்வாழ்பவர்கள் மனோநிலையை ஒரு மஹான் பின்வருமாறு எடுத்து விஸ்தரிக்கிறார்.

“யதார்த்ததிலேயே இவ்வுலக இன்பங்களைப்போல் நமக்கு விரோதிகள் வேறு ஒன்றும் இல்லை. நம்முடைய நிஜஸ்வரூபத்தை நம்மிடமிருந்து மறைத்து, ‘நாளைவரும் நெல்குவியலினும் இன்றுள்ள பிடிவிதைமேல்' என்று விழுங்கி வீணேநாள் கழிக்கும் நீக்ரோ ஜாதியாரைப்போல் நாம் நாளை அடையக் கூடிய பிரஹ்மானந்த ஸுகத்தை மறந்து இன்றுள்ள சிற்றின்பத்தில் முழுகி மயங்கும்படி நம்மைச் செய்கின்ற, அற்பமாயும், அநித்யமாயும், பயனற்றதாயும், தமோகுண ஸம்பந்தமாயும், துக்ககரமாயும், அஸுரகுண ஸ்வரூபமாயும், நமக்கும் பிறருக்கும் ஜனனமரண ஸம்ஸாரமாகிய அனர்த்தபரம்பரைக்கு ஹேதுவாயும், உள்ள இவ்வுலக இன்பங்கள் உயர்ந்தோரால் விரும்பற்பாலனவன்று. ‘இங்கற்றவர்க்கு அங்குண்டு, ' என்றபடி அநேகருக்கும் துன்பமே ஒருபெரிய மோக்ஷஸாதனமாயிருக்கிறதாதலால், தனவானுடைய தனத்தையும், ரூபவானுடைய ரூபத்தையும், போகத்தில் உல்லாஸமாய்க் களித்திருப்பவரது போகத்தையும், கண்டு நாம் பொறாமை கொள்ளாது, அவற்றிற்கு ஆளாயிருப்போருக்கு இரங்கி, துன்பரூபமாகக் கடவுளது அனுக்ரஹத்தைப் பெற்றோரைக் கண்டு கை கூப்புவதே ரஹஸ்யமான தத்துவ வழியாம்.”

ஆகவே எந்நிலையிலும் இம்மாதிரியான மனோ ஜயத்தை கொடுப்பதே **தர்மத்தின்** பலன். இப்பொருளுடைய **தர்மமே ஜயம்** என்பதே இமமஹாபாரதத்தின் கருத்து.

மஹாபாரதத்தின் பொதுக்கருத்து இவ்வாறு இருப்பதோடுங்கூட அதன் கதாபாகங்களை தனித்தனியாக எடுத்து நோக்குங் காலத்திலும் ஒவ்வொன்றிலும் ஒன்று அல்லது பல சிறந்த கருத்துக்கள் அடங்கியிருக்கும். இவைகளை இம்மூன்று பாகங்களிலும் ஆங்காங்கே இடத்திற்குத்தக்கவாறு எடுத்து எழுதியிருக்கின்றது. இங்கு அவைகளை எடுத்து விஸ்தரிக்கப்புகின் விரியும். ஆதலால் அக்கதையின் பெயர் அகராதியை இங்கு அமைக்கப்பட்டிருக்கிறது. இதன் மூலமாக இக்கதைகள் வரும் பாகங்களை எளிதில் எடுத்துப் பார்த்து அவைகள் இத்தன்மையை உடையவைகள், அவைகளுள் அடங்கி இருக்கும் கருத்துக்கள் இன்னவை என்பவைகளை அறிந்து கொள்ளலாம். இதில் 1 என்ற மாதிரியான இலக்கம் மஹாபாரத வினாவிடைப் பாகத்தையும் 32 என்ற மாதிரியான எண், வினாவையும் குறிக்கும்.

---

# அனுபந்தம் 2.

## மஹாபாரதத்தின் உட்பொருள்.

**பீடிகை:-** இம்மஹாபாரதம் நீதிக்களஞ்சியம். இதில் அடங்காத கதைகளும் நீதிகளும் இல்லவே இல்லை என்று கூடக் கூறிவிடலாம். இப்படி வெளிப்படையாக எல்லோருக்கும் நீதிகளைக்கற்பித்த போதிலும், வேதரஹஸ்யமாகிய ஸத்விருத்தி களால் அஸ்த்விருத்திகளை அடக்கி, 'சவம் சுடும் தடி போல' அந்த ஸத்விருத்திகளும் ஆத்மஸாக்ஷாத்காரத்தில் நீங்கப் பெற்று, முடிவில் 'மனதற்ற பரிசுத்த நிலையை' அடைவது, என்பதை இந்த இதிஹாஸம் நன்றாகவும், விஸ்தாரமாகவும் எடுத்துக் கூறுகிறது. இந்த வேதரஹஸ்யம் இவ்வாறு இந்த மஹாபாரதம் என்னும் ஸமுத்திரத்தில் மறைந்து கிடக்கின்றது என்பதை ஆராய்ச்சி செய்து எல்லோரும் எளிதில் உணர்ந்து மனனம் செய்து பரிசுத்தராக ஸஹாயமாக இருக்கும் பொருட்டு அதை ஒருவாறு சுருக்கமாக வெளியிடுவோம்.

(1) **மஹாபாரதம்:-** பிரஹமாண்டம் என்ற ஹஸ்தினாபுரியில், ப்ராணிகளின் கர்மம் என்ற வ்யாஸரால், ராஜஸ் ஸாத்விகம் (அம்பை:தாமஸம்) என்ற அம்பிகை அம்பாலிகைகளிடம் அக்ஞானி என்ற மூத்தவனாகிய த்ருதிராஷ்டிரனும், ஸாத்விகன் என்ற பாண்டுவாகிய இளையவனும், உண்டானார்கள். இவர்களுள் மூத்தவனுக்கு அகங்காரம் என்னும் காந்தாரி என்ற மனைவி வாய்க்க, அவளிடம் காமம் க்ரோதம் முதலிய மனோவிகாரங்கள் என்னும் துர்யோதனன் துச்சாஸனனாதி 100 பிள்ளைகளும், துஷ்பிரவருத்தி என்ற துச்சலையாகிய பெண்ணும் பிறந்தன . ஸாத்வீகனோ உபநிஷத் என்ற குந்தியையும், சிரத்தை என்ற மாத்ரியையும் மணந்தான். முன்னரே உபநிஷத் ஸம்பந்தமாக குருஸஹாயமற்ற புத்திபலம் என்னும் ஸூர்யனால் ஆபாஸ ஞானம் என்ற கர்ணன் மூத்தபிள்ளையா கப் பிறந்திருந்தான் . ஸம்ஸாரம் என்னும் காட்டில் ஸாத்விகன் அலைந்து திரிந்ததில் உபநிஷத்சிரத்தைகளுடன் உள்ள ஸம்பந்தம் சிலகாலம் விட்டுப்போக ஸாதுஸங்கம் என்னும் வரத்தின் பலத்தினால் உபநிஷத் ஸம்பந்தமாக சிரவண, மனன நிதித்யாஸனம் என்ற தர்ம பீம அர்ச்சுனர்களும் சிரத்தை ஸம்பந்தமாக சௌசம் ஸத்யம் என்ற நகுலஸஹாதேவர்களும், முறையே நியம ப்ராணாயாம ப்ரத்யாஹார தாரணத்யானம் என்ற யம, வாயு இந்திர, அச்வனீ தேவதைகள் அனுக்ரஹத்தால் வெளியாயினர். உபநிஷத் ஸம்பந்தமாகவே முதலில் ஆபாஸ ஞானம் என்ற கர்ணன் பிறந்திருந்தபோதிலும் அதன் தன்மையால் அதற்கு காமக்ரோதி தூர்யோதனாதியரோடேயே ஸம்பந்தம் ஏற்பட்டு பற்று அதிகமாகி விட்டது. சிரவணாதி பாண்டவர்கள் காமக்ரோதிகளான தூர்யோதனாதியர்களால் மிகவருத்தப்படுத்தப்பட்டு, அவர்களால் ஏற்படுத்தப்பட்ட தேஹாபிமானம் என்னும் அரக்குமாளிகையிலிருந்து தப்பிப் பிழைத்தார்கள் . ப்ராணிகள் காமமெனும வ்யாஸர் ஸஹாயத்தாலும் நிதித்யாஸனம் என்னும் அர்ச்சுனன் சஞ்சல ஸ்வபாவமுடைய மனம் என்னும் லக்ஷ்யத்தை அடித்ததாலும் ச்ரவணாதி பாண்டவர்கள் ஸாதன சதுஷ்டயம் என்னும் த்ரௌபதியை அடைந்தார்கள். விவேகம் என்னும் விதுரரால் சற்றுத் தெளிந்த அக்ஞானியாகிய திருதராஷ்டிரன்

சிரவணாதிகளாகிய பாண்டவர்களை அழைத்துவர, உடனே காமாதிகளான தன் பிள்ளைகளால் கலைக்கப்பட்டு சிரவணாதி பாண்டவர்களிடமிருந்து அவன் பிரிய வேண்டி வந்தது. ஞானாப்யாஸத்திற்குத் தக்க சுபதேசமாகிய இந்திரப்ரஸ்தத்தில் ஸாதனசதுஷ்டயமாகிய திரௌபதியோடு சிரவணாதி பாண்டவர்கள் வாழ்ந்து வந்த நாளில், நிதித்யாஸனம் என்னும் அர்ச்சுனனுக்கு சித்தப்ரஸாதம் என்னும் தீர்த் தயாத்திரையால் ஸுகங்கள் என்னும் மனைவிகள் ஏற்பட முடிவில் பரம குருவாகிய கிருஷ்ணனது மங்களம் (ஸூக்ஷ்ம உபதேசம்) என்னும் ஸஹோதரியாகிய ஸுபத்ரை கிடைத்தாள். அவளிடம் (உபதசம் திடப்படாமையால்) அபக்வஞானம் என்னும் அபிமன்யூ உண்டானான்.

இப்படி இருக்கையில் சிரவணாதிகளால் உண்டான பரோக்ஷ ஞானத்தீயால் எரிக்கப்பட்ட ஜகத்ஸத்ய புத்தி என்னும் காண்டவ வனத்தில் மிஞ்சியமாயை (காரணசரீரமே ஆத்மா) என்னும் மயனால் ஏற்பட்ட ஜாக்ரத்ஸ்வப்பம என்னும் ஸபையில் துக்கப்படாமல் ஸத்விஷயானுபவம் என்னும் அரசாட்சியை செய்து ஸத்கர்மானுஷ்டானம் என்னும் ராஜஸூய யாகத்தை சிரவணாதியான பாண்டவர்கள் செய்தார்கள். இதனாலும் ஜாக்ரத்ஸ்வப்கம் என்னும் மயஸபையில் ஸத்விஷயானுபவத்தாலும் பீடிக்கப்பட்ட காமக்ரோதாதிகளான துர்யோதனாதியர் கள் கிளம்ப மமகாரம் என்னும் சகுனியை முன்னிட்டுக் கொண்டு விஷபாஸக்தி யாகிய சூதாட்டத்தை ஏற்படுத்தினர். சிரவணம் என்னும் தர்மபுத்ரர் அதில் மனனாதி ஸஹோதரர்களையும், ஸாதன சதுஷ்டயம் என்னும் ஸ்திரீயையும் இழந்தார். அப்பொழுது காமம் என்னும் தூர்யோதனனால் தூண்--டப்பட்ட க்ரோதம் என்னும் துச்சாஸனன் ப்ரவிர்த்தித்து ஸாதன சதுஷ்டயம் என்னும் திரௌபதியைத் தாக்கி, அதன் பலத்தை அறிந்து கொடுக்க வேண்டும் என்னும் துகிலுரிதலைச் செய்தான். அப்பொழுது பரமகுருவாகிய கிருஷ்ணன் ஸஹாயத்தால், இந்தப்ரயத்னம் வீணாக தனது நிலை என்னும் (திரௌபதி) கேள்விகளாலும், விவேகம் என்னும் விதுரர் போதனையாலும், அக்ஞானம் என்னும் திருதராஷ்டிரன் சற்றுத் தெளிய ஸாதன சதுஷ்டயம் என்னும் திரௌபதி தொந்திரவிற்கு தத்காலம் ஆளாகாது காமாதி துர்யோதனாதியர்களிடமிருந்து விடுபட்டாள். உடனே சிரவணாதி பாண்டவர்கள் விஷயாஸக்தி என்னும் அடிமைத்தனம் நீங்கினர். மமகாரம் என்னும் சகுனியின் பலத்தால் திடீரென்று மறுபடியும் விஷயாஸக்தி என்னும் சூதாட்டத்தில் இழுக்கப்பட்டு ஸம்ஸார பந்தம். என்னும் வனவாஸமும் பாமரத்வம் என்னும் அக்ஞாதவாஸமும் சிரவணாதிகளான பாண்டவர்களுக்கு ஏற்பட்டன.

ஸம்ஸாரம் என்னும் காட்டில் வாஸம் செய்யும் காலத்தில் சிரவணாதி யாகிய பாண்டவர்வள் காமம் (ஆசை, என்னது. என்ற அபிமானம்) த்வைதம் (வைசித்ரியம்) என்னும் காம்யகத்வைதவனங்களிலேயே அடிக்கடி மாறி மாறி பந்தப்பட்டு வாஸம் செய்து வந்தனர். இப்படி இருக்கையில் நிதித்யாஸ்னம் என்னும் அர்ஜுனன், அப்யாஸம் என்னும் தபஸிற்கு சிரவணாதி பாண்டவர்களைப் பிரிந்து போகவேண்டி வந்தது. அப்பொழுது அவர்கள் தம்மைவிட அதிகமாகப் பாடுபட்ட நரன் என்ற நளன் கதையைக் கேட்டும், சித்தப்ரஸாதம் என்னும் தீர்த்தயாத்திரை செய்தும் தேறி இருந்தனர். இடையிடையே ஸாதனசதுஷ்டய மென்னும் திரௌபதியால் தூண்டப்பட்டு மனனம் என்னும் பீமன் ஸத்வாஸனைகள் என்னும்

புஷ்பங்களை மிகுந்த கஷ்டத்தின் பேரில் தேடிக்கொடுத்து வந்தான். காமாதி துர்யோதனாதியரை அழிப்பதற்கு வைராக்யம் என்கிற சிவனிடமிருந்து மன உறுதி என்னும் பாசுபதம் முதலிய அஸ்த்ரங்கள் பெற்று, தேஹாபிமான தியாகம் (விடுதல்) என்னும் தேவலோகம் போய், எளிதில் ஜயிக்க முடியாத சில கெட்ட வாஸனைகளாகிய நிவாதகவச காலகேயர்களை நிதித்யாஸனம் என்னும் அர்ஜுனன் கொன்று சிரவணாதிகளான பாண்டவர்களிடம் திரும்பிவந்தான். வந்தபின் இவர்கள் ஸாது ஸங்கமாகிய ரிஷி உபதேசம் பெற்று வந்தனர். இப்படி இருக்கையில் காமாதிகளான தூர்யோதனாதிகள் தமது விஷயஸுகமாகிய வாழ்க்கை ஸுகத்தைக் காட்டி சிரவணாதிகளான பாண்டவர்களை வருத்த வந்தனர். இவர்கள் ஸுகானுபவகால முடிவு என்னும் சித்ரஸேனன் என்ற கந்தர்வனால் பறக்க அடிக்கப்பட, அவர்கள் தப்பிப்பிழைக்க சிரவணாதிகளான பாண்டவர்கள் ஸஹாயமே வேண்டியிருந்தது. பின்னர் காமாதி துர்யோததிகளால் தூண்டப்பட்ட 'பூர்வவாஸனை என்னும் தூர்வாஸ முனிவர் ஸாதன சதுஷ்டயம் என்னும் திரௌபதி மூலமாக வந்த குருஸந்நிதானம் என்னும் பகவான் அருளால் அடக்கப்பட்டார். பின்னர் துர் அபிமான மென்னும் ஜயத்ரதனால் ஸாதன சதுஷ்டயம் என்னும் திரௌபதி அபஹரிக்கப்பட மனனமென்னும் பீமனால் எளிதில் விடுவிக்கப்பட்டாள். மேல் முடிவான பரீக்ஷையாகிய யக்ஷப்ரச்னத்தில் சிரவணம் என்னும் தர்மபுத்ரர் தெளிவு வெளியாகியது.

இப்படியிருப்பினும் முன்னர் ஏற்பட்ட விஷயாஸக்தி என்னும் சூதாட்ட பலத்தால் பாமரத்வம் மறுபடியும் சிராவணாதிகளான பாண்டவர்களை வந்து மூடிக்கொள்ள, விஷயம் என்னும் விராடராஜ்யத்தில் இவர்கள் உறுமாறி மூழ்கினர். இதில் ஸாதன சதுஷ்டயமாகிய திரௌபதிக்கு அஸம்பாவனை விபரீதபாவனை என்னும் கீசக் உபகீசகர்களால் அபாயம் ஏற்பட அவர்களை மனனம் என்னும் பீமன் சிதற அடித்துத்தள்ளினான். இந்த ஸமயத்தில் சிரவணாதி பாண்டவர்கள் மறைந்து கிடந்தஇடம் உணர்ந்து காமாதி துர்யோதனாதிகள் அவர்களை மறுபடியும் அலைய விடமுயல அவர்களை கஷ்டம் என்னும் யுத்தத்தின் மூலமாக இவர்கள் அடக்கினர். பின்னர் சிரவணமாகிய பாண்டவர்கள் பாமரத்வமாகிய அக்ஞாதவாஸம் தீர்ந்து வெளிவந்தனர்.

இந்த ஸமயத்தில் காமாதிகளான பிள்ளைகளால் தூண்டப்பட்டு அக்ஞானியாகிய திருதிராஷ்டிரன் இவர்களை எவ்வளவோ ஏமாற்றி மறுபடியும் ஸம்ஸாராதிகளில் அழுத்தப்பார்த்தான். சுபவாஸனை என்னும் சல்லியனும் விஷயஸுகம் என்னும் விருந்தால் பிரிக்கப்பட்டான். பக்தி (சிரத்தை) என்னும் கிருஷ்ணன் தூதால் அக்ஞானியாகிய த்ருதிராஷ்டிரனை சிரவணாதி பாண்டவர்கள் அடக்க முயன்றனர். முடியாமற்போக ஸம்ஸாரப்பரிவால் வரும் கஷ்டம் என்னும் யுத்தம் நேர்ந்தது. அப்பொழுது விவேகம் என்னும் விதுரரும் பக்ஷபாதம் என்ற பலராமரும் இருபக்கத்திலும் சேராது ஒதுங்கினர். யுத்தகளமாகிய பிரபஞ்சத்தில் ஸுவாஸனையாகிய பாண்டவ ஸஹாயர்களும், துர்வாஸனைகளாகிய பாண்டவ வைரிகளும் வந்துநின்றனர். காமாதியான துர்யோதனாதி ஸம்பந்தத்தால் ஞானம் குறைந்த ப்ரஹ்மசர்யம், அஹிமலை என்னும் பீஷ்ம, த்ரோணர்களும் இவைபோன்ற ஸஹாயகுணமாகிய விகர்ணனாதியரும் எதிரிகள் பக்கம் நிற்கும்படி நேர்ந்தது.

பரமகுருவால் தூண்டப்பட்டு இந்திரியங்கள் என்னும் குதிரைகள் பூட்டப்பட்டிருந்த தேஹரதத்திலேறி யிருந்த நிதித்தியாஸனம் என்னும் அர்ஜுனன் இவ்வாறு ஸஹாயமாக இருக்ககூடியவர்களைக் கொல்லும்படி நேருகின்றதே என்ற துக்கத்திற்கு ஆளாக அப்பொழுது பரம குருவாகிய கிருஷ்ணன் உபதேசமாகிய பகவத்கீதை பிறந்தது. இதனால், செய்து தீரவேண்டிய கடமைகளை ராகத்வேஷம் இன்றி செய்வதே உலகில் தேகம் நழுவும் வரையில் முமூக்ஷு நடக்கவேண்டிய மார்க்கம் என்று தேறித் தெளிந்து நிதித்தியாஸன மென்னும் அர்ஜுனன் ஸம்ஸார பந்தம் (பலவித விஷயானுடவம்) என்னும் யுத்தத்தைத் கூசாது தொடங்கினான். சிரவணம் என்னும் தர்மபுத்திரர் எதிரிகள் பக்கத்திலிருந்த ப்ரஹமசர்யம் என்னும் பீஷ்மரையும் அஹிம்ஸை என்னும் துரோணரையும் நன்கு மதித்தலாகிய நமஸ்காரத்தைச் செய்து யுத்தம் தொடங்கினர். ப்ரஹ்மசர்யமாகிய பீஷ்மர் சண்டை யிட்ட காலத்தில் ஆபாஸக்ஞானமாகிய கர்ணன் சண்டையிட முடியாமல் போய் விட்டது. இதில் பரமகுருவாகிய கிருஷ்ணன் கலவாமலே ஸாக்ஷி மாத்திரமாக நிற்க அவர் ஸந்நிதான விசேஷத்தாலேயே ப்ரபஞ்சம் முழுவதும் தத்வஞானம் என்னும் முடிவைச் சென்றடையக்கூடிய அனுபவம் என்னும் யுத்தம் நடை பெற்றது. இதில் நிதித்யாஸனம் எனும் அர்ஜுனன் ஸ்திரீ ஸங்கம் என்னும் சிகண்டியின் ஸ்ஹாயத்தால் காமாதி துர்யோதனாதிகள் பக்கம் சிக்கியிருந்த ப்ரஹ்மசர்ய மென்னும் பீஷ்மரை வீழ்த்தினான். சிரவணாதிகளான பாண்டவர்கள் நிதித்யாஸனமான அர்ச்சுனன் இல்லாதகாலத்தில் ஜயத்ரதன் என்னும் அபிமான பலத்தால் கொஞ்சம் தடுக்கப்பட்ட அபக்வஞானம் என்ற அபிமன்யூ இறந்தான். நிதித்யாஸனம் என்னும் அர்ஜுனன் இதனால் தூண்டப்பட்டு மிகுந்தகஷ்டத்தின் பேரில் வெகு தந்திரத்தாலும், முக்யமாக பரம குருவாகிய கிருஷ்ணன் ஸஹாயத்தாலும் அபிமானம் என்னும் ஜயத்ரதனை அழித்தான். பின்னர் அஹிம்ஸையாகிய த்ரோணர் யக்ஞம் என்னும் திருஷ்டத்யும்னனால் இறந்தார். சுபவாஸனை என்னும் சல்லியனால் துர்பலப்படுத்தப்பட்ட ஆபாஸ ஞானமாகிய கர்ணன் கையிலிருந்த குதர்க்கம் என்னும் இந்திரசக்திக்கு ஹடயோக மென்னும் கடோத்கசனை இறைகொடுத்தும், வாஸனாபலம் எனும் நாகாஸ்த்ரத்திற்கு பரகுருவாகிய கிருஷ்ண ஸஹாயத்தால் தணிந்து தப்பித்துக்கொண்டும், முடிவில் சுருதிமதயுக்தி என்னும் ஒரே பாணத்தால் ஆபாஸக்ஞானம் எனும் கர்ணனை நிதித்யாஸனம் எனும் அர்ஜுனன் கொன்றான். பின்னர் மனனம் எனும் பீமனால் காமக்ரோதமாகிய துர்யோதனதுச்சாஸனாள் இறந்தனர். இதன் பின்னும் அபரோக்ஷ ஸாக்ஷாத்காரம் ஏற்படாமையால் ப்ரஹ்மலோக மென்கிற ஹஸ்தினாபுர ராஜ்யம் கிடைத்தது.

இப்படி இருந்தும் சிரவணாதிகளான பாண்டவர்களுக்கு மோக்ஷஸுகம் ஏற்படாததால் ப்ரஹ்மசர்யம் எனும் பீஷ்மரால் ப்ரஹ்மலோகத்தில் தேறி ஜீவன் முக்தி நிலையாகிய ஸ்வராஜ்யத்தில் நிலைபெற்று ப்ராப்தானுபவமாகிய அரசாட்சியைச் செய்து பரமபதம் என்னும் விதேக முக்தியில் மிகுந்த கஷ்டத்தின் பேரில் சிரவணாதி பாண்டவர்கள் அமர்ந்திருந்தனர்.

*கேட்டலுடன் சிந்தித்தல் கேடிலா மெய்த்தெளிவால்*
*வாட்டமறு உற்பவகோய் மாறுமோ - நாட்டமுற்று*

*மெய்யான நிஷ்டையினை மேவினர்கட்கன்றே தான்*
*பொய்யாம் பிறப் பிறப்புப்போம்.*

ஆகவே துர்வாஸனையை உடைய ஜீவனாகிய த்ருதிராஷ்டிரனுக்கும் அவன் பிள்ளை முதலியவர்களுக்கும், ஸத்வாஸனையை உடைய ஜீவனாகிய பாண்டுவுக்கும் அவன் பிள்ளை முதலியவர்களுக்கும் சண்டை என்னும் ஸம்ஸாரர். கஷ்டம் வர, அதில் முன்னவனைச் சேர்ந்தோர் எல்லோரும் மடிந்து போகப் பின்னவனைச் சேர்ந்தோர் முக்தி என்னும் ஜயத்தை பெற்றார்கள் என்பதே, இதில் புதைந்து கிடக்கும் உட்கருத்து.

மஹாபாரதத்தின் பொதுக்கருத்து இம்மாதிரி இருக்க அதனுள் அடங்கியிருக்கும் சிற்சில பாகங்கள் முமுக்ஷுக்களால் மிகச் சிறந்தவைகள் எனப்பாராட்டப்பட்டு அவ்வவைகளுக்கு ஏற்ற உட்கருத்துக்கள் அவர்களால் மனனம் செய்யப்பட்டு வருகின்றன. அவைகளுள் சிலவற்றை இங்கு எடுத்துக் காட்டுவோம்.

**பகவத்கீதை: -** அர்ஜுனன் எந்த தத்வத்தைக் குறிக்கிறான். பகவான் எதைக் குறிக்கிறார். 'நான் தான் ப்ரபஞ்சங்களை அடக்கியாளும் ஈசுவரன். எனக்குப் பிறப்பாவது ஆதியாவது கிடையாது' என்று கிருஷ்ண பரமாத்மாவே கீதை அத் 10 சு-3 முதலியவற்றில் கூறுகிறார். பகவானே தம் விஷயத்தில்சிறந்த ஆதாரம். இவர் தான் 'எல்லாப்ராணிகள் ஹிருதயத்திலும் வஸிக்கும் ஆத்மா, ப்ரபஞ்ச ஸ்ருஷ்டி ஸ்திதிலம்ஹார கர்த்தா, (அத்10சு18) மறைந்து கிடக்கும் ஏக வஸ்து, சந்திர ஸூர்ய நக்ஷத்திரங்கள், மனிதர்கள், ஜீவராசிகள் முதலிய வகல ப்ரபஞ்சத்திலும் ஸாரபூதமான சிரேஷ்ட வஸ்து ; போக்கு வரத்து, பிறப்பு இறப்பு அற்றது; நித்யகுரு, ஈச்வரன், பரமாத்மா. அர்ஜுனனோ நரன், மனிதனுள் யுத்தி பகுத்தறிவு ரூபமாக இருக்கும் ஸூக்ஷ்மமான அந்தஃகரணம் என்னும் மனமே. இது ஸரியான வழியில் திருப்பப்பட்டால் இதில் பரம்பொருள் நன்றாகப் பிரதிபலிக்கும். ப்ரக்ஞை, ஸ்தாவரங்களில் ஸுஷப்தி நிலையிலும், ஜங்கமங்களில் ஸ்வப்ன ஸ்திதியிலும், மனிதர்களில் ஜாக்ரத் ஸ்திதியிலும் இருக்கிறது. இம்மாதிரி ஜாக்ரதை ஸ்திதியில் வருவதற்கு உள்ளிருக்கும் பரம்பொருளது ஸூக்ஷ்ம உபாதியாகிய மனம் இருப்பதே காரணம். கிருஷ்ணன் ஆதி முதல் கொண்டே அர்ஜுனனிடம் மிகப்பற்றுடையவராக இருந்து எப்பொழுதும் அவனோடேயேவிடாது இருந்தார். அதாவது ஆத்மா எப்பொழுதும்: மனத்தோடேயே பிரியாது இருந்து அதைத் தொழிற்படவும் தூண்டும். கிருஷ்ணன் தன் தங்கையை அர்ஜுனனுக்குக் கல்யாணம் செய்து கொடுத்து, எல்லாவித ஸுகங்கள் ஸம்பாதிப்பதிலும் அவனுக்கு சிறந்த ஸஹாயமாக இருந்து, யுத்தகளத்தில் கொண்டு நிறுத்தி, தேரும் ஒட்டி, அவனுக்கு ஜயம்வரும்படியும் செய்கிறார். இவைகளுக்கு எல்லாம். இப்பொழுது வேறு பொருள் ஏற்படும். ஆத்மாவின் ஸஹாயத்தாலேயே தான் மனம் ப்ரபஞ்சத்துடன் ஸம்பந்தப்பட்டு அனுபவத்தில் முதிருகிறது. ஸுகத்திலாகட்டும் துக்கத்திலாகட்டும் பிரியாது ஆத்மா மனத்தோடு இருக்கின்றது, (ஸ்கதுஃகாதிகளுக்கு இதுவே ஆதாரம்) வாழ்க்கையாகிய கஷ்டத்தில் அதைப்புகும்படி செய்து, அதில் அதை நன்றாக வழிகாட்டி நடத்தி முடிவில் ஸ்தஸ்த ஆகிய விருத்திகள் (பாண்டவஸஹாயரும் துர்யோதனாதியரும்) அழிவதால் ஜயம் பெறும்படி செய்கின்றது. ஆகவே கிருஷ்ணன் பரமாத்மா,

அர்ஜுனன்மனம், இந்த மனத்தினால் தான் ஞானமும் ஜபமும் பூர்ணமாக ஏற்படவேண்டியது. இதனால் ஆத்ம ஞானம் ஸித்திக்கும். பகவத்கீதை என்பது துக்ககரமாயும் பயங்கரமாயும் உள்ள யுத்தாரம்ப லமயத்தில் கிருஷ்ணனுக்கும் அர்ஜுனனுக்கும் ஏற்படும் ஸம்வாதம்; அதாவது, பிரபஞ்ச விஷயங்களில் ருசிகொள்ளாது துக்கதிருஷ்டி்ஃபால் அதை அணுகமுடியாது தத்தளிக்கும் மனத்திற்கு ஆத்மா ஸத்வஸ்து விஷயமாகக் கூறும் உபதேசம்.

இது பிறந்த குருக்ஷேத்ரமென்பது அநேகம் பேர் இறந்த ஸுமார் விஸ்தாரமான ஓர் யுத்தபூமி என்ற எண்ணம் நமது மனதை விட்டு அகலும். பூமிசாஸ்திரிகள், சரித்திரம் எழுதுவோர் ஆகிய இவர்கள் இதை இன்னவிடம் என்று கண்டு பிடித்து அதற்குத் தகுந்த ஆதாரங்கள் காட்ட மிக முயன்று கொண்டிருந்த போதிலும் கிருஷ்ணார்ஜுன ரஹஸ்யம் உணர்ந்த முமுக்ஷு இவைகளை ஒரு பொருட்டாக மதியான். ஆத்மா, ஸ்வப்னம் காணுவதுபோல, ஜீவனாகத் தன்னைக் கண்டு நாளடைவில் விடுக்கமுடியாப் புதுர்களுக்கு இடையில் தான் கிடந்துழலு வதாக எண்ணும் அவஸ்தைக்கு இடமாகிய நித்யமாயும், அளவிலடங்காததாயும் உள்ள ப்ரபஞ்சமே இந்தகுருக்ஷேத்ர பூமி. பத அமைப்புப்படி நோக்கின் குருக்ஷேத்ரம் என்பதற்கு உண்டாக்கப்பட்ட இடம் என்ற பொருள் ஏற்படும். அதாவது மனத்தின் காரியமாம் ப்ரபஞ்சம் என்பதாகும். நெருப்புப் பொறியை ஓர் ரத்னம் என மதித்து மருளுவது போலவே மனமும் தன் காரியமான ப்ரபஞ்சம் ஸுபூரணமானது என்று மதிக்கிறது. ஆறுதாண்ட உதவியாகக்கிடைத்த தொப்பக்கட்டை பின்னர் பிணமாகக் காணப்படுவதுபோல ஸுகபூர்ணம் என்று மதிக்கப்பட்ட உலகம் நாளடைவில் துக்க பூர்ணமான யுத்த பூமியாகிறது. ஆகவே விசாரணை செய்யயத்தனிக்கும் மனதிற்கு துக்கம் நிறைந்ததாகக் காணப்படும் இந்தப்ரபஞ்சமே குருக்ஷேத்ரம் என்னப்படுவது. உண்மையான அல்லது போலியான நமது ஸ்நேஹிதர்களும் உறவினர்களும், இந்தப் பிரபஞ்சத்தில் நமக்கு எதிரிகளாகி விடுகின்றனர். நாம் இதுவரையில் நேசித்தவைகளையே கொன்று தீரவேண்டி வருகிறது. இந்த யுத்தத்திற்கு சிலர் ஸஹாயம் வேண்டும்; அதாவது மனத்தின் கெட்ட விருத்திகளை நல்ல விருத்திகள் மூலமாக ஜயிக்கவேண்டும். முடிவில் இருதிறத்தாரும் நாசமாகிறார்கள், அதாவது முடிவான நிர்வாண நிலையில் மனச் சஞ்சலம் நீங்க, ராகத்வேஷம் இருந்த விடம் தெரியாமல் போய்விடும். மனம் தனது உண்மையான ஆனந்த நிலையில் நிலை பெற்றிருக்கும்.

இதை விளக்கப் பின்வருமாறு விஸ்தரிப்போம். 'பொன் நில மாதராசை' முதலியன முதலில் ஸுக்கரமாகத் தொடங்கி துக்கமாக முடியும். நம்மைச் சேர்ந்தவர்கள் நமக்கு விரோதிகளாகவும் ஏற்படுவர். கல்வி, கற்பனாவிஷயங்கள், தர்மம், கடவுள் ஆகிய சிறந்த விஷயங்களில் ஏற்படும் பற்றுக்களால் இவ்வாசைகளை ஜயிக்கவேண்டும். இவைகள் தான் யுத்தத்தில் நமக்கு ஸஹாயம். ஆத்ம ஸம்பந்தமாகவும் உண்மையை உள்ளபடி உணர்த்தி பந்தம் நீக்கி இரண்டற்ற ஆத்மாவாக நிற்கும் விஷயமாகவும் முற்கூறியவைகள் சிறந்தனவே ஒழிய அத்யந்த மேன்மை அவைகளிடம் இல்லை.

துக்கம் நிறைந்ததாகப் பகுத்தறியப்படும் ப்ரபஞ்சமாகிய குருக்ஷேத்ரத்தில் பகுத்தறிவோடு கூடிய ஜீவனே வீரன்! தேஹமே ரதம். 'ஜீவனே ரதிகன், தேஹமே ரதம், புத்தியே ஸாரதி, விருத்திகளே கடிவாளங்கள், இந்திரியங்களே குதிரைகள், விஷயங்களே பாதைகள்' என்பது கடோபநிஷத் வாக்கியம். புத்தி அதாவது ஞான சக்தியாகி ஆத்மாவின் சிறந்த ப்ரதிபலனமே, ஸாரதியாகிய கிருஷ்ணன் அதாவது மனிததேஹத்துள் ஆடும் பரம்ஜோதியாம் பரமாத்மா.

ஆகவே குருக்ஷேத்ர யுத்தமானது வெகுநாளைக்கு முன் நடந்ததல்ல; ஒவ்வொரு நாழிகையிலும் விடாது ஒவ்வொருவருள்ளும் நடந்து கொண்டிருப்பதே. இந்த யுத்தத்தில் மிகுந்த சிரத்தையுடன் எவ்வளவுக்கெவ்வளவு சீக்கிரமாக நாம் இறங்குகிறோமோ அவ்வளவுக்கவ்வளவு நமக்கு மேன்மை. அப்பொழுது தான் ஆத்மாவாகிய பகவான் நமக்கு ஞான சக்தி ரூபமாகத் தோன்றி நம்மை யாதொரு அபாயமும் இன்றி காத்து. முடிவில் பரமபதமாகி ஜயமும் அடையும்படி செய்வார்.

ஆதலால் ஒவ்வொருவரும் இந்த யுத்தத்தைவிடாது தைர்யமாகச் செய்ய வேண்டும். பகவான் எப்பொழுதும் கோபிகளாகிய பக்தர்கள் வசமாகவே இருக்கிறார். இந்த யுத்தம் செய்யுங்கால் வயிறுவளர்த்தல், பணம் சேர்த்தல், கீர்த்தி பெறுதல் முதலிய அற்ப நோக்கங்கள் ஒன்றும் இருக்கவே கூடாது. அடிமைத் தனத்திலிருந்து விடுபட்ட நீக்ரோ ஜாதியார் நடத்தையிலிருந்து நாம் உணரவேண்டிய முக்யவிஷயம் ஒன்று உண்டு. அவர்கள் விடுதலை அடைந்ததும் தம்மிடம் விரைப்பதற்காக் கொடுக்கப்பட்ட பூசனி விரைகளையும் நெற்களையும் மிகுந்த ஆவலுடன் தின்றுவிட்டனராம். மேல் அவர்களுள் தொழிலில்லாமல் போய்விட்ட தாம். கொஞ்சம்நிதானித்தால் அடுத்தவருஷம் ஏராளமாகவிளைவு கிடைக்கும் என்பதை அவர்கள் உணரவில்லை. தெரிந்தவர்களும் கூட நட்டுமுளைக்கும் வரையில் காத்திருக்கமுடியாமல் இவ்வாறு செய்துவிட்டனராம். இம்மாதிரியான தொழில்களையே நம்முள் பெறும்பாலரும் விடாது செய்துவருகிறோம். பரம்பொருளாயும், தெய்வமாயும், பரமபதமாயும் உள்ள ஆத்மஸுகத்தைக் கவனியாது அற்பமான சிற்றின்பவிஷயங்களையே பெரியவை என மதிக்கிறோம். நாம் சற்று நிதானித்து அஸுரஸம்பத்திற்கு இடங்கொடாது இந்த குருக்ஷேத்ர யுத்தத்தை தைர்யமாகச் செய்வோமாகில் முடிவில் ஜயம் நம்மதே. தமது ஆத்மாவாகிய கிருஷ்ணன் அருளால் ஆனந்தம், சாந்தி முதலியவை குடிகொண்டிரு ப்பதாயும், பேரானந்தமாயும் உள்ள ஸூக்ஷ்மமான ஸ்வராஜ்யம் ஸித்திப்பதற்கு என்ன ஸந்தேகம்?

**நளசரித்திரம்:-** நரன் என்ற நளன், பகுத்தறிவு மிகுந்த ஸாதுக்கள் என்கின்ற ஹம் ஸங்களின் மூலமாக மெய் அறிவு என்னும் தமயந்தியின் சிறப்பை உணர்ந்து அவளை அடைய மிக விருப்பமுற்றான். ஸ்வய நயம் கருதாமையாகிய தேவர்க ளுக்குத் தூது நடத்தல் என்கின்ற தேவதாராதனத்தாலுண்டாகிய கிருபையினாலே மெய்யறிவு என்னும் தமயந்தியை அடைந்தான். அப்யாஸம் இன்மை என்னும் அனாசார மையத்தில் சாஸ்திர ஆசார்ய உபதேசங்களில் அச்ரத்தை என்கிற கலிபுருஷன் பிரவேசிக்க அவன் கருவியாகி விபரீத பாவனை என்னும் புஷ்கரன் என்பவனால் நரனாகிய நளன் விஷயாஸக்தி என்கிற சூதாட்டத்தில் இழுக்கப்பட்ட

நாம ரூபங்களாலாகிய ஸம்ஸாரக் கஷ்டமாகிய காட்டில் அவன் அலைந்து திரியும்படி நேரிட்டது. அதில் அகப்பட்டுக்கொண்டு தத்தளிக்கையில் ஸுவாஸனை என்னும் வஸ்திரத்தை நளன் இழக்கும்படி நேர்ந்தது. இதனால் அவன் மெய்யறிவாகிய தமயந்தியை விட்டுப் பிரிய, ஒருவித ஆதாரமும் இன்றி அவன் தத்தளித்தான். அப்பொழுது காமக்ரோதம் என்னும் காட்டுத்தீயில் வருந்திக் கொண்டிருந்த தனது நற்பாகிருதி என்கிற கார்க்கோடகனை விடுவிக்க, அதனால் கடிக்கப்படுதல் என்ற பரித்யாகத்தினால் இவன் தன் உண்மை நிலையை மறத்தல் என்ற உரு மாற்றத்தை அடைந்தான். பின்னர் இவன் பூர்வநிலையின் சிறப்பால், எதனாலும் தாக்கப்படாததாகிய ஹிருதயம் என்னும் அயோத்தியில் பரிபக்குவ சித்தமாகிய * ருதுபர்ணன் ஸஹாயத்தை அடைந்தான். பின்னர் பூர்வகர்மபரிபாகம் என்னும் ஸுதேவப்ராஹமணனால் தூண்டபெற்று இந்திரியங்கள் என்ற குதிரைகளை நடத்தி, விஷயத்தை அடக்கும் ரஹஸ்யவழியாகிய பற்றின்மை என்னும் சூதாட்ட ரஹஸ்யத்தைக் கற்றுக்கொண்டான். உடனே அசிரத்தை என்னும் கலிபுருஷன் நீங்கினான். அப்பொழுது அம்ருதம் என்னும் தான் சமைக்கும் அன்னமூலமாக மெய்பறிவு என்னும் தமயந்தியை மறுபடியும் அடைந்து அசிரத்தையின் கருவியான விபரீதபாவனை என்னும் புஷ்கரனைவிஷயாஸக்தி என்னும் சூதாட்டத்தாலேயே ரஹஸ்ய மூலமாக வென்று, ஸ்வராஜ்யம் என்னும் நிஷதநாட்டில் அமர்ந்து நரனாகிய நளன் ஆனந்தித்தான்.

* ருதுக்கள் ஆறு; இங்கு இந்திரியங்கள் ஐந்து மனம் ஒன்று, ஆக ஆறு; 'பர்ண' (இலை) என்பது மாம்ஸம் தின்கிற என்று பொருள்படும் 'பலாச' என்பதற்கு ப்ரதிபதம். ஆகவே விஷயானுபவம் இல்லாதது என்று பொருள்படும். ஆதலால் ருதுபர்ணன் விஷயபாவமில்லாத ஆறு அதாவது பரிசுத்தம் என்பதாயிற்று.

**ஹரிச்சந்திரன் கதை:-** ஜீவாத்மா என்னும் ஹரிச்சந்திரன் பரவித்யா என்னும் சந்திரமதியோடும் ஸுகம் என்னும் லோஹிதாக்ஷனோடும் எதனாலும் தாக்கப்படாத் ஹ்ருதயம் என்னும் அயோத்தியில் வாழ்ந்து வந்தான். அப்பொழுது இவன் ஆத்மானாத்ம விவேகம் என்னும் ஸத்யம் தவறாது அதைக்காப்பாற்றி வந்தான். விஷயாஸக்தி என்னும் விசுவாமித்ரர் தமது பரிவாரங்களோடு வந்து தாக்கி, இவனை ஸம்ஸாரம் என்னும் காட்டில் அலையவிட்டு விவேகம் என்னும் ஸத்யம் தவறும்படி செய்ய முயன்றார். இதை ஸரிவரச் செய்து முடிக்கக் கோபம் என்னும் நக்ஷத்ரீகனைக்கூட அவர் அனுப்ப அவன் படுத்திய பாட்டால், ஜீவாத்மா வாகிய ஹரிச்சந்திரன், பரவித்ய, ஸுகம் என்னும் சந்திரமதி லோஹிதாக்ஷர்களை லோபம் என்னும் காளகண்டனுக்கு அடிமைப் படுத்தினான். மேலும் கோபம் என்னும் நக்ஷத்ரீகன் பலத்தால் விஷயாதீனமாதல் என்னும் தன்னைவிற்றல் என்பதையும் இவன் செய்ய வேண்டி வந்தது. மோஹம் என்னும் சண்டாளத்வத்தை அடைந்து ஜீவாத்மாவாகிய ஹரிச்சந்திரன் து:கம் என்னும் ஸ்மசானம் புகுந்தான். அப்பொழுது ஸுகம் என்னும் லோஹிதாக்ஷனை இழக்கும்படி நேரிட, பின்னர் பரவித்யை என்னும் சந்திரமதியையும் தானே அழிக்கும்படியும் வந்துவிட்டது. அந்த ஸமயத்திலும் ஜீவாத்மாவாகிய ஹரிச்சந்திரன் ஆத்மானாத்மாவாகிய ஸத்யத்தைத்

தவறவிடாதிருந்ததால் பரமாத்மா என்னும் பரமசிவம் முதலிய மூர்த்திகள் அருளால் துஃகம் என்னும் ஸ்மசானம் தெளிவென்னும் பரமபதமாக மாற, மோஹம் என்னும் சண்டாளத்வம் நீங்கிற்று. ஸுகம் என்னும் லோஹிதாக்ஷன் வந்து சேர்ந்தான். உடனே விஷயாஸக்தி என்னும் விசுவாமித்ரர் பலம் குறைய பரவித்யையாகிய சந்திரமதியும் மீட்கப்பட்டாள். பின்னர் ஜீவாத்மா என்னும் ஹரிச்சந்திரன் தன்னிலை என்னும் ராஜ்யம் அடைந்து ஆனந்தித்தான்.

---

# கதைகளின் அகராதி



| எண் | கதை | வினா |
|---|---|---|
| 1 | அலர்க்கர் கதை மனதை ஜயிக்கும் விதம் | 17 |
| 2 | அனுகீதை அல்லது ஆத்மமனஸ்ஸம்வாதம் | 11 - 25 |
| 3 | அஷ்டாவக்ரரும் வடக்குதிக்கு தேவதையும் விவாஹத்திற்கு உறுயோன் ஜிதேந்திரியனே | 21 |
| 4 | உத்தங்கர் கதை ஸ்த்விஷயத்திலும் பிடிவாதம் ஆகாது | 27, 28 |
| 5 | உபரிச்சரன் கதை பக்ஷபாதத்தால்' விழுந்து பக்தியால் தேறியது | 134, 135 |
| 6 | எலி, பூனை, ஆந்தை, கீரி இவைகளிடமிருந்து தப்பிய விதம் பலவிரோதிகளிடமிருந்து தப்பும் விதம் | 69 |
| 7 | ஒட்டகத்தின் கதை சேம்பேரியின் கதி | 56 |
| 8 | க்ருஷ்ணரும் தூர்வாஸரும் பொறுமையின் ஸ்வரூபம் | 57 |
| 9 | கபிலரும் ஓர் ஜெந்துவும் வேதரஹஸ்யம் | 114 |
| 10 | காற்றும் மரமும் விரோதி கோபத்தைத் தணிக்கும் விதம் | 75 |
| 11 | குண்டதாரன் கதை தர்மத்தின் சிறப்பு | 115 |
| 12 | கௌதமியும் அர்ச்சுனகனும் மரணத்தின் காரணம் | 3 |
| 13 | ச்யவனரும் குசிகரும் பொறுமையின் ஸ்வரூபம் | 36 |
| 14 | ச்யவனரும் செம்படவரும் பசுவும் பசுவின் சிறப்பு | 34, 35 |
| 15 | சிரகாரி கதை எண்ணித் துணிக கர்மம் | 112 |
| 16 | தர்மபுத்ரரும் கீரிப்பிள்ளையும் தானம் யக்ஞத்திற் சிறந்தது | 39 - 41 |
| 17 | தர்மபுத்ரர் துக்கவிஷய ஸம்வாதம் மனக்குழப்பம் | 11 |
| 18 | தர்மபுத்ரரும் நரகமும் நரகம் ஸ்வர்க்கமானது | 2 - 4 |
| 19 | தர்மபுத்ரரும் நாயும் அன்பின் ஸ்வரூபம் | 3 - 5 |
| 20 | துலாதாரனும் ஜாஜலியும் அஹிம்ஸையின் ஸ்வரூபம் | 106 -110 |
| 21 | ஜனகரும் ப்ராஹ்மணரும் முத்தர் மனமிருக்கு மோனத்தே | 19 |

